எருதுபசுவாமோ இளைத்தபுலியுமுண்டோ
உயரப்பறந்தாலும் ஊர்க்குருவிபருந்தாமோ
கொசுவும்பருந்தோடு கூடப்பறக்குமோதான்
விரலையுரலானு லுரலென்னகொள்ளுமையா
வெள்ளாட்டிடையனைத்தான் வெட்டித்தலைதள்ளாமல்
பாண்டியராஜர்களே பாராளவந்தீர்களே
உங்களைப்போல்ராசாக்க ளுலகத்தில்நானறியேன்
என்றுமிகக்கோபமுட னெழுந்தாளே அலலியம்மாள்
எழுந்திருந்து அல்லியம்மாள் எழிலானபாற்குடத்தை
இடதுகால்தன்னாலே யெட்டியுதைத்தாளே
ஆறுயிரம்பாற்குடத்தை யகங்கொண்டிடறிவிட்டாள்
ஆரடாமல்லர்களே யழையும்பிடாரனைத்தான்
ஓடியழையுமென்று ளொருநொடியில்வாருங்கள்
அங்கிருக்குமல்லரவ ரதிதுரிதமாகவோடி
பாம்புபிடாரர்களைப் பறந்தோடியழைத்துவந்தார்
வாழ்வரசியல்லியற்கு வந்துதெண்டம்பண்ணினார்கள்
எம்மையழைத்தவகை யேதுகருமமென்றார்
காட்டுக்குப்போய்நீங்கள் கன்னிபுத்துமருந்துவைத்து
கருநாகஞ்நெந்நாகம் கண்ணாடிவிரியனோடு
மண்ணுளிதாசரிவு மலையேறிவிரியனுந்தான்
ஊதுசுருட்டைப்பாம்பும் உரகமிருதலைமனியன்
நீக்கத்துகுட்டிநாகம் நீதியுள்ளபாம்புகளும்
வர்னவர்னப்பாம்புகளை வகைவகையாய்த்தான்பிடித்து
ஓட்டம்நடையாக ஒருநொடியில்வாருமென்றாள்
அவ்வார்த்தைதாண்கேட்டு அந்தபிடாரரெல்லாம்
ஓட்டம்நடையாக வோடிவந்தரர்பிடாரரெல்லாம்
காட்டுக்குப்போனார்கள் கன்னிபுத்துமருந்துவைத்தார்
வண்ணவண்ணபாம்புகளை வரிசையுடன்தான்பிடித்தார்
பெட்டிநிரம்பவே பிடித்தார்கள்பிடாரரெல்லாம்
காடுசெடிதாண்டி கடுகியேடோடிவந்தார்
அல்லியரசாணி யாரணங்குமுன்புவந்தார்
பாம்புகளைமுன்னேவைத்துப் பணிந்தார்பிடாரர்களும்
அல்லிப்பெருமாளு மாரணங்குமேதுரைப்பாள்
பாற்குடங்கள்தன்னிலேதான் பாம்பையடையுமென்றாள்

ஆயிரங்குடத்தி லடையுமென்ருளல்லியரும்
பஞ்சவர்னர்சிலைகட்டி பைங்கிளியின்முன்னேவைத்தார்
அல்லிப்பெருமாளு மாரணங்குமேதுரைப்பாள்
அம்பட்டரைத்தேடி யழையுமென்ருளல்லியரும்
ஓடியழைத்தல்லவோ ஒட்டம்நடையாகவந்தார்
ஆருயிரந்தூதுவரை யழகுமொட்டைசெய்யுமென்ருள்
தாடிசிரைத்தவரை தலைபோடிபண்ணுமென்ருள்
மீசைசிரையுமென்ருர் முன்போடிபண்ணுமென்ருள்
கரும்புள்ளிசெம்புள்ளி கலந்தழகாய்க்குத்துமென்ருள்
அல்லியம்மாள்சொற்படிக்கு யழகுமொட்டையிட்டாரே
முன்மீசைதான்சிரைத்து முகத்தினிலேபொட்டுமிட்டார்
ஆரடா தூதுவரே அன்பானவார்த்தைகேளும்
நீன்முகராஜனுக்கு நீங்கள்போய்சொல்லுங்கடா
பாண்டியராஜனுக்கு பக்ஷமுள்ள அல்லியம்மாள்
இந்தவரிசைகளை அனுப்பினளென்றுசொல்லும்
உன்தொண்டைக்குதூண்டிமுள் தொப்புளுக்குவீராணி
அவன்-மண்டைக்குக்கோடாலி மார்புக்குசெப்புலக்கை
கழுத்தடியிற்கத்தியவள் காமாட்சியம்மையென்று
ஊட்டியறுக்கவந்த வுண்மைப்பரஞ்சோதி
தலைமாட்டிற்பாம்பல்லவோ தாயந்தஅல்லியென்று
சொல்லுங்கள்தூதுவரே துரைராசநீன்முகற்கு
வெள்ளாட்டிபையனுக்கு விந்தையைசெப்புமென்ருள்
ஆயிரம்தூதுவர்க ளக்குடமெடுத்துக்கொண்டார்
வருகிருர்மதுரையது தென்மதுரைவருகிருர்கள்
தேனுமதுரையது தென்மதுரைவருகிருர்கள்
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
மகாராஜன்கொலுதனிலே வந்தார்கள்தூதுவர்கள்
அப்போது நீன்முகனும் மப்பிங்களமாடுகைக்கு
சனியெண்ணைமண்டபந் தானமர்ந்தான்வாழ்மார்பன்
எண்ணையிட்டுக்கொண்டே யிருக்கிறவேளைதனில்
பாற்குடத்தைமுன்னலே பார்மீதிறக்கிவைத்தார்
வரிசைவரிசையாக வைத்தார்கள்பாற்குடத்தை
வந்திருக்கும்தூதரெல்லாம் வரிசையாய்நின்ருர்கள்
இது-என்னவதியங்க ளெவர்செய்தவண்மையிது

எட்டிப்பழம்போலே யிருகண்ணுந்தான்சிவந்து
கோவைப்பழம்போலே கூர்விழிகண்சிவந்தான்
இப்படிச்செய்தவரை யெனக்கறியச்சொல்லுமென்றான்
பால்வார்த்தனுப்பாமற் பாம்பையடைத்ததென்ன
ஆரடாதூதுவரேயறியவுரையுமென்றான்

நீன்முகனுக்குத் தூதர்கள் சேதிசொல்லுதல்

அவ்வார்த்தைகேட்டவர்க ளஞ்சியுரைக்கலுற்றார்
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
ஆருயிரம்பாண்டியர்க்கே யரியவொருமகளாம்
அல்லியிலேமேலே ஆரணங்குபெண்பிறந்தாள்
ஏழுபிராயமுண்டு இளங்கொடியாள்மாதுகன்னி
பாண்டியராஜரைநாம் பகுதிபோய்கேட்டவுடன்
பகுதியுங்கட்டினார்கள் பாற்குடங்கள்தானிறைத்தார்
எங்களுக்குஞ்சாப்பாடு இன்பமுடனேசமைத்தார்
அவ்வேளைதனி லானந்தவாழ்மாரி
பள்ளிக்கூடப்படித்துப் பாலமுதுண்ணவந்தாள்
எங்களைக்கண்டவுட னிவர்களாரென்றுகேட்டாள் [ள்
பாற்குடங்களேதுவையா பாண்டியரேசொல்லுமென்று
அவ்வளவிற்பாண்டியர்க ளஞ்சிப்பயந்துரைப்பார்
உமக்கு-பட்டந்தரித்துவைத்து பாரதவம்போனதுவும்
அல்லியரைப்பெற்றதொரு அதிசயத்தைசொன்னார்கள்
அதுகேட்டுமல்லியவள் அதிகமானகோபமதாய்
வெள்ளாட்டிபையனுக்கு வீரியங்களுண்டாச்சோ
ஆயிரங்குடத்தை யரைநொடியிலிடறிவிட்டாள்
பாம்பைபிடித்துவந்து பாற்குடத்திலேயடைத்தாள்
வாருமென்றப்பட்டரை வழுங்மொட்டையடியென்றாள்
தலைபோடிபண்ணினார்கள் தனிபொட்டுமிட்டார்கள்
கரும்புள்ளிசெம்புள்ளி கலந்தழகாய்பொட்டுமிட்டார்
உன்-தொண்டைக்குதூண்டிமுள் தொப்புளுக்குவீராணி
மண்டைக்குகோடாலி மார்புக்குச்செப்புலக்கை
கழுத்தடியிற்கத்தியவள் காமாட்சியம்மனென்றாள்
ஒட்டியறுக்கவந்த உண்மைபரஞ்சோதியென்றாள்
உந்தனுக்குசொல்லுமென்று உத்தமியனுப்பிவைத்தாள்
தருமதுரைமகராசி தப்பிவிட்டாரெங்களைத்தான்

பிழைத்துவந்தசெங்கள் பெரியோர்செய்தபுண்ணியத்தா
என்றுசொல்லக்கேட்டு எழுந்தானே நீன்முகனும் [ல்

நீன்முகன் அல்லியின்பேரிற் படையெடுத்தது.

ஆரடா தூதுவரே அழையுங்கள்மந்திரியை
இன்றுவெளிக்கூடார மியலுடனேபோடுமென்றான்
பாளையத்தையெல்லாம் பயணமிட்டுவாருமென்றான்
சண்டைக்குகொடிபோட்டு சண்டைமுரசடியுமென்றான்
தேரையலங்கரித்துச் சீக்கிரமாய்வாருமென்றான்
ஆறுயிரமந்திரிக ளல்லவரும்பயணமென்றான்
காலாள்பரிசேனை கடுகியேபயணமென்றான்
ஆறுயிரப்பாண்டியரை அதம்பண்ணிப்போட்டுவிட்டு
அல்லியெனும்பெண்ணரசை யரைநொடியிற்பிடித்துவந்
தலைபோடிபண்ணியே தம்பலஞ்சுமக்கவைப்பேன் [து
எண்ணையிட்டவென்றலைக்கே யியல்பாயரைக்கிடுவேன்
அப்போதுஸ்நானமா யாடுவேனபிஷேகம்
என்றுவெழுந்தானே யியல்புள்ள நீன்முகனும்
கட்டினதுகச்சுமல்ல கைதனிலேவில்லுமல்ல
முகத்தாலேமீசையல்ல முன்கட்டுச்சீலையல்ல
தலையிலேபாகையல்ல தரித்தது ஆடையல்ல
என்றவனும்மார்பைதட்டி எழுந்தானே நீன்முகனும்
முத்தினுருமாலை முகமழகாய்த்தான்சுழட்டி
அம்புறாத்தூணிமுது கணிந்தம்புவில்லெடுத்தான்
காங்குகச்சைதானணிந்தான் கத்திவாள்தோளிலிட்டான்
தேரைச்சுற்றிநமஸ்கரித்துத் தேரின்மேலேறினனே
ஏறினதேர்மேலே எடுத்தார்நெடுங்குடைகள்
கானலுக்கெடுத்தார் கருப்புநல்லகூடாரம்
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
பனிகளுக்கெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
கருப்புநிசான்சிகப்புநிசான் கலந்துபறக்கிறது
அடிபடும்ரணமுரசு அனைவருக்குங்கிடுகிடென்ன
கோடைகாலத்திடிபோலே குமுறுதேபரிகைகள்
வெண்கலபேரிகைகள் விருதுமுழக்கமிட
அமரதருஞ்சமரதரும் அர்த்தரதர்வருகின்றார்கள்
கலிங்கர்தெலுங்கருடன் கன்னடியர்வருகிறார்கள்
துலுக்கர்மலுக்கருடன் சோனகரும்வருகிறார்கள்

வன்னியரும்சன்னியரும் மராட்டியரும்வருகிருர்கள்
வருகிறசனங்களாலே மட்டுமிதங்களில்லை
கொக்குவெளுத்ததுபோற் குடமல்லிபூத்ததுபோல்
வானங்கவிழ்ந்ததுபோல் மல்லிகைபூத்ததுபோல்
நீன்முகன்சேனையெல்லாம் நெருங்கிவருகிறது
செந்தூளெம்புகுது தெருவெல்லாம்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைகப்புகுது
கோட்டைகடந்தார்கள் கொப்பெனவேவருகிருர்கள்
அப்போதுபாண்டியர்க ளறிந்தார்கள்சேதிதனை
நீன்முகன்வருஞ்சேதி நிமிஷத்திற்ருனறிந்தார்
ஐயோமகளேயென்று அலறலுற்ருர்பாண்டியர்கள்
தவசுசெய்துபெற்ருேமே தவங்குலையநாளாச்சே
பாரதவம்நாங்கள்செய்து பாலகியைப்பெற்ருேமே
நீன்முகன்கையாலே நீமடியநாளாச்சே
வருகிருன் நீன்முகனும் மட்டில்லாசேனையுடன்
என்னசெய்வோம்மகளே யென்றுவிழுந்தேயழுதார்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குதான்கேட்டு
அஞ்சாதீரையாமாரே அவனைப்பலிகொண்டிடுவேன்
மாண்டுமடிவேனென்று மனதில் நீங்கள் நினையாதீர்
செத்துமடிவேனென்று சிந்தைதனில்வையாதே
அரைநாழிகைக்குள்ளேயவ னுங்காரம்நானழிப்பேன்
என்சமர்த்தைபாருமென் றெழுந்தாளேஅல்லியம்மாள்

அல்லியம்மாள் சொக்கரையும் அம்மனையுந்
தொழுது வரம்பெற்றது.

அல்லிக்குளமுழுகி யலர்தாமரையெடுத்து
சொல்லாது ஆலயத்தில் சுந்தரியும்போய்ப்புகுந்தாள்
கொண்டுவந்தபூமலரைக் கொம்பனையும்பூசைசெய்தாள்
ஒருவர்-வயிற்றிற்பிறவாமல் வன்கொடுமைசெய்யாமல்
குடலிற்பிறவாமல் குலக்கொடுமைசெய்யாமல்
அல்லியிலேமேலென்னை ஆச்சியரேபிறப்பித்தாய்
பொற்ருமரையிலேதான் பிறப்பித்தாயீஸ்வரியே [டும்
நீன்முகனைக்கொல்லவேண்டும் நீலிபட்டங்கட்டவேண்
மாற்ருனைகொல்லவே ணும் வையகத்தையாளவே ணும்
வாழ்த்தியேதேர்கொடம்மா மந்திரவாள்கைகொடம்மா

என்றுவணங்கியே இறங்கிநமஸ்கரித்தாள்
மாணிக்கச்சொக்கரவர் மனதுமிகக்குளிர்ந்து
அகிலாண்டநாயகியா ளங்கையற்கண்மனமகிழ்ந்து
மதுரைமீனுட்சியுந்தான் மங்கைமனமிரங்கி
மச்சுரதங்கொடுத்தாள் மந்திரவாள்கைகொடுத்தாள்
திவிச்சுக்கைகொடுத்து திருநீறுமள்ளியிட்டாள்
வண்ணலட்சந்தூதர்களை மகாதேவர்தான்விடுத்தார்
அல்லியற்குத்துணையாக அனேகம்பேர்வந்துவிட்டார்

அல்லியம்மாள் நீன்முகனைச் சங்கரித்தது.

காலாளுஞ்சேனைகளுங் கடுகியேபயணமாச்சு
தேரைச்சுற்றிதெண்டனிட்டு தேரின்மீதேரினளே
அம்புவில்லுங்கைபிடித்து ஆயுதமுந்தோளில்வைத்து
மந்திரவாள்கைபிடித்து மச்சுரதந்திருப்பிவிட்டாள்
தேவதுந்துமிமுழங்க தேன்மொழியாள்வருகிருளே
சித்திரத்தேரும் செருக்களத்தேவருகிறதே
வந்துவளைத்தாளே வில்லிடிபோலல்லியரும்
வில்வளைத்துநாணிபூட்டிவில்லைகுணத்தொனிகள்செய்
மாரிசரம்பொழிந்தாள் மகாசேனைபுள்ளவர்மேல் [தார்
தொட்டாளேவில்லதனை சொரிந்துவிட்டாள்பாணமது
விட்டாள்சரபாணம் மேனியல்லாந்தான்மறைய
யானைசேனைபரிவாரம் அடங்கலுங்கொல்லலுற்றுள்
யானைத்தலைகளெல்லா மபயமிட்டுக்கீழ்விழவே
ஒட்டகத்தலைகளெல்லா மோலமிட்டுக்கீழ்விழவே
குதிரைத்தலையெல்லாங் கொக்கரித்துக்கீழ்விழவே
ஆனைமேலிருந்தவர்க ளபயமிட்டுக்கீழ்விழவே
ஒட்டகத்தின்மீதிருந்தோ ரோலமிட்டுக்கீழ்விழுந்தார்
குதிரைமேலிருந்தவர்கள் கொக்கரித்துமண்ணைக்கவ்வி
தென்னங்காய்போலாகச் சேனைதலையுருளவிட்டாள்
பனங்காய்கள்போலாகப் பார்தனிலேதலையுருள [ள்
செண்டுசெண்டாவேணதலை செருக்களத்தூருளவிட்டா
அறுத்ததலைகளெல்லாம் அம்மானைராடுசூது
ஆலைவாய்க்கருப்பதுபோ லரைத்துரசம்பிழிந்தாள்
கரும்புக்கரணைபோலே கண்டித்தாள்வேணதலை
மதப்பட்டயானைகள்தான் மடுவைக்கலக்கினுற்போல்
குட்டிமதயானைகளுங் குளங்கலக்கிவிட்டதுபோல்

கிண்ணியிலேசந்தனத்தைக் கூட்டிவழித்ததுபோல்
நீன்முகன்சேனையெல்லாம் நிர்த்தூளிபண்ணலுற்றாள்
பிடாரியம்மனகோயிலுக்கு பலிகொடுக்கும்பாவனைபோல்
அம்மையார்கோயிலுக்கு ஆடுவெட்டும்பாவனைபோல்
அரைநாழிக்குள்ளே அதம்பண்ணிறு பாளையத்தை
சண்டைபண்ணமாட்டாமற் றளர்ந்தோடிப்போனார்கள்
பண்டாரமென்பாரும் பரதேசியென்பாரும்
நாமத்தைக்காண்பித்து நான்தாதனென்பாரும்
பூநூலைக்காண்பித்து பிராமணனென்பாரும்
சமர்க்குவரவில்லையென்று சலாம்செய்துஓடுவாரும்[கள்
தண்ணீர்தண்ணீரென்றுசொல்லி தவிக்குமாம்பாளையங்
வடுகரெல்லா நீளென்பார் வன்றமிழர்தண்ணீரென்பார்
துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லிப்புலம்புகிறார்
இவ்விதமாய்பாளையத்தை இறக்கடித்தாளல்லியம்மாள்
நீன்முகராஜனண்டை நேரிழையும்வந்தெதிர்த்தாள்
ஆரடா நீன்முகனே யறிவுகெட்டபாதகனே
வெள்ளாட்டிப்பையலே வீரியமுனக்கேண்டா
தம்பலவட்டிலேந்துந் தாதிபெற்றமகனே நீ
மதுரப்புளியாமா வைகாசிதையாமா
எருதுபசுவாமா எதிர்த்துவந்தாயாண்பிள்ளையாய்
உன்னைக்குடுப்பேனே உனக்குமொருசேவகமோ
கொசுவும்பருந்தாமோ கூடப்பறக்குமோடா
உயரப்பறந்தாலும் ஊர்க்குருவிபருந்தாமோ
அணிப்பிள்ளையசக்கினல் நரிக்குட்டிகீழ்விழுமோ
ஒதிபெருத்தாற்றூணுமா ஒட்டாங்கச்சிமுலையாமா
கொல்லவென்றேபூவுலகில்அல்லியிலேபெண்பிறந்தேன்
பொற்றுமறையிலே பிறப்பித்தாளீஸ்வரியாள்
உன்தொண்டைக்குதூண்டிமுள் தொப்புளுக்குவீராணி
மண்டைக்குக்கோடாலி மார்புக்குச்செப்புலக்கை
கழுத்தையறுக்கவந்த காமாட்சியம்மனடா
உன்குலதெய்வமடா ஓங்கார அல்லியம்மாள்
அறியாமற்போனாயடா அறிவுகெட்டநாய்தலையா
அரைநாழிகொள்ளையில் அந்தகனூர்சேர்க்கிறேன்பார்
கால்நாழிக்கொள்ளையிலே கைலாயம்சேர்க்குறேன்பார்
உண்டவுப்புமாண்டதோ ஊற்றுப்பாழாச்சுதோ

தின்றவுப்புமாண்டதோ தெருவுபாழாச்சுதோ
காலனுயரவந்து கைகட்டியழைத்தானே
இயமனுருயரவந்து இங்கேவாவென்றுரோ
ஆகையினலேயடா அமருக்குவந்துவிட்டாய்
என்சமர்த்துசேவகமு மிப்போதறிவாய்பார்
தேரைத்துரத்திவிட்டாள் செங்கையில்வில்லெடுத்தாள்
கேட்டந்தநீன்முகனும் கெர்வமதிகமுமாய்
நெற்றிக்கண்ணீஸ்வரனுர் நிமிர்ந்துவிழிபார்த்ததுபோல்
வலதுபக்கமீசையது வல்லயம்போலேதுடிக்க
இடதுபக்கமீசையது ஈட்டிபோலேதுடிக்க
மீசைதுடிக்கிறதும் முன்கோபமாகிறதும்
சாணுண்டுபெண்ணே நீ சமர்த்தாகப்பேசுகிருய்
சவுரியத்தைநானழிப்பேன் தம்பலங்களேந்தவைப்பேன்
வல்லமையைப்பாரென்று வளைத்தானேவில்லதனை
இவ்விருவர்தேரு மிருநிலத்திற்ருன்சுழல
மாணிக்கச்சொக்கரையு மனதில்நினைத்தாளே
அங்கையற்கண்ணுயகியை ஆதிபரமேஸ்வரியை
மனதில்நினைத்தல்லவோ வாங்கிவிட்டாள்பாணமதை
பாவியந்தநீன்முகனும் பதறிச்சரம்பொழிந்தான்
விட்டான்சரபாணம் மெல்லிநல்லாள்மேனியிலே
கோடானகோடிபாணம் குறித்தானே நீன்முகனும்
அல்லிப்பெருமாளும் அதிகமானகோபமுடன்
ஒன்றுக்குப்பத்துகணை யொருநூற்றுக்காயிரமாம்
சரமேற்சரம்பொழிந்தாள் வருணனது அஸ்திரங்கள்
திவ்வியநல்லஅஸ்திரங்கள் தீர்க்கமுள்ளஅஸ்திரங்கள்
சண்முகனஸ்திரமாஞ் சந்திரனஸ்திரமாம்
பானுவினஸ்திரமாம் பார்வதியஸ்திரமாம்
வக்ரதந்தனஸ்திரமாம் வருணனுடஅஸ்திரமாம்
இடிபகவானஸ்திரமாம் இந்திரனஸ்திரமாம்
ராமச்சந்திரஅஸ்திரமாம் நவச்சந்திரஅஸ்திரமாம்
பிரமனுடஅஸ்திரமாம் பெருமாளினஸ்திரமாம்
கார்த்திகைமாதத்தில் கனத்தமழைபெய்ததுபோல்
ஐப்பசிமாதத்தில் அடர்ந்தமழைபெய்ததுபோல்
சோனைமழைபோலே சொரிகிருள் பாணங்களை
விட்டதொருபாணமது மட்டுமிதங்களில்லை

நான்குநாள்மட்டும் நல்லசண்டைபண்ணலுற்றூர்
விற்பிடித்தகைகளது மெத்தசிவப்பேறிற்று
அம்பிழுத்தகைகளானு லல்லிப்பூவர்னமாச்சு
நெல்லிப்பழம்போலே நெருங்கிடுங்கொப்பளங்கள்
இவ்விதமாக இருவர்சண்டைபண்ணிஞர்கள்
அப்போது அல்லியம்மாள் அம்மனையேதோத்தரித்து
இடியாஸ்திரமதனை யெடுத்துமந்த்ரதூபமிட்டு
மார்பளவுவாங்கியேதான் தோள்பிளக்கவேதொடுத்தாள்
வாய்களில்நெருப்பெறிய வந்துவிழுந்ததுவே
தேருமுடைந்ததுவே செம்புறவிசெத்ததுவே
போட்டசட்டைவச்சரகபாய் பொடியாகத்தானழிந்து
சட்டைதமானவச்சரகபாய் தவிடுபொடியாச்சுது
சல்லடைக்கண்போலே சரீரங்கள்தொளையாக்கி
பதாதியாய்நின்ருனே பராக்கிரம நீன்முகனும்
எடுத்தான்வளைதடியை எற்றிஞன்கேடயத்தை
கண்டாளே அல்லியம்மாள் கண்சிவந்துகோமுடன்
கேடயமும்வாளெடுத்துக் கெர்ச்சித்துகீழ்குதித்தாள் [ள்
எலியைக்கண்டபூனையைப்போளெழும்பினளல்லியம்மா
பசுவைக்கண்டபுலியதுபோற் பாய்ந்தானே நீன்முகனும்
யானைகண்டசிங்கம்போ லல்லியெழுந்தாளே
கொக்கைகண்டராஜாளிபோற் குதிக்கிருன் நீன்முகனும்
மானைக்கண்டசிவிங்கையைப்போல் வருகிருளல்லியம்மா
உன்னைவிடுவேனென்று உன்மனதிலெண்ணுதே [ள்
நீன்முகாவுன்றலையை நிமிஷத்தில்வாங்குவேன்பார்
இடசாரிவலசாரி இருவர்களுஞ்சுழலுகிருர்
சக்கரஞ்சுழல்வதுபோற் சமர்த்தாகச்சுற்றுகிருர்
வண்டுதும்பிபோலாக வட்டமிட்டகருடனைப்போல்
முன்வந்துபாய்ந்தலவோ முதுகின்மேல்வெட்டுவாளாம்
தட்டிஉதறிநிற்பான் தாக்குவானல்லியரை
எமனும்எமன்போல இந்திரனுமிந்திரன்போல்
மலையும்மலையோடு வந்தெதிர்த்தபாவனைபோல்
புலியும்புலியுடனே பதுங்கியெதிர்த்ததுபோல்
நால்நாழிகைமட்டும் நல்லசண்டைபண்ணிஞர்கள்
பொற்ருமரைதனிலே பிறந்தெடுத்த அல்லியரும் [து
ஆலவாய்ச்சொக்கரென்னும் ஆண்டவரைத்தானினைத்

மதுரைமிருட்சியை மனதிலேதானினைத்து
முன்கந்துபின்கந்து முப்பத்திரண்டுகந்தும்
பக்கவளமாகவந்து பார்சலுடனேயெழும்பி
வீசினாள்வாளாலே வேறிரண்டுதுண்டாக
கருப்பங்கருனையைப்போற் கண்டித்துகீழ்வீழ்த்தி
ஏறினாள்தேர்மேலெடுத்தாள்நெடுங்குடையை [ள்
நீன்முகன்விழுந்தானென்று நீள்சங்குதான்தொனித்தா
தேரைதிருப்பிவந்தாள் தேன்மொழியாளல்லியம்மாள்
நீன்முகன்மார்மீதில் நீறரதமோட்டினாளே
செயங்கள் செயங்களென்று செயபேரிபோட்டுவந்தாள்

அல்லியம்மாள் மதுரைக்குவந்து பட்டங்
கட்டிக் கொண்டது.

எழுபதுசேனாதிபதி எல்லாருமோடிவந்தார்
தப்பிப்பிழைத்தவர்கள் சகலசெனங்களெல்லாம்
அல்லிப்பெருமாளுக்கு அடிபணிந்துதெண்டனிட்டார்
அடைக்கலமாச்சியென்று அடிபணிந்துதெண்டனிட்டா
தேவதுந்துமிமுழங்க தேவர்பூமாரிபெய்ய [ர்
ஆறாயிரவனென்னு மையன்மார்தாமறிந்தார்
சந்தோஷப்பட்டங்கு தார்வேந்தரோடிவந்தார்
மகள்தனைப்பார்த்தலவோ மகிழ்ந்தார்கள்பாண்டியர்கள்
மதுரைத்தெருவனைத்தும் மாவிலையாசியால்
தோரணங்கட்டுமென்றாள் மதுரைமகளல்லியரும்
அரைநாழிக்குள்ளே அலங்கரித்தார்பட்டணத்தை
எங்குமலங்கரித்து எத்திசையும்நீர்தெளித்து
வாழைக்கமுகுமரம் வாசலெல்லாம்நட்டார்கள்
சேனைகள்சூழ்ந்துவர செயபேரியடித்துவர
மேளங்களார்ப்பரிக்க மொய்குழலும்வருகிறாளே
மதுரைத்தெருவைச்சுற்றி மாளிகையில்வந்தமர்ந்தாள்
சிங்காதனத்தின்மீ தேறினாள்தேன்மொழியாள்
ஆறாயிரப்பாண்டியரா மையமாரானவர்கள்
பட்டந்தரித்தார்கள் பத்தினியாளல்லியற்கு
சிமைத்துரைத்தனமுஞ் செங்கோலுந்தந்தார்கள்
பொம்மைவிருதுகட்டிப் பூதத்தலைகட்டிவைத்து
அல்லிக்கொடிகட்டி யரசுநிலையாளுகிறாள்
மதுரையப்பத்தாறுகாதம் யாதுமையாளாளுகிறாள்

ஆண்பட்டங்கட்டியே அல்லியரசாளுகிருள்
பெண்பட்டங்கட்டியே பூமியரசாளுகிருள்
இந்தவிதமாக எல்லையரசாண்டிருந்தாள்
இப்படியாகவேதான் இருந்தரசு ஆளுகையில்
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமப்போது
இந்திரபுரிபட்டணத்தில் வந்துசிலதிருடர்
பசுதிருடிப்போனசெய்தி பார்த்திபன்தானறிந்து
அம்புவில்லுந்தானெடுக்க அரண்மனையிற்போய் நுழைந்து
எழாம்நிலையின்மேல் இன்பமாயேறினனும்
தருமருந்துரோபதையுஞ் சருவிவிளையாடையிலே
குங்குமப்பூமேடையிலே கூடியுறவாடினர்கள்
கலந்திருந்தவண்மைதனைக் கண்ணாலேகண்டுவிட்டான்
முன்னிட்டகாலையவன் பின்னிட்டுவாங்கினனே
மந்தாரக்குந்தியரை மாதாவைத்தேடிவந்தான்
ஆச்சியர்தன்பாத மடிவணங்கித்தெண்டனிட்டான்
வாழ்த்திவிடைகொடுத்து வர்ணித்தாள்குந்தியம்மாள்
ஆச்சியரேயென்தாயே அடியேனொருவார்த்தை
அண்ணனுந்தேவியரு மன்பாகமெத்தையின்மேல்
கலந்துவிளையாடுவதைக் கண்ணாலேகண்டேனம்மா
சருவிமையலாகையிலே சடுதியில்யான்கண்டுவிட்டேன்
பார்த்தபடியினலே பாவம்வந்துநேர்ந்ததம்மா
ஆகாதபாவத்துக்கு ஆளானேனச்சியரே
பொல்லாதபாவம்வந்து போதப்பலித்ததம்மா
இப்பாவந்தீர்வதற்கு எத்தலங்களும்பார்த்து
கோதாவரியமுனை குமரிசரஸ்வதியும்
கங்கைநருமதை காவேரிதுங்கபத்ரி
காசிஸ்நானஞ்செய்யவேண்டுங் கனபாவந்தீரவேண்டும்
பாராதஸ்தலங்களெல்லாம் பார்த்துவருகிறேன்யான்
சிவஸ்தலம்விஷ்ணுஸ்தலந் தரிசனம்செய்வேன்யான்
கால்கொண்டதூரமெல்லாங் கண்டுவருவேன்யான்
போகவேண்டுமென்று பொன்னடியைத்தெண்டனிட
அவ்வார்த்தைதான்கேட்டு அழுதுபுலம்பலுற்ருள்
உன்னையான்பாராம லொருநிமிஷம்நிற்கமாட்டேன்
பாராதிருப்பதற்குப் பாவிமனம்வருமோ
செத்துமடிந்து செலவழிந்துபோவேனென்ருள்

அழுதுபுலம்பலுற்றாள் ஆரணங்குந்தியம்மாள்
அழுதகுரல்கேட்டு அத்தருமராயர்வந்தார்
சந்தனவடிவழகன் தருமராயர்வந்துவிட்டார்
ஏதுக்கழுவதுதானென்றுயே சொல்லுமென்றார் [தாள்
அருச்சுனன்சொன்னதெல்லா மாச்சியருந்தாமுரைத்
மாதாமொழிகேட்டு மறலிமைந்தன்மனம்நொந்து
சொற்பேச்சுகேளானோ சுந்தரப்பூமுடியான்
எனவார்த்தைகேட்கானோ இளவிஜயராஜனென்று
யாரைநினைத்தானோ அளவற்றசிந்தையிலே
எவரைநினைத்தானோ இன்பமுள்ளசிந்தையிலே
எம்பெருமாள்மேகவண்ணா ஏழுலகளந்தவரே
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்றார்
இவ்வேளையிச்சமயம் இங்கேவாசுவாமியென்றார்
தருமர்நினைத்ததனைச் சுவாமியதுவறிந்தார்
ஏழையழுதகண்ணீர் வாளாகத்தைத்ததுவே
தருமர்நினைத்ததுதான் தப்பாமற்றுமறிந்து
வட்டமாங்கருடனேறி வந்துவிட்டாரெம்பெருமாள்
சிவந்தகருடனேறி ஸ்ரீராமர்வந்துவிட்டார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுசுனைகடந்து யதிகவனந்தான்கடந்து
சந்தனவடிவழகன் தருமரண்டைவந்துவிட்டார்
வாகனம்விட்டிறங்கி வந்துசரணமிட்டார்
என்னையழைத்ததுதா னேதுகருமமென்றார்
சிங்காதனம்போட்டுச் சீராயிருமென்றார்
இட்டசிங்காதனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
சந்தனவடிவழகர் தருமராயரேதுரைப்பார்
ஆனலழகுமன்னன் அர்ச்சுனராஜனவன்
தீர்த்தயாத்திரைபோகச் சிந்தையில்நினைத்தானே
காசியாத்திரைபோகக் கருத்தில்நினைத்தானே
யார்சொல்லுங்கேளான் அருச்சுனன்போகலுற்றான்
தனியேஅனுப்புதற்குச் சற்றுமனந்தோன்றவில்லை
அருச்சுனற்குத்துணையாக அரிராமாபோய்வாரும்
கூடத்துணைபோங்கள் கோபாலசுவாமியே நீர்
கும்பிடுந்தெய்வமே நீர் குழைத்திடும்நாமமே நீர்
உன்னையேநம்பியா னுயிர்கொண்டுலாவுகிறேன்

ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உம்மையல்லால்வேறு துணையுண்டோயிம்மானிலத்தில்
அருச்சுனனுற்பின்சென் றழைத்துவந்துசேருமையா
போய்வாருஞ்சுவாமியென்றார் புகழ்வேந்தர் தர்மலிங்கம்
மாதாவாங்குந்தியம்மாள் வாழ்த்தியேசெலவுதந்தாள்
மாயனருச்சுனனும் வணங்கியெழுந்திருந்தார்

## மாயவரும் அருச்சுனனுந் தீர்த்தயாத்திரை போகிறது

காஷாயந்தானுடுத்தி கடுகிவேஷங்கொண்டார்கள்
சன்யாசிவேஷங்கொண்டு தவமுனிபோல்வடிவெடுத்தார்
அம்புவில்லுங்கைபிடித்து அரியமுனிபோல்நடந்தார்
தருமர்புரம்வீமாபுரம் தரணிபுரங்கடந்தார்
இந்திரவனங்கடந்து இனியவனம்போகலுற்றார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
காசிநதிபோய்முழுகிக் கனதீர்த்தமாடினார்கள்
விஸ்வநாதசுவாமியைத்தான் வேண்டிதரிசித்தார்கள்
துங்கபத்ரிகோதாவரி தொலைதீர்த்தமாடினார்கள்
நருமதைசரஸ்வதியில் ஸ்நானமுஞ்செய்தார்கள்
மல்லிகார்சுனைவந்து மயேஸ்வரனைபூசைசெய்து
திருப்பதியேவந்தார்கள் தெரிசமேசெய்தார்கள்
கண்ணப்பன்காட்சிதந்த காளத்திவந்தார்கள்
காளத்திநாதரையுங் கானம்மலைத்தரிசித்தார்
திருப்பாலைவனந்தனிலே சீருடனேவந்தார்கள்
பாலீசர்நாதரை பணிந்துதெண்டஞ்செய்தார்கள்
வான்மீகரர்ச்சித்த மருந்தீசரைப்பூசைசெய்தார்
திருவெற்றியூரில்வந்து தியாகரைபூசைசெய்தார்
கழுக்கள்வலம்வந்து கடைநயினார்பூசித்த
திருக்கழுக்குன்றபதி தேடியேவந்தார்கள்
தேவகிரிலிங்கத்தை வேண்டிச்சரணமிட்டார்
வண்ணாப்பெண்ணுக்காய்மணப்போனாரென்றுசொல்லி
அண்ணாமலையாரை யாணழகர்தேடிவந்தார்
அருணகிரிநாதரைத்தானடிபணிந்துதெண்டனிட்டார்
புத்திடங்கொண்டதொரு பொன்திருவாரூர்போனார்

தியாகரைத்தெரிசித்துத் திரும்பினாரிருவருமாய்
சிதம்பரந்தன்னிலேதான் சபாபதியைத்தரிசித்தார்
மாயவரம்கும்பகோணம் வந்துதரிசித்தார்
ஸ்ரீரங்கம்வந்தல்லவோ ஸ்ரீரங்கரைபூசைசெய்தார்
ஜம்புகேஸ்வரத்திலேதானே ஜம்புலிங்கந்தரிசித்தார்
இராமேஸ்வரத்திற்கு இருவருமாய்நடந்தார்
சேதுவில்ஸ்நானம்செய்து சேதுலிங்கம்பூசைசெய்து
பிட்டுக்குமண்சுமந்த பித்தரைக்காணவென்று
மதுரைநகர்தேடி வருகிறாரிருவருமாய்
வருகிறவழிதனிலே வாணியனொருவனவன்
அல்லியரசாணி யாரணங்குமாதினுக்கு
நித்தமவள்முத்தளக்கும் நீதியுள்ளவாணியன்தான்
அன்றாடமுத்தனி லளவுகுறைந்ததென்று
படிமுத்துகுறைந்ததென்று பதறிப்புலம்புகிறான்
வாயிலறைந்துகொண்டு மண்ணிற்புரளுகிறான்
அழுதகுரல்கேட்டு அங்குவந்தாரிருவருமாய்
ஆரடாதப்பியரே அழுதுபுலம்புவதேன்
உன்னை-அநீதம்பண்ணவரார் அடித்துபறித்தவரார்
இப்போதுன்னுடமை கொள்ளையிட்டவரெவர்களும்
அழுதுபுலம்புவதே னவ்வயணஞ்சொல்லுமென்றார்
வனந்திரியுஞ்சன்யாசி வார்த்தையதுங்களுக்கேன்
ராஜாத்திவார்த்தையதை நானுரைக்கக்கூடாது
சொன்னேனேயாமாகில் சுகமாக்கப்போறீரோ
உங்களாலாவதென்ன வூர்வழியேபோங்களென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அரச்சுனனுமேதுரைப்பார்
சொன்னாற்குறைவுண்டோடாசுகம்பெறுவீர்வாணியரே
பெரியோர் நீசொன்னதினாற்பிழையுண்டோயுந்தனுக்கு
உன்-மனதுகுறைவகற்றி வகைமானஞ்செய்திடுவோம்
அழுதவயணமதை யறியவுரையுமென்றார்
ஆனாற்கேள்சன்யாசி யவ்வயணஞ்சொல்லுகிறேன்
ஐயாபெரியவரே ஆண்டவரேகேளுமையா
மானமதுரையது வடமதுரைப்பட்டணத்தில்
தென்மதுரையாளுகின்ற தேன்மொழியாளல்லியம்மாள்
ஆயிரம்பாண்டியற்கு அரியதுரைமகள்காண்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை

குடலிற்பிறந்ததில்லை குளக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரி லுள்ளேயணைந்தேறு முண்டு
அடிக்கிறகாற்றதனி லலைக்காற்றுருப்புமுண்டு
சந்திரற்குமாசியுண்டு சற்றேகருப்புமுண்டு
குண்டுமணிக்காலுங் கொஞ்சங்கருப்புமுண்டு
புருவங்கருப்பொழிய பின்னேகருப்புமில்லை
மயிரேகருப்பொழிய மற்றக்கருப்புமில்லை
ஆருயிரவருந்தா னரியமைந்தனில்லாமல்
மாளுவோமென்றுசொல்லி மலைமேற்றவமிருந்தார்
மாளாதேயென்றுசொல்லி மலரிலவதரித்தாள்
பொற்றாமரைதனிலே பிறந்தாளேமாதுகன்னி
அல்லியிலேயே லருமையாய்த்தான்பிறந்து
அல்லியென்றுபேருமிட்டு ஆரணங்குபெண்வளர்ந்தாள்
எழுபிராயமதி லெதிர்த்துவந்த நீன்முகனை [டாள்
நீன்முகனைக்கொன்றவளும் நீலிபட்டங்கட்டிக்கொண்
பொம்மைவிருதுகட்டி பூமியரசாளுகிறாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுன னுமேதுரைப்பார்
அழகில்மிகுந்தபெண்ணை ஆணழகாசொல்லுமென்றார்
அவளழகும்பாவனையு மையாவேசொல்லுகிறேன்கேள்
எல்லாத்தலைமயிரு மிருமுழமொருமுழமாம்
எல்லாத்தலைமயிரு மிருபாகமொருபாகம்
ஆரணங்குகூந்தலது அறுபத்துமூன்றுமுழம்
வண்டுமுழுதுகோடுபோலே மயிர்நிறமாயிருக்கிறது
தேய்பிறைச்சாயலைப்போல் திருநெற்றிக்கண்ணழகும்
வேப்பிலைச்சாயலைப்போல் மேற்புருவத்தினழகும்
கூரியமூக்கழகும் குளிர்ந்தமுகத்தழகும்
முத்துப்போற்பல்வரிசை முருக்கிதழ்போற்செவ்வுதடும்
நீர்முட்டைகண்ணழகும் நெரிந்தபுருவமுடன்
சங்குகழுத்தழகுஞ் சாதிலிங்கமேனிகளும்
காமன்கடைந்ததுபோற் கலசத்திளமுலையும்
கர்ப்பகச்சாயலைப்போற் கைதலமிரண்டழகும்
ஆலிலைபோலாக அமர்ந்ததிருவயிறும்
சிங்கத்திடைபோற் சேர்ந்தவிடையழகும்
இளவாழைத்தண்டதுபோ லிருதொடைவடிவழகும்
முத்துச்சிப்பிபோலே முழங்காலிரண்டழகும்

புத்தகஞ்சேர்ந்ததுபோற் புறங்காலின்பேரழகும்
சுவரிலெழுதலாகுஞ் சித்திரம்போற்பார்க்கலாகும்
படத்திலெழுதலாகும் பதுமைபோற்பார்க்கலாகும்
வேரிற்பவழங்கள் மின்னுகிறகாந்தியவள்
மின்னலொளிபோலே மெல்லிநல்லாள்தன்னிறங்கள்
கொப்பனையாள வார்த்தையது குயில்கள்குரலோசை
காய்க்குப்பிராயமையா கன்னிகட்டுங்காலமையா
பூக்குப்பிராயமையா பிஞ்சுவிடுங்காலமையா
அவளைப்போலழகுடையா ளாருமில்லைவையகத்தில்
கட்டழகிமாதினுக்குக் கலியாணமாச்சுதோடா
பாலைப்பகங்கிளியு மணமுகூர்த்தஞ்செய்தனளோ
ஆறுற்கேள்சன்யாசி யவ்வார்த்தைசொல்லுகிறேன்
கொள்ளவருமாப்பிள்ளைக்கு குறடாகொடுப்பேனென்றள்
ஆளவருஞ்சம்பந்தியை யடிப்பேனென்றுள்சொருபந்
கலியாணமென்றவரைக் கண்ணைப்பிடுங்கிடுவாள் [தால்
மூன்வாசற்படிதனிலே மூச்சிகோட்டாகட்டிவைத்தாள்
பாலைக்கறந்துதான் பட்டணத்தில்வைத்தாக்கால்
பறக்கிறகாகமது பாராதுதலையெடுத்து
ஆண்காற்றடியாது அல்லியம்மாள்கோட்டைதனில்
ஏறுவதும்பெண்குதிரை இருப்பதுவும்பெண்சேனை
பன்னிரண்டுவயதாச்சு பாலப்பிராயமையா
நித்தங்கலமுத்தளப்பேன் நீதியுள்ளமாதினிக்கு
அவளுக்கு-அன்றுடகமுத்தி ளவுகுறைந்ததையா
ஆகையினுலேதா னழுதுபுலம்புகிறேன்
வெட்டியெறிந்திடுவாள் வீரமணிவாளினுலே
கொல்லநினைப்பாளே குடிகேடுவந்திடுமே
ஆகையினுலேதா னழுதுபுலம்புகிறேன்
அவனுக்காதரவுசொல்லி யப்புறமேபோகையிலே

## அருச்சுனன் அல்லியின்மே லசைகொண்டது.

அருச்சுனராஜனவ னதிகமோகங்கொண்டானே
அப்புறம்நடந்தறியான் அருச்சுனராஜமன்னன்
அல்லியர்பேரொசையது அதிகமோகங்கொண்டானே
காமவிகாரத்திற் கனைதாங்கிப்போனுனே
மன்மதனெய்தகணை மார்பைப்பிளக்கிறது

சித்தசன்தொடுத்தகணை சிறுமார்புருகிறதே
மோகித்தானவனுமே மூர்ச்சைபட்டுப்போனனே
பாணங்களைந்தும் பட்டுநெஞ்சுருகிறதே
மாரன்விடும்பாணமது மார்புருகிப்போகிறதே
ஆயன்பெருமாளே அடியேனொருவிண்ணப்பங்கேள்
கட்டினவிருதுகளைக் கடுகியவிழ்க்கவேணும்
அல்லியரைமாலையிட்டு அழகுமணஞ்செய்யவேணும்
எந்தவிதமாகிலு மணமாலைசூட்டவேணும்
மாலையிட்டாலல்லாது மாயவனேவருவதில்லை
செத்துமடிவேனையா செலவழிந்துபோவேனையா
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராயரேதுசொல்வார்
கட்டென்னகாவலென்ன காவலதிகாரமென்ன
ஆருயிரவர்களா மையபார்சேனையென்ன
சேவகமிருந்தநொரு தேன்மொழியாளல்லியரும்
கலியாணம்பண்ணுதற்குக் காண்பரா ஆகுமோதான்
கொல்லநினைப்பாளே குடிகேடுவந்திடுமே
செத்துமடிவாய்நீ செலவழிந்துபோய்விடுவாய்
தேசத்திற்பெண்களோடே சேனபேர்கிட்டாரோ
சாதியிலொருபெண்ணைத் தாலிகட்டிவைப்பேனடா
குலத்திலொருபெண்ணை கோலப்பண்ணிவைப்பேனடா
மாதுடையவார்த்தையைதான் மறந்துவிடுவாள்விஜயா
பெண்ணென்றவார்த்தையைநீ போட்டிடுவாள்விஜயா
அல்லியரைமாலையிட ஆகாதுவுன்னாலே
செத்துமடிந்திடுவாய் செலவழிந்துபோய்விடுவாய்
நச்சுநச்சுவென்னுதே நாம்போவோம்ராஜாவே
தீர்த்தயாத்திரைவந்து சேனநாளாச்சுதடா
தருமருந்தம்பியருந் தவித்துப்புலம்புவாரே
ஆரணியவாசம்வந்து அநேகநாளாச்சுதடா
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்விஜயன்
நான்-செத்துமடிந்தாலும் செலவழிந்துபோனாலும்
மாண்டுமடிந்தாலும் வைகுந்தம்சேர்ந்தாலும்
செத்தவிடந்தனிலே செங்கழுநீர்பூப்பேன்
மாண்டவிடந்தனிலே மல்லிகைப்பூப்பேன்
பஞ்சணைமெத்தையிலே படுக்கைமலராவேன்யான்
கொண்டைக்குபூவாவேன் கொசவனத்திற்பையாவேன்

நெற்றிக்குப்பொட்டாவேன் நீலவிழிமையாவேன்
முந்தானைத்தொங்கலிலே முள்ளாகியொட்டுவேன்யான்
காலுக்குமிஞ்சிபோலுங் கைவளையல்தானுவேன்
மாலையிட்டாலல்லாது மாயவனேவருவதில்லை
கலியாணஞ்செய்துவையுங் கரியமாலெம்பெருமாள்
உன்புண்ணியத்தினுலேதான் பிழைக்கவழிபாருமையா
பார்த்திபன்மாலினது பாதம்பணிந்தானே
ஆயர்பெருமாளும் அருளாளரேதுசொல்வார்
புத்திகெட்டுநானுமுந்தன் பின்னுலேவந்தேனடா
அறிந்துமிருந்துநான் அறிவழிந்துவந்தேனடா
பெண்களைப்பார்த்துநீ பேதைபோற்புலம்புகிருய்
அல்லியின்மேற்சிந்தையா யர்ச்சுனனுஞ்சோபமானுன்
காமக்கணைபட்டு களைதாங்கிக்கீழ்விழுந்தான்
ஆயன்பெருமாளும் ஆலோசனைபண்ணலுற்றுர்
மாதுவென்னுமல்லியரை வரவழைக்கவேண்டுமென்று
மாயமிருகந்தன்னை மாயவருண்டுபண்ணுர்
காட்டானைசிங்கங்களும் கரடிபுலியாளிகளும்
மானுமுயல்களுடன் மட்டற்றபன்றிகளும்
மயிலுங்குயிலன்னம் வண்ணவண்ணபட்சிகளும்
அநேகமிருகங்களை யரிராமருண்டுபண்ணுர்
மதுரைக்குடிபடைகள் மகாஜனங்களத்தனையும் [து
காட்டில்வரத்தான்பயந்து கன்னிநல்லாள்முன்னேவந்
அல்லியர்க்குதெண்டனிட்டு அடிபணிந்தேதுரைப்பார்
இத்தனைநாள்பிழைத்தோ மிடுக்கமிலையென்றிருந்தோம்
என்னகுறைசெய்தோமோஎண்ணவொண்ணுமிருகங்கள்
காட்டுக்குப்போவோமென்றுற் கனத்தமிருகமம்மா
பொல்லாதமிருகங்கள் புலிகள்துரத்துதம்மா
ஏதாற்பிழைப்போமென் றெல்லவருந்தானமூதார்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுரைப்பாள்

அல்லியரசானி வேட்டைக்கு வருகிறது.

மிருகத்தால்மடிவோமென்று மிகவும்பயப்படாதே
வேட்டைக்குநான்போய் வேணமிருகமெல்லாம்
அரைநாழிகைக்குள்ளே அதம்பண்ணிப்போடுகிறேன்
அஞ்சாமலெல்லவரு மரண்மனைக்குப்போங்களென்றுள்

அத்தண்டபேர்களெல்லா மரண்மனைக்குப்போனபின்பு
ஆரடிதாதியரே யலங்காரச்செங்கமலம் [ருள்
வேட்டையாடும்பெண்களை விரைந்தழைத்துவாருமென்
குறவர்பெண்கள்மறவர்பெண்கள் கூட்டிவாதாதியரே
வில்லியர்பெண்களை நீவிரைந்தோடியழையுமென்ருள்
குதிரைமேற்சீனிகட்டு கொப்பெனவேதாதியென்ருள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குதாதியவள்
இலாயத்தில்கட்டிவைத்து இருக்கின்றபுரவிகளில்
பாராசாரிபுரவிதன்னைப் பாங்குடனேதானவிழ்த்து
குதிரைகுளிப்பாட்டி கொண்டகடிவாளமிட்டு
நாலுகாலுக்குவண்டையமாம் நடுக்கழுத்திற்கொலுசுக
பக்கத்திலங்குபடி பதியவைத்தாரப்பொழுது [ளும்
கண்ணுடிசல்லி கவரிமான்சுங்குவிட்டு
மூத்துத்துராகலிக்கத்துரா முன்னுலேதான்சொருகி
இமாம்பக்ஷியிறகுதன்னை யியல்பாகத்தான்சொருகி
குதிரையையலங்கரித்துக்கொண்டுவந்துமுன்புவிட்டார்
அம்புவில்லுங்கைப்பிடித்து அம்புராதுணிமுதுகணிந்
பதினுயிரந்தோழிமார் பாங்காகச்சூழ்ந்துவர [தாள்
ஆயிரம்யானை அல்லியுடன்பயணமாச்சு
வெள்ளித்தமுக்கடித்தார் வெண்கலக்கொம்பூதினுர்கள்
பொன்னுத்தமுக்கடித்தார் புறப்பட்டார்பெண்களெல்லா
வேட்டைநாய்ச்சங்கிலியும் விருதுகட்டிவருகிருர்கள் [ம்
மான்வலையும்வல்லயமும் வளைதடியுஞ்சக்கரமும்
இரட்டைகுழித்துப்பாக்கி யிருதோளிலிட்டார்கள்
காற்செருப்புந்தோற்குல்லாவுங்கைதனில் சில்லாக்கோல்
அந்தவிதப்பெண்களெல்லா மல்லியரைச்சூழ்ந்துவர
அப்போது அல்லியம்மா ளாரணங்குதானெழுந்து
புரவியருகில்வந்தாள் பெண்கொடியாள்மாதுகன்னி
புரவிதனைச்சுற்றிவந்து போகவேசரணஞ்செய்தாள்
கழுத்துமயிர்பிடித்துக் கடிவாளங்கைபிடித்தாள்
தட்டினுள்புரவிதனைச் சடுதியிற்ருனேறினளே
அடிவயிற்றில்கால்தட்ட அபாரியாயோடிற்று
ஆருயிரங்குதிரைகளில் அல்லியம்மாள்குதிரையது
காற்ருய்ப்பறந்தல்லவோ கடிகியேவருகிறது

பட்டணந்தான்கடந்து பாரவனந்தான்புகுந்தான்
காட்டைவளைத்தார்கள் கருநாயைச்சூழவிட்டார்
செடியைவளைத்தார்கள் செந்நாயைச்சூழவிட்டார்
கோணக்கொம்பூதுவார்கள் கொப்பெனதமுக்கடிப்பார்
ஆயன்பெருமாளும் அருச்சுனரைத்தானெழுப்பி
வருகிறாள்காணல்லியரும் வனந்தனிலேவேட்டையாட

அல்லியற்கு அருச்சுனன் அம்புபொறுக்கித் தருவது.

அவள்-எய்கிறபாணமெல்லாமெழில்விஜயா நீபொறுக்கி
அம்புகள்தான்பொறுக்கி அல்லியற்குநீகொடுத்து
வல்லமையாய்வந்தாலே மாலையிட்டுவைப்பேனென்றாள்
அந்தமொழிகேட்டு அருச்சுனன்தானெழுந்தான்
மாயமிருகமது வந்ததேஅல்லிமுன்பு
புள்ளிமான்றன்னையே பொற்கொடியுங்கண்டுவிட்டாள்
மானைத்துரத்தியேதான் வருகிறாளல்லியம்மாள்
காற்றாய்ப்பறந்திற்றே கானகத்தில்மானதுதான்
குதிரைசவாரிவிடடு கொப்பெனவேதுரத்தலுற்றாள்
கூடத்தொடர்ந்தானே கோபாலன்மைத்துனனும்
அல்லியரசாணியவள் அம்புகளெய்ததெல்லாம்
பொறுக்கித்தருவானே போர்விஜயர்ச்சுனனும்
காடெல்லாம்வேட்டையாடி களைத்தாளே அல்லியரும்
விடுவிடுநேரமது வெயி ரனவேளையிலே
ஆலமரத்தடியி லங்கேயிறங்கிவிட்டாள்
ஆரடிதாதியரே ஆசனம்போடுமென்றாள்
அரைத்துணிதானவிழ்த்து அருச்சுனன்கீழ்போட்டான்
குதிரையைகட்டுமென்று கொப்பெனவேதான்படுத்தாள்
அகிலமரந்தன்னுடனே யணைத்துவைத்தாள்குதிரை
பாங்கியரேஎன்னுடைய பாதம்பிடியுமென்றாள் [தனை
அர்ச்சுனராசதுரை அல்லிக்கெதிரேவந்து
அல்லியம்மாள்தன்பாத மர்ச்சுனன்பிடிக்கலுற்றான்
கைகால்பிடிக்கையிலே கணையாழிகழற்றிக்கொண்டான்
ஆரடிதாதியரே அலங்காரத்தோழியரே
நீங்கள்-கற்றகதைதனிலே கதையொன்று சொல்லுங்கள்
களைகள்தெளியவேண்டுங் கதையொன்றுசொல்லுங்கள்

## அருச்சுனன் அல்லியற்குக் கதை சொல்லல்.

ஆணுலழகுமன்ன னல்லியற்குகதையுரைப்பான்
குருகுலவங்கிஷராம் குந்திமக்களைந்துபேராம்
துருவாசமந்திரத்தால் துலங்கவந்தநவமணிகள்
சந்திரகுலம்விளங்கத் தருமரவரைந்துபேர்கள்
பாண்டுராசன்பெற்றெடுத்த பஞ்சவர்களைவருண்டு
தருமருக்குநேரிளையான் தார்வேந்தனர்ச்சுனன்காண்
வீமருக்குநேரிளையான் வில்வாங்குமர்ச்சுனன்காண்
நெருப்பிற்பிறந்தவொரு நேரிழையாள்துரோபதையை
எட்டாதவில்வளைத்து இளங்கொடியைமாலையிட்டான்
மீசைமுருக்கழகன் விழியிலேகறுப்பழகன்
நாவுதனில்நட்சத்திரம் நயனவிழிப்பார்வையுள்ளான்
தோளிலேதுளசிமாலை தொப்புளிலேயமுர்தகலசம்
பல்லிற்பாசவீணை பாதத்திற்செந்தாமரை
முதுகிலேமச்சரேகை முழங்காலில்மாணிக்கம்
ஸ்திரீலீலைமன்மதன்காண் இளம்பெண்கள்மணவாளன்
முன்னிலும்பின்னழகன் மோககன்னிமணவாளன்
பின்னிலுமுன்னனழகன் பெண்களுக்குமணவாளன்
அருச்சுனனைப்போலே அழகுடையாராருமில்லை
திக்குநல்லபாலகரை ஜெயம்பண்ணுஞ்சேவகன்றன்
இவ்வார்த்தைதான்கேட்டா ளிளங்கொடியல்லியம்மாள்
என்னகதைசொன்னுயென்று ஏறமுகம்பார்த்தாள்காண்
மீசைகட்டும்பாவனையும் விழியழகுங்கண்டுவிட்டாள்

## அருச்சுனன்பேரில் அல்லியரசாணி கோபித்தது.

ஆரடா ஆண்பிள்ளையென்று ஆயுதந்தானெடுத்தாள்
காற்ருய்ப்பறந்தானே கட்டழகன் அருச்சுனனும்
கத்தியெடுச்கையிலே காதவழியோடிவிட்டான்
நிற்கத்தெரியாமல் நீலவண்ணன்பக்கம்வந்தான்
அங்கேநடந்தசேதி யாண்டவர்க்குந்தானுரைத்தான்
கதைகளுஞ்சொன்னேன்யான் காலும்பிடித்தேனே
கணையாழிமோதிரத்தைக் கழற்றிவந்தேன்மாயவனே
காலும்பிடித்தேனே கலைகள்தெளியவில்லை
மாலைப்பசுங்கிளியை மாலையிட்டுவையுமையா

உள்ளமுருகிறதே யுற்றசீவன்போகுதையா
ஆவியுருகிறதே ஆனசீவன்போகுதையா
ஐந்துபாணத்தைத்தலவோ அடியேன்நெஞ்சுருகிறதே
பஞ்சிலிட்டதீப்போற் பதைத்துநெஞ்சுருகிறதே
அவளைப்போலழகுடையாள் அவனியில்நானறியேன்
பார்த்துமறியேனையா படத்திலேயுங்கண்டறியேன்
ஈழத்துத்தச்சனவ னெழுதிவரவிட்டானோ
மேல்நாட்டுதச்சனவன் வளைத்துவரவிட்டானோ
ஏதாய்சிருஷ்டித்தானோ யியலானபிரமதேவன் [என்பான்
அல்லிஎன்பான்மெல்லியென்பா னந்தனிலேபெண்ணே
காமக்கணையாலே கலைதாங்கிப்போய்விட்டான்
மூர்ச்சைப்பட்டுவிழுந்தானே முடிமன்னனருச்சுனனும்
அப்போதுதாதிமா ரத்தனைபேர்தோழிகளும்
பாங்கிமார்தோழியரும் பத்தினியாளருகில்வந்தார்
ஆரடிதாதியரே யருகில்வந்தசெங்கமலம்
ஆரோஒருவனவ னுய்ப்பிறந்தவனென்
காலும்பிடித்தானே கதைகளுரைத்தானே
ஆங்காரப்பட்டவனை யாக்கினைகள்செய்யவேண்டும்
ஆயிரந்தோழிகளை யங்ஙனமேதேடவிட்டாள்
எங்கெங்குந்தேடியே இனியவிடமாராய்ந்தார்
கள்ளன் திருடனைத்தான் காணோமென்றுவந்துரைத்தார்
பேயோபிசாசோ பின்றொடர்ந்துவந்ததம்மா
ஆணுருவாய்த்தோன்றிற்றோ ஆய்ச்சியரேயுந்தனுக்கு
அதனாற்பழுதுமில்லை யாச்சியரேயெழுந்திருங்கள்
ஏறினாள்புரவியின்மே லேகசனஞ்சூழ்ந்துவா
பாங்கியருந்தோழியரும் பக்கம்புடைசூழ
காடுசெடிகள்தாண்டி கரியமலைதான்கடந்து
மாளிகைவாசலுக்கு மண்டபம்போய்ச்சேர்ந்தாளே

கிருஷ்ணபகவான் படமெழுதி குளத்தோரம்
மரத்தில் கட்டிவிட்டு அர்ச்சுனனைத்
தண்ணீர் கொண்டுவரச்
சொன்னது.

அப்போதுகரியமா லாலோசனைகள்செய்து
அல்லியைப்போலாக அழகுபடமெழுதி

படங்களெழுதியே பாரளந்தார்தானுமங்கே
குளத்தங்கரையிலுற்ற கோங்குமரந்தனில்
உயர்ந்தமரமதனில் உலகளந்தார்கட்டிவைத்தார்
தண்ணீரில்நிழல்தெரிய சுவாமியங்கேகட்டிவைத்தார்
அருச்சுனரைத்தட்டியே அரிராமர்தானெழுப்பி
காண்டீபாவெந்தனுக்குக் களையாய்வருகிறதே
தண்ணீருங்கொண்டுவந்து தந்தாயேயாமாகில்
மாலைப்பசுங்கிளியை மாலையிட்டுவைப்பேன்யான்
என்றுசொல்லக்கேட்டு எழுந்தானருச்சுனனும்
கமண்டலந்தைத்தானெடுத்துக் கடுகியேயோடலுற்றான்
வனத்திற்குளந்தேடி வருகிறானேயருச்சுனனும்
தண்ணீரிலிறங்கும்போது தையலரைக்கண்டுவிட்டான்
அல்லியரைத்தான்பார்த்து அருச்சுனனுமேதுசொல்
தண்ணீரிற்போயிருக்கத் தையலரேகாரியமேன் [வான்
என்னிலும்புருஷனடி எங்கேகிடைப்பார்காண்
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கப்பெண்களுண்டு
ஆடவென்றூஞ்சலுண்டு அமர்ந்திருக்கமெத்தையுண்டு
பந்தாடிசெண்டாடி பள்ளாங்குழியாடி
அம்மானையாடியேதான் அருகில்நீவீற்றிருப்பாய்
தேனேபசுங்கிளியே சிங்காதனம்வீற்றிருப்பாய்
உன்சொல்லேமேலாக உத்தமியேவீற்றிருப்பாய்
உன்னாசைகொண்டுநான் உழன்றுதிரிகிறேனே
உன் மாயமருந்தாலே தாயைமறந்தேனடி
அண்ணனைத்தம்பிமாரை அல்லவரைநான்மறந்தேன்
காமன்கணையாலே களைதாங்கிப்போகிறண்டி
ஆசையெல்லாமுன்மேலே அலையுதடிஎன்சீவன்
வாயைத்திறவாயோ மறுவார்த்தைசொல்லாயோ
முத்தானவாய்திறந்து உத்தரஞ்சொல்லாயோ
தாளைத்திறவாயோ தனிவார்த்தைசொல்லாயோ
வாயைத்திறந்தாயானால் வச்சிரமுதிருமடி
வச்சிரமுதிர்ந்தாலே வாரியெடுக்கிறண்டி
முத்துமுதிர்ந்தாலே முந்தானையேந்துரண்டி
தாளைத்திறந்தாலே தங்கமுதிருமடி
தங்கமுதிர்ந்தாலே தடவியெடுப்பேண்டி

உன்-சித்திரவாய்திறந்து செப்பாயோஒருவார்த்தை
மார்போடேமார்பணைந்தால் மகாவிடாய்திருமடி
தோளோடுதோளணைந்தால் சுகங்கள்தெரியுமடி
எத்தனைநேரமட்டும் இரக்கங்கள்சொல்லுவேன்யான்
கல்லுங்கரையுமது கற்றானுமிற்றுவிடும்
உன்-மனதுகரையவில்லை மாலைப்பசுங்கிளியே
தண்ணீரில்யானிறங்கித் தழுவிப்பிடிப்பேனடி
என்றுகுதித்தானே இளவிசயராஜனவன்
மூச்சைபிடித்தவனு மூழ்கித்தடவலுற்றான்
ஜாமநேரமாகத் தண்ணீரில்தடவலுற்றான்
தவளையும்பாம்புகளுந் தடவிவலித்தெடுத்தான்
அலுத்துச்சலித்தவனும் அர்ச்சுனன்வெளியில்வந்தான்
கரையின்மேல்வந்தவனுங் களைத்துப்புலம்புகிறான்
எந்தனைமோசஞ்செய்து எங்கேபோனாளென்றறியேன்
போனவிடமறியேன் போய்ப்பதுங்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
என்றுவிசாரமிட்டு இறங்கியவன்பார்க்கையிலே
தண்ணீர்தெளிந்தல்லவோ தையலரைப்பார்த்துவிட்டார்
இந்நேரந்தடவினேனே யெங்கிருந்தாயேந்திழையே
என்னவித்தைகுஸ்திரங்க ளிளங்கொடிகற்றவள்காண்
மாயமறிந்தவளோ மந்திரங்கள்கற்றவளோ
மலையாளவித்தைகளை மந்திரத்தைக்கற்றாளோ
எந்திழையேயுனைப்பிடிக்க என்கையிலாகாதோ
மறுபடியுங்குதித்தானே மன்னன்துரைராஜாவும்
அவ்வளவில்மாயவனா ரங்கனமேயோடிவந்து
படத்தையவிழ்த்தவரும் பாரளந்தார்போய்மறைந்தார்
நாலுநாழிகைமட்டும் நல்விஜயாராஜதுரை
குட்டிமதயானை குளங்கலக்கிவிட்டதுபோல்
மூழ்கித்தடவினனே முடிமன்னராஜனிவன்
அல்லியரைக்காணமல் அலைந்துவிசாரமிட்டான்
வந்துவெகுநேரமாச்சு மாயவரென்சொல்வாரோ
கனத்தவிசாரமுற்றுக் கமண்டலத்தில்நீர்மூகந்து
மாயவனார்தன்னருகில் வந்தானேயர்ச்சுனனும்
ஏன்காணுமருச்சுனரே இந்நேரமேதுசெய்தாய்

சாமநெருநேரமாச்சே தண்ணீர்கொண்டு நீவரப்போய்
எவ்வளவுதிரமா யிருந்தீர்காலருச்சுனரே
ஐயாபெருமாளே அடியேனொருவார்த்தைசொல்வேன்
தண்ணீர்க்குப்போனபோது தையலரைக்கண்டேனையா
தண்ணீரிலிருந்தாப்போற் றரிசித்தனெந்தனுக்கு
குதித்துத்தடவினேன்யான்கொம்பனையைக்காணவில்லை
முழுகித்தடவினேன்யான் மொய்குழலைக்காணேனே

ஸ்ரீகிருஷ்ணபகவான் நித்திரைசெய்ய அர்ச்சுனராஜன்
அல்லியரைத் தேடிப்போவது.

அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
அல்லியர்மேற்சிந்தையாது அசரவில்லையருச்சுனரே
பல்லிக்கையாகிறது பார்த்திபவெந்தனுக்கு
நித்திரைசெய்தபின்பு நேரிழையையுந்தனுக்கு
மாலைப்பகங்கிளியை மாலையிட்டுவைப்பேனடா
வாள்விஜயன்தொடைமேலே மாயவனுந்தான்படுத்தார்
கள்ளக்குறட்டைவிட்டுக் கரியமால்தூங்குகிறார்
அப்போதுவாள்விஜயன் அருச்சுனனேதுசெய்தான்
சிரசைநழுகவிட்டுத் தேர்விஜயன்தானெழுந்தான்
பாராங்கல்லைத்தூக்கிக்கொண்டு பார்த்திபன்வருகிறானே
எம்பெருமாள்மாயவரும் என்றுதுமெண்ணுகிறார்
தலையேகல்லைப்போடத் தாவிஜயன்தானினைந்தான்
என்றுகலங்கியே எண்ணமிட்டுத்தானிருந்தார்
கல்லையெடுத்துவந்து காண்டீபனருச்சுனனும்
தலைக்குயரம்வைத்தானே சுவாமியைப்படுக்கவைத்தான்
அல்லியர்மேற்சிந்தையா யருச்சுனன்போகலுற்றான்
மதுரைக்குப்போகவென்று மாதுதனைக்காணவென்று
காடுசெடிதாண்டிக் கடுகிவருகையிலே
அருச்சுனனேதுஞ்செய்தி அறிந்தாரேமாயவனார்
அருச்சுனராசனுக்கு மனர்த்தம்வந்துநேர்ந்ததென்று

ஸ்ரீகிருஷ்ணபகவான் குறத்தியுருக்கொண்டு வருதல்.

மாயன்பெருமாளும் வடிவெடுத்தாரென்னவென்றால்
செக்கச்சிவலையாய்ச் சிறுபெண்குறத்தியானார்

அக்குமணிகொக்குமணி அழகானபவளமணி
பச்சைமணிபவளமணி பாங்காயலங்கரித்து
குறத்தியரைப்போலாகக் கூடையிடிக்கிவந்தார்
கண்டானேகுறத்தியரைக் கட்டழகனருச்சுனனும்
ஆச்சிகுறத்தியரே அடியேன்யான்தெண்டமம்மா
கைபார்த்துகுறியுரைக்கக் கட்டழகிவல்லலவியோ
மனதில்நினைத்தகுறி சொல்வாயேகுறமாதே
எந்தவூருங்களது எனக்கறியசொல்லுமென்றார்

குறம்.

தினதெந்தின தினதெந்தின தினதெந்தின தினன
தெந்நாதி நாதினன தினதெந்தின தினன
எந்தனதுதிருநாடு கேட்கிறையோதம்பி
வத்தமுள்ள இந்திரனு ராஜுமெங்கள்நாடு
சந்திரர்கள்சூரியர்கள் தவம்புரியும்நாடு
தவமுனிரிஷிகளெல்லாம் வாழுமெங்கள்நாடு
கொச்சிமலை குடகுமலை யெங்களதுநாடு
குமரேசர்வாழுமது எங்களதுநாடு
பச்சமலைபவளமலை எங்களதுநாடு
பரமசிவன்வாழுவதும் எங்களதுநாடு
வங்காளச்சிங்காளம் மகதமெங்கள்நாடு
வளப்பாடிகுறியுரைக்க வந்தேனடாதம்பி
பசிகாலமானாலே பழங்கூறிவருவோம்
பரமசிவனுமையவட்கும் கைபார்க்கும்குறத்தி
ராமக்காள்லட்சுமக்காள் பொம்மக்காளென்பேர்
நலமறிந்துகுறியுரைப்போம் நட்டணையாய்நாங்கள்
உண்மையாய்குறியுரைப்போம் உந்தனுக்குத்தம்பி
உன்னணை உன்னணை என்றவளுஞ்சிரித்தாள்

வேறு.

ஆனாற்கேள்கட்டுவச்சி அடியேனொருவார்த்தை
தெய்வக்குறத்தியென்றார் செப்புங்குறியெனக்கு
உண்மைகுறியுரைத்தால் உச்சிதங்கள்தருவேனடி
காதிலிடுந்தண்டலமுங் கையிற்பவுத்திரமும்

நான்-உடுத்துமுடைமானம் உந்தனுக்குத்தருவேண்டி
கைபார்த்துகுறியுரையுங் கட்டழகியெந்தனுக்கு
நாமக்குறத்தியவள் நலமாகவேதுசொல்வாள்
வண்மைக்குறத்தியவள் வாய்திறந்துபாதுசொல்வாள்

குறத்தி அர்ச்சுனனுக்குக் குறிசொன்னது.

குறம்.

தினதெந்தினு தினதெந்தினு தினதெந்தினு தினனு
தெந்நாதி நாதினனு தினதெந்தினு தினனு
திங்கள்மதிபிறைசூடுஞ் சிவனுடையமகனே
திருத்தணிகைவாழ்முருகா சேவையருள்வேண்டும்
வளக்குறத்திவள்ளியம்மை வந்துதவவேண்டும்
மலையாளபகவதியே வாக்கருளவேண்டும்
அலர்மேலுமங்கையரே மலைமேலுஞ்சிந்தை
அனைவோரும்வந்துகூடி அன்புதரவேண்டும்
ஆகாயவாளிதுர்க்கை ஐயனார்பிடாரி
அம்மைவல்லியுமையவளும் பொற்கொடியேதெய்வம்
பொங்கும்நயினார்களும் பொற்கொடியேதெய்வம்
பூவாடைக்காரியம்மை புகழ்ந்துகுறிசொல்லும்
தெய்வங்கள் நினைத்தாலே சிலிர்த்துக்கொள்ளுதுடம்பு
தேகமெல்லாம்மயிர்க்கூச்சல் இடுகிறதேதம்பி
வாடைமணம்வீசுதடா மயிலெவர்வந்தாப்போல்
மயக்குகிறதென்னுடம்பை சன்னதங்கொண்டதுபோல்
கூடைகொண்டுகவியுதடா கொற்றவனேயெனக்கு
கோலவிழிதுடிக்கிறது குறிகள்சொல்வேன்கேளும்
சந்திரகுலராஜாக்கள் தருமரைவர் நீங்கள்
தரணிமுழுதாளுகிற தர்மர்தம்பி நீதான்
சிலைநுதலின்வடிவழகன் தேர்விஜயன் நீதான்
தீர்த்தயாத்திரைபோகவென்று தோழனுடன்வந்தாய்
வடிவழகிசிலைநுதலாள் தென்மதுரைவாழும்
மாதரந்த அல்லியின்மேல் மையல்கொண்டாய்நீயும்
ஆருயிரப்பாண்டியற்கு அரியதுரைமகளாம்
அல்லியின்மேலாசைவைத்து அலைகிறடா இப்போ
பொய்யோடோஎன்குறிகள் மெய்யோ நீபுகல்வாய்
புண்ணியனேதருமர்தம்பி புதுமையுடன்சொல்வாய்

என்றவனைத்தான்பார்த்து இணைவிழியால்மிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடதுவளநகைத்தாள்

வேறு.

மெய்தான்காணுச்சியரே விளம்பினையெந்தனுக்கு
கண்டதுகண்டாற்போல் கட்டுவச்சிசொல்லிவிட்டாய்
பார்த்ததுபார்த்தாப்போல் பட்சமாய் நீயுரைத்தாய்
தெய்வக்குறத்தி நீ தெளிவானகட்டுவச்சி
உள்ளகுறியெனக்கு உத்தமியே நீயுரைத்தாய்
அல்லியரைமாலையிட்டு அழகுமணஞ்சூட்டுவேனோ
என்-மனதிற்கிசைந்தபடி வருவாளோ அல்லியவள்
என்மீதிலிச்சைகொண்டு இசைந்துவரப்பாருமம்மா
பாதம்பணிந்தானே பார்த்திபன் அர்ச்சுனனும்
ஆனாற்கேள்தம்பியரே அல்லிவருவதற்கு
மூனறுவிதங்குளிகையது முடிமன்னா நான்தருவேன்
அம்மருந்தை நீவாங்கி அல்லிபுரம்போய்ச்சேர்ந்து
தென்மதுரைப்பட்டணம்நீ திருக்குளம்போய்ச்சேர்ந்து
நான்-தந்தமருந்தெடுத்து தண்ணீரில் நீகரைத்தால்
அல்லியம்மாள்பேரைச்சொல்லி அம்மருந்தை நீயுரையு
மருந்துகரையும்போது அவள்மனதுகரையுமடா [ம்
குளிகைகரையும்போது குணமுந்திரும்புமடா
அல்லிமனதுவைத்து அழகுமணஞ்செய்திடுவாள்
பொம்மக்காபேரைச்சொன்னா திம்மக்காநேர்ந்துவிடும்
ராயக்காபேரைச்சொன்னா லட்சுமக்காள்நேர்ந்துவிடும்
பொய்யல்லவென்மருந்து புண்ணியனே நான்தருவேன்
உந்தனுடைமான முடுத்தியதைத்தாருமென்றாள்
காதிலிடுங்குண்டலமுங் கையிற்பவுத்திரமும்
கச்சுகளுந்தட்டிகளுங் கழட்டிக்கொடுததானே
பக்ஷமாயிம்மருந்து பலியாமற்போனக்கால்
தெரிந்தெங்கேஉன்னைக்கண்டு தேடுவேனச்சியரே
ஆனாற்கேள்தம்பியரே அற்பமாயாச்சுதானல்
நாலுமலைகளுக்கு நடுவேயடாவென்குடிசை
ஏழுகுடிசைகளில் எதிர்குடிசையெந்தனது
ராயக்காள்பொம்மக்காள் லட்சுமக்காளென்றழைத்தால்

உன்னுடமையான் தருவேன் உத்தமனேயஞ்சாதே
அருச்சுனன்தரித்திருந்த ஆபரணமுள்ளதெல்லாம்
பட்டுகுல்லாதட்டிகச்சு பலத்தவுடமைகளும்
வாங்கிநடந்தானே மலேக்குறத்திதனைப்போல்
ஆனைழுதுமன்னன் அருச்சுனன்வழிநடந்தான்
உள்ளங்குளிர்ந்தவனாய் உத்தமனும்போகலுற்ருன்
காடுசெடிதாண்டி கடுகிவந்தான்தென்மதுரை
அல்லிப்பெருமாளும் அவள்பிறந்தபொய்கையண்டை

## அருச்சுனன் திருக்குளத்தில் மருந்திழைத்தது.

பவளக்கட்டுதிருக்குளத்தின் படியிலிறங்கியவன்
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுரைக்கலுற்ருன்
அநந்தனிலேதான்கூட அல்லிஅல்லியென்பானே
மருவியணேவதற்கு வருவாயோஅல்லியென்பான்
மருந்துகரையும்போது மனமூங்கரையாதோ
குளிகைகரையையிலே குணமூந்திரும்பாதோ
சித்தமிரங்கியே தேடிவருவாளோ
எப்போமனம்வருமோ என்னருகில்வாராயோ
காமன்கணேயாலே களைதாங்கிப்போறேனே
மன்மதபாணமது மாரைப்பிளக்குதடி
சித்தசன்தொட்டகணே சிறுமார்புருகுதடி
உன்னுசைகொண்டுநான் உழன்றுதிரிகிறேனே
அனந்தனிலேதான்கூட அல்லிஅல்லியென்பானே
மருவியணேவதற்கு வருவாயோஅல்லியென்பான்
அல்லிஅல்லியென்றுசொல்லி அலேகிருனருச்சுனனும்
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுரைக்கலுற்ருன்
அல்லிப்பெருமாள் அவளுடையதாதியர்கள்
ஆயிரந்தாதிமார்கள் ஆரணங்குதாமெழுந்து
தங்கக்குடமெடுத்து தண்ணீர்க்குவருகிருர்கள்
பவளக்கட்டுதிருக்குளத்தின் படியோரம்வந்தார்கள்
மருந்துரைக்கும்வண்மைகளுமறுவார்த்தைகள்சொல்லி
அல்லியரைவைகிறதே அவ்வார்த்தைக்கேட்டார்கள்
இடிவிழுவான்சொன்னசொல் எல்லவருங்கேட்டார்கள்
அல்லிப்பெருமாளே அரசாளும்நாயகியை

வம்புதும்புசொல்வார்கள் மண்டலத்திலாருமில்லை
அல்லியென்றுபேருசொன்னால் அழுதபிள்ளைவாய்மூடும்
ஆகிடும்புவார்த்தைஎல்லாம் ஆச்சியற்கேசொல்லவென்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள் [று
அல்லியம்மாள்முன்னாலே அடிபணிந்துதெண்டனிட
ஆர்பணியுந்தாதியரே அறியவுரையுமென்றாள்
ஆர்பணியுமல்லநான் அடியேன்திருப்பணிதான்
தங்கக்குடமெடுத்துத் தண்ணீர்க்குப்போனேமம்மா
பவளக்கட்டுதிருக்குளத்தின் படியிலொருவனம்மா
வண்ணமருந்துகளைத் தண்ணீரிலுரைக்கிறானே
ஆகடியஞ்சொல்லுகிறான் அழுப்புகளும்பேசுகிறான்
வம்புதும்பும்பேசுகிறான் வாய்பழுதுசொல்லுகிறான்
காதாரக்கேட்டோமம்மா கனங்குலைந்துவந்தோமம்மா
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிவெகுகோபமதாய்
எட்டிப்பழம்போலே இருகண்கள்தானசிவந்து
செந்தலைநாகம்போற் சீறியவள்கோபமதாய்
ஏழுபிராயமதில் எதிர்த்துவந்தநீன்முகனை
நீன்முகனைக்கொன்றுதான் நீலிபட்டமாண்டேனே
அடிபெண்ணே அல்லியென்பார் ஆருமொருவரில்லை
பொம்மைவிருதுகட்டி பூமியரசாளுகிறேன்
பாலைக்கறந்துதான் பட்டணத்திலவைத்தாலும்
பறக்கிறகாகமது தலையெடுத்துப்பாராது
ஐம்பத்தாறுகாதமு மென்னாக்கினைமெத்தவுண்டு
அஞ்சாமல்வந்துமிங்கே அழுப்புசொன்னாரடிதான்
பாங்கியிலும்நல்லவளே பவளசேனைநீகேளும்
அவனைஎன்னவிதமாக ஆக்கினைகள்செய்திடுவோம்
என்றுமவள்கேட்க எதுசெய்வாள்பவளசேனை
கட்டும்விருதறுத்து கலியாணம்செய்வதற்கு
மண்டலத்துராஜாவோ வானவரோதேவரோதான்
மணஞ்சூட்டவந்தவன்போல் மாதரசேகாண்கிறது
எண்ணாதயோசனைகள் எண்ணியவள்தன்மனதில்
அல்லிப்பெருமாள்தனக்கு ஆலோசனையேதுசொல்வாள்
விடுவிடுநேசத்தே வெயிலானவேளையிலே
வெப்பாமணலிலேதான் அம்பாகக்கூறுகைக்கு

ஆகிடும்பான் றன்னை ஆற்றிற்புரட்டினுலே
சென்மமுருகியவன் செத்துமடிந்திடுவான்
ஆரடிதோழியரே ஆயிரம்பேர்வாருங்கள்
ஆற்றுமணல்தனிலே அவனைப்புரட்டுமென்றாள்
வெம்பாமணலிலே வீழ்த்திப்புரட்டுங்கள்
கட்டியுருட்டுங்கள் கள்ளன்திருடனைத்தான்
செததுமடிந்தபின்பு சேதிவந்துசொல்லுமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயிரந்தாதியர்கள்

## அருச்சுனனுக்கு அல்லியரசாணி முதலாவது ஆக்கினையிட்டது.

ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார்தாதியர்கள்
ஆயிரந்தாதியர்கள் அருச்சுனரைத்தூக்கினர்கள்
ஆற்றுமணல்தன்னில் அருச்சுனரைப்போடவந்தார்
காண்டீபன் அருச்சுனற்கு கனமோசம்வருதென்று
ஆயன்பெருமாளும் அந்நேரந்தானினைந்தார்
கானலுறைக்கவேண்டாங் காண்டீபனருச்சுனற்கு
பூமிதேவிபெண்ணரசே போதமணலுஞ்சுடாமல்
அருச்சுனரைக்காருமென்று ஆயனுந்தோத்தரித்தார்
அப்போதுதோழியர்கள் ஆற்றருகில்வந்துநின்று
ஆற்றுமணலிற்போட்டு அருச்சுனனைபுரட்டினர்கள்
கொற்றவர் அர்ச்சுனர்க்குக் குளிர்ந்தஜலம்போலிருக்கும்
ஆயிரந்தாதிகட்கும் அக்கினியாய்ப்பற்றுதங்கே
நெல்லிப்பழம்போலே நெருங்கிற்றுகொப்பளங்கள்
சங்கப்பழமதுபோற் சரீரமெங்குங்கொப்பளமாய்
அத்தண்டதோழிகளும் அலைகொலைந்துஓடுகிறார்
அப்போதருச்சுனரும் ஆணழகரேதுசொல்வார்
அல்லியரும்தானுமாய் அமர்ந்துவிளையாட
மருவிவிளையாடுதற்கு மண்டபந்தான்கிட்டாதோ
ஆற்றிலேவந்தேநீ அமர்ந்துவிளையாடிருப்பாய்
எப்போதுதான்வருவாள் என்னாசைதீர்வதற்கு
மனதுவருவதெப்போ மருவியணைவதெப்போ
சித்தம்வருவதெப்போ தேவியணைவதெப்போ
என்றுதெளியுமோ எக்காலஞ்சென்றிடுமோ

என்றுபுலம்புகிறார் இயலானஅர்ச்சுனரும்
அப்போதுதாதிமார் ஆரணங்குஓடிவந்தார்
அல்லியற்குத்தெண்டனிட்டு ஆரணங்குமேதுரைப்பார்
வெம்பாமணல்தனிலே வேகவேபுரட்டினோம்யாம்
ஆற்றுமணலில்போட்டு அவனைப்புரட்டும்போது
எங்கள்-சரீரங்களெல்லாம் சங்கப்பழம்போலாச்சு
நெல்லிப்பழம்போலே நீர்க்கொப்பளமாச்சுதம்மா
வாட்டம்வதக்கமில்லை மகாபாவியவன்றனக்கு
அல்லியல்லியென்றுசொல்லி அலைகிறான்பாவிமகன்
உன்மேலேசிந்தையாய் உருகிப்புலம்புகிறான்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசொல்வாள்
வானஞ்சுழலவோதான் மருந்துண்டோபாவிகையில்
பூமிசுழல்வதற்குப் பொடியுண்டோவவன்கையில்
என்னமருந்தறிவான் இடிவிழுவான்பாவியவன்
என்னவிதத்தினாலே இவனைநாம்கொல்கிறது
பாங்கிகள்நல்லவளாம் பவளசேலையேதுசொல்வாள்
தூக்குமரத்திற்போட்டு தூக்கிவிடச் சொல்லுமென்றாள்
செங்கமலத்தாதியரைத் தோழியரைத்தானழைத்து
ஊருக்குமேற்காக ஒருகாதவழிதனிலே
தூக்குமரஞ்செப்பனிட்டு தோழியரேபோடுமென்றாள்

அருச்சுனனுக்கு அல்லி இரண்டாவது
ஆக்கினையிட்டது.

அவ்வார்த்தைதான்கேட்டு அருகிருந்தசெங்கமலம்
திடுக்கென்றெழுந்திருந்து தோழியருந்தானுமாக
தச்சன்மகளாரைத் தையலருங்கூட்டிவந்து
தூக்குமரம்செப்பனிட்டு சோடித்துவந்தார்கள்
ஊருக்குமேற்காக ஒருகாதவழிதனிலே
கொண்டுவந்துதூக்குமரங் கொப்பெனவேநட்டார்கள்
ஏணியுஞ்சாற்றினார் இனிக்கயிறுபோட்டார்கள்
அருச்சுனராஜாவை அங்கேயழைத்துவந்தார்
சுற்றிவளைந்தார்கள் சூழ்ந்தாரேதாதியர்கள்
ஏணிமேலேறுமென்றார் இயலானமன்னவனை
கயிற்றைக்கழுத்திலே கடுகியேபோடுமென்றாள்

அப்போதருச்சுனரும் ஆணழகரேதுசொல்வார்
பார்த்துமறியேனடி பாருலகிற்கண்டதில்லை
கண்டுமறியேனடி காதாரக்கேட்டதில்லை
போட்டுமறியேன்காண் புதிதாகத்தோன்றுது
எனக்குத்தெரியும்வகை இன்பமாய்க்காண்பியுங்கள்
ஏணிமேலேயெடுத்து கயிறுபூட்டிக்கொள்ளும்வகை
இந்தவிதமென்றுசொல்லி எந்தனுக்குக்காண்பியுங்கள்
அறியாதவெந்தனுக்கு அறியப்படுத்துங்கள்
தெரியாதவெந்தனுக்குத் தெரியப்படுத்துங்கள்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தாளேசெங்கமலம்
சொரணைகெட்டபாதகனே தெரியாதோவின்னடக்கை
இதோபாருமென்றுசொல்லி ஏணிமேலேறினள்
கயிற்றையெடுத்தவளும் கழுத்திலே பூட்டிக்கொண்டாள்

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பெருச்சாளி ரூபங்கொண்டு
வந்து ஏணியைத் தள்ளிவிட்டது.

அதுசமயம்பார்த்தாரே அரிராமரெம்பெருமாள்
பெருச்சாளிபோலேவந்து பிரட்டிவிட்டாரேணிதன்னை
சுருக்குவலித்துக்கொண்டு தொங்குகிறாள்தோழியவள்
கால்கையுதறிக்கொண்டு கண்விழிபிதுங்கிக்கொண்டு
நாவையிழுத்துக்கொண்டு நால்லுயிர்தான்போச்சுதே
செத்துமடிந்தாளே செங்கமலத்தோழியவள்
காண்டீபன் அருச்சுனருங் கட்டழகரேதுசொல்வார்
காலையுதறுவதுங் கண்பிதுங்கிநிற்பதுவும்
நாக்கைப்பிடிங்கிக்கொண்டு நல்லூஞ்சலாடுவதும்
இவ்வளவோசூஸ்திரங்கள் எனக்குத்தெரியவரும்
இனிமேல்தெரியவரும் இறங்கிவாதோழியரே
ஐயையோதெய்வமென்று அழுகிறார்தோழியர்கள்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தாரரசியண்டை
மகுடத்துரச்சியரே மாதாவே நீர்கேளும்
தூக்குமரந்தனிலே தோழியவள் போடட்போன
செங்கமலத்தோழியவள் தூக்கில்மடிந்தாளே
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிமனதுநொந்து
பாங்கியிலும்நல்லவளே பவளசேனை நீகேளும்

என்னவிதமாக இவனை நாம்கொன்றிடலாம்
ஆரடிமந்திரியே ஆலோசனைசொல்லுகிருள்
அப்போபவளசேனை ஆலோசனைசொல்லுகிருள்

அருச்சுனனை மூன்றுந்தரம் காளிக்குப்
பலியிடச்செய்தது.

வடவாசல்செல்லியம்மன் மாகாளியம்மனுக்கு
பொங்கலைஇட்டுநீங்கள் பொலிபோட்டுவாருங்கள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயிரந்தோழிமார்கள்
சீக்காயுமெண்ணெயுடன் தேங்காயுமிளநீரும்
புதுப்பானையரிசிகளும் புஷ்பமுஞ்சந்தனமும்
கருப்பூரஞ்சாம்பிராணி காளிக்குகொண்டுவந்தார்
ஆரடிதாதிகளே அழைத்துவாஓச்சப்பெண்ணை
அவ்வளவில்தாதிமார் அவர்முடுகியோடுவார்கள்
ஆயன்பெருமாளும் அவ்வார்த்தைதானறிந்து
கரிமேகவண்ணருங் காளியண்டைஒடிவந்தார்
வாருமம்மாதங்கையரே வார்த்தையொன்றுநீர்கேளும்
அல்லிப்பெருமாளை அழகுமணஞ்சூட்டவென்று
காளையந்தஅர்ச்சுனருங் கனவேஷங்கொண்டுவந்தான்
அருச்சுனராசனென்று அறியாமல்அல்லியம்மாள்
காளியம்மாளுந்தனக்குக் காவுதரச்செலவுதந்தாள்
பொங்கலிட்டுந்தனுக்குப் பொலிபோடச்செலவுதந்தாள்
ஓச்சப்பெண்போலே உத்தமியேவருவேனம்மா
பூசையானபிற்பாடு பொங்கலிட்டுத்தீர்ந்தபின்பு
உன்மேலேசம்மதமா யிந்தபெலிவேண்டேனென்பேன்
என்வார்த்தைகேட்காமல் உன்வார்த்தைகேட்பார்கள்
நானுரைத்தபானைபோல் நாயகமேநீருரையும்
அருச்சுனராஜனுக்கு அழிவுவந்ததானுக்கால்
வெற்றிமதயானை வீமனுன்னைப்பிழைக்கவிடான்
வஜ்ரகதையாலே மண்டியிட்டுத்தலையுடைப்பான்
தண்டாயுதமெடுத்துத் தலையறுப்பான்வீமராசன்
துண்டந்துண்டமாகவுன்னை துணித்திடுவான்வீமராசன்
கத்தியெடுத்துமுன்னை கழுத்தையறுத்திடுவான்
காளியென்றும்பாராமல் கனத்தவுயிர்வாங்கிடுவான்

காளியற்குத்தாமுரைத்து கரியமால்தானடந்தார்
ஓச்சப்பெண்போலாக உளகளந்தார்வடிவெடுத்தார்
ஒரகத்திவாசலிலே உட்கார்ந்திருக்கிருள்காண்
ஓட்டம்நடையுமாக வோடிவந்தார்தாதியர்கள்
கோவிலுக்குப்போகவேண்டுங்குச்செடுத்துவாருமென்று
திறவுகோல்தாமெடுத்துத் தேன்மொழியாள்போகலுற்
கடுகுமுடுகியே காளிகோவில்வந்தார்கள் [ருள்
கோவில்கதவுதன்னைக் குச்சிட்டுத்தான்திறந்தாள்
குளத்தில்முழுகிவந்து கொம்பனையைப்பூசைசெய்தாள்
அபிஷேகஞ்சூட்டினுள் ஆங்காரக்காளியற்கு
செந்நெலரிசிகொண்டு தேவியற்குப்பொங்கலிட்டாள்
கோவில்திருவிளக்குக் குறைவில்லாமலேற்றினுர்கள்
தேங்காயுடைத்தார்கள் தூபதீபங்கொடுத்தார்
அருச்சுனரைகூட்டிவந்து அம்மனுக்கெதிரெவைத்து
மண்பிறக்குமுன்பிறந்த வழக்காடும்நல்லசெல்லி
யுகம்பிறக்குமுன்பிறந்த உத்தண்டபத்திரகாளி
காய்ந்தமழுவேந்துங் கர்த்தனிடதேவியரே
எரிந்தமழுவேந்தும் ஈஸ்வரனுர்தேவியரே
வடவாசல்செல்லியம்மாள் மனிதபலியேர்வைகொள்ளும்
வருணிக்கும்போதையிலே வந்துவிடுஞ்சன்னதங்கள்
ஓச்சப்பெண்மேலே உதறுகுதுதெய்வம்வந்து
ஆண்காற்றடியாதே அல்லிமலர்நாயகிக்கு
அவளுடையஎல்லேகாக்கும் ஆங்காரக்காளியல்லோ
மதுரையைக்காத்திருக்கும் மண்ணுபிடாரியல்லோ
அல்லியற்குஆகாது செல்லியற்குஆகுமடி
இந்தப்பலிவேண்டேன் ஏர்வையில்லையெந்தனுக்கு
பெண்பலிஈந்தாலே பூசையதுஏர்வைகொள்வேன்
ஆண்பலிஈந்தாலே அநர்த்தம்பண்ணிப்போட்டிடுவே
மதுரைக்குடிபடையை மகாபலிகொண்டிடுவேன் [ன்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வார்தாதியர்கள்
நீசொன்னவாக்கியங்கள் நிச்சயமுமாகாது
காளியம்மன்வாயாலே கடுகியுரைத்தாலே
ஈஸ்வரியாள்வாக்குரைத்தால் எல்லார்க்கும்நிச்சயங்காண்
என்றுபணிந்தார்கள் இயலானதாதியரும்

அப்போதுகாளியம்மன் அப்படியேவாக்துரைத்தாள்
அஞ்சிப்பயந்தார்கள் அல்லியிடமோடிவந்தார்
மதுடத்துரைச்சியற்கு வந்துதெண்டம்பண்ணிஞர்கள்
காளியற்குப்பூசை கனத்தபொங்கலிட்டோமம்மா
ஓச்சப்பெண்மேற்சன்னதங்கள் ஓங்காரமாய்வந்ததம்மா
ஆண்பலிவேண்டேனென்று ஆடிஞள்சன்னதமாய்
அம்மொழிநம்பாம லம்மன்சொல்லவேண்டுகிரும்
அப்படியேகாளியம்மன் ஆண்பலிவேண்டேனென்று
அல்லிப்பெருமாட்கு ஆண்வாடையாகாது
எந்தனுக்குமாகாது என்றுளேகாளியம்மன் [ள்
ஆண்பலிதந்தாலே யனர்த்தம்பண்ணிவிடுவேனென்று
மதுரைக்குடிபடையை மகாபலிகொள்வேனென்ருள்
இவ்வார்த்தைகேட்டவுடன் ஏதுசொல்வாளல்லியம்மா
வானஞ்சுழல்வதற்கு மருந்துவித்தைகற்றவனே [ள்
பூமிசுழல்வதற்குப் பொடிகளறிந்தவனே
என்னமருந்தறிவான் இடிவிழுவான்நானறியேன்
எந்தவிதத்திலே யேந்திழையேகொல்வோமடி
பாங்கியிலும்நல்ல பவளசேனையேதுசொல்வாள்
பூதக்கிடங்கிலே போட்டடையும்பாதகனை
பூதப்பிடுங்கித்தின்னும் பிர்மலோகஞ்சேர்ந்திடுவான்

அருச்சுனனுக்கு நான்காவது தண்டனையிட்டது.

ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
பூதக்கிடங்கதனிற் போட்டடையுமென்றுசொன்ஞள்
எம்பெருமாள்மேகவர்ணர் இவ்வயணமறிந்தார்
பூதங்கள்தன்னருகே பெருமாளுமோடிவந்தார்
மாயவரைக்கண்டவுடன் வணங்கிற்றேபூதமெல்லாம்
ஆரடாபூதங்களே அகங்காரராட்சதரே
அர்ச்சுனரைக்கொண்டுவந்து அடைக்கவருவார்கள்
பார்த்தீபன்அர்ச்சுனற்கு பணிவிடைகள்செய்யுங்கள்
சங்கீதந்தன்னுடனே சந்தோஷமாய்வைத்திருங்கள்
அருச்சுனராஜனுக்கு அழிவுவந்ததாஞக்கால்
வெற்றிமதயானை வீமராஜன்தானறிந்தால்
வஜ்ரகதையினலே மண்டியிட்டுத்தலையுடைப்பான்
தண்டாயுதமெடுத்துத் தாக்குடையவீமராஜன்

அஞ்சுதுண்டாக அறுத்திடுவான்வீமராஜன்
பூதத்துக்குச்சொல்லியபின் பெருமாளும்போய்நடந்தார்
அப்போதுதாதிமார் அர்ச்சுனரைக்கூட்டிவந்தார்
பூதங்கிடங்குதனிற் போட்டடைத்தார்அர்ச்சுனரை
ஆர்காணும்பூதங்களே அல்லியம்மாளுத்தாரம்
பொல்லாதபாதகனைப் பொலியதுகொண்டிடுங்கள்
இவனைப்பெலிகொண்டு எடுத்துப்புசித்திடுங்கள்
தள்ளிக்கதவடைத்துச் சங்கிலியும்போட்டார்கள்
முதுகிலேமச்சரேகை கண்டதேபூதமெல்லாம்
மெத்தநடுநடுங்கி வேந்தரவர்அர்ச்சுனற்கு
பஞ்சணைமெத்தைபோட்டு பாத்திபனையிருக்கவைத்து
அத்தண்டபூதமெல்லாம் அர்ச்சுனற்குபணிகள்செய்யும்
வெண்சாமரைபோடுமாம் விஜயரந்தஅர்ச்சுனற்கு
கைபிடிக்குஞ்சிறிதுபூதம் கால்பிடிக்குஞ்சிறிதுபூதம்
பாதம்பிடிப்பதுவும் பாட்டுகளைப்பாடுவதும்
கூத்துகளாடுவதும் கொண்டானடிப்பதுவும்
தார்விஜயன்அர்ச்சுனற்குச் சங்கீதம்பாடுவதும்
ஆரடாகேளிக்கையும் அரும்பவனிநாடகமும்
சங்கீதம்பார்த்துமே தார்விஜயன்தானிருக்க
கண்டார்கள்பேய்க்கூத்தை கனமானதாதியர்கள்
அல்லிப்பெருமாளின் அருகாகஓடிவந்தார்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டுமேதுசொல்வார்
பூதங்கிடங்கதனிற் போட்டடைத்தோம்பாதகனே
பூதப்பிசாசனைத்தும் போதப்பணிசெய்கின்றது
பாதம்பிடிக்கிறதும் பணிவிடைகள்செய்கிறதும்
கூத்துகளாடி கொண்டானடிக்கிறதும்
பார்த்துவந்தோமாச்சியென்று பாதம்பணிந்தார்கள்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசொல்வாள்
என்னமருந்தறிவா னிடிவிழுவானென்றறியேன்
வானஞ்சுழல்வதற்கு மருந்தறிவான்சண்டாளன்
பூமிசுழல்வதற்கு மருந்தறிவான்சண்டாளன்
என்னுவிசாரமா யிருந்தாளே அல்லியம்வாள்
மாயன்பெருமாளும் மேலாமரேதுசெய்தார்

அருச்சுனராஜாவை அழைத்துவரவேண்டுமென்று
என்னவடிவெடுத்தார் எம்பெருமாள்மேகவண்ணர்

கிருஷ்ணபகவான் பெண்ருபங்கொண்டு
அருச்சுனனை அழைப்பது.

தெய்வப்பெண்போலே ஸ்ரீராமர்வடிவெடுத்தார்
செக்கச்சிவளைபோலே தீவுகிளிபோலே
மின்னுகிறகாந்தியைப்போல் வேரிற்பவளம்போல்
காய்க்கும்பிராயம்போற் கன்னிகட்டும்பிராயமவள்
பூர்க்கும்பிராயமவள் பிஞ்சுவிடுங்காலமதாய்
கொஞ்சவயதுகாண் கொழுந்தெல்லாம்பிஞ்சுவிடும்
பாலப்பிராயமவள் பக்கமெல்லாம்பிஞ்சுபோலே
இரண்டெழுந்தசோலையில் சிவந்தெழுந்தசூரியன்போல்
குன்றுமேல்சந்திரன் குதித்தெழுந்தபாவனைபோல்
ஈழத்துத்தச்சனவன் எழுதிவரவிட்டதுபோல்
மேல்நாட்டுதச்சனவன் வளைந்துவரவிட்டதுபோல்
அஷ்டாபரணமெல்லாம் அலங்காரஞ்செய்தவளாய்
பட்டுபளபளென்ன பாடகக்கால்சோதிமின்ன
தெய்வப்பெண்போலே ஸ்ரீராமர்வருகிறரே
அழகுகுலுங்கவும் ஆனந்தங்கொஞ்சவேதான்
உடல்சூலுங்கமாயவனு ரோடிவருகிறரே
காடுசெடிதாண்டி கடுகியேவந்துவிட்டார்
மதுரைத்தெருவிலே வந்தாரேஎம்பெருமாள்
அக்கமாரேதங்கைமாரே ஆரடிதாய்மாரே
செக்கச்சிவலையம்மா சிறுவயதுஎன்கணவன்
பித்தன்வெறியனம்மா பினத்தித்திரிவானடி
வெறிபிடித்தமன்னவன்காண் வீதிதிரிவானடி [ன்
அல்லிஅல்லிஎன்பான் அனந்தனிலேபெண்ணேஎன்பா
தண்ணீர்கண்டவிடத்தில் தன்கைமருந்துரைப்பான்
எட்டுநாளாச்சுதம்மா என்கணவன்வீடுவிட்டு
ஆரோதெரியாது அடக்கிவசங்கொண்டார்கள்
என்கணவனைக்காணுமற் கலங்கித்திரிகிறேனே
புருஷனைக்காணுமற் புலம்பித்திரிகிறேனே
அறிந்தாலுரையுங்கள் மதுரையுள்ளோர்தான்கேட்டு
தாதியர்கள்தோழியர்கள் தானறிந்தோடிவந்தார்

அல்லிபெருமாட்கு அறிக்கையிட்டார்தாதியர்
பூதக்கிடங்குதன்னில் போட்டடைத்தபாதகனே
அவனைமாலையிட்டதேவியராம் வந்தாளொருத்தியிங்கே
வானத்துரம்பைபோல் மயிலனையாள்தோற்றுகிருள்
கணவனைக்காணேனென்று கதறிப்புலம்புகிருள்
சொல்லியழுகிறது துக்கம்பெருகுதம்மா
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்கேதுசொல்வாள்
ஆரணங்குமாதரை நீ ரழைத்தோடிவாருமென்ருள்
ஓட்டம்நடையாக ஓடிவந்தார்தாதியர்கள்
ஆரடிகன்னியரே அழுதுபுலம்புவதேன்
எங்கள் ஆச்சியருமுன்னை யழைத்துவரச்சொன்னுர்காண்
அல்லிப்பெருமாளு மழைக்கிருள்வாருமென்ருள்
ஏதுக்கழைக்கிரு ளிளங்கொடியாள்மாதுகன்னி
என்றுநடந்தாளே யெம்பெருமாள்மாளிகைக்கு
வாசலும்வாசலது படியேழுந்தான்கடந்து [ள்
அல்லியற்குமுன்னேவந்து ஆரணங்குதெண்டனிட்டா
தெண்டனிட்டகன்னியரைத் தேன்மொழியாளேதுசொ
எந்தவூருங்களது எங்கிருந்திங்குவந்தாய் [ல்வாள்
ஏதுக்கழுகிரு யெனக்கறியச்சொல்லுமென்ருள்
என்னுடைய ஆச்சியரே எஞ்பாவங்கேளுமம்மா
தூரவடக்கேயம்மா துவாரகாபுரிதேசம்
திருமலைநாய்க்கன் பெற்றசீரானபெண்ணிருவர்
என்பேருமெல்லியர்கா ணென்தங்கைபேரல்லியர்காண்
என்னைமணஞ்சூட்டிஎன்தங்கைமேலிச்சைகொண்டான்
பெண்டுமேல்பெண்டுமல்லோ கொடுப்பாரோபூமியிலே
அல்லியர்மேல் ஆசையாய் ஆணழகன்வெறியெடுத்து
பித்தம்பிடித்தவர்போல் பிதற்றித்திரிகிருனே
தண்ணீரைக்கண்டாலே தன்கைமருந்துரைப்பான்
அல்லியென்பான்மெல்லியென்பா னலைந்துதிரிகிருனே
வீடுவாசல்தங்காமல் வெளிப்பட்டுப்போய்விடுவான்
தேடித்திரிகிறேனே சீரானமன்மதனை
கண்டுபிடித்தவரைத் கடுகியனைகொண்டுபோவேன்
எட்டுநாளொருவார மிருப்பான்மனம்பிடித்து
மாதுமேல்நினைவெடுத்து மாளிகையில்நிற்கறியான்

பந்தாடும்பட்டணத்தில் பாவியொருபெண்பிறந்தேன்
செல்வத்தலையிலே செப்பேடெழுதினதும்
அல்லற்படுந்துயரம் அமைத்தானேபிரமதேவன்
கதியைத்தொலைப்பேண்டி காவேரிநீந்திடுவேன்
விதியைத்துலைப்பதற்கு வெல்லவகையறியேன்
வடிவுமழகாயிருந்தார் மன்னன்துரையென்கணவன்
ஆரோதெரியாது அடக்கிவசங்கொண்டார்கள்
என்புருஷன்தன்னையம்மா இனிகாணப்போகிறேனேடி
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாளல்லியம்மாள்
அல்லியெனப்பேர்கொண்டு அவனிதனையாண்டேனே
என்பேரைச்சொல்லியவன் எடுத்துமருந்துரைத்தான்
ஆகடியம்சொன்னதிறு லடைத்தேன்கிடங்கிலேதான்
பயித்தியக்காரனென்றாய் பழுதில்லையெந்தனுக்கு
ஆளலைமைத்துப்போம் அனுப்பிவிடச்சொல்லுகிறேன்
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
கிடங்கைத்திறந்தவனை கொப்பெனவேபோகவிடும்
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரதோழியர்கள்
ஓட்டம்நடையுமாக வோடிவந்தார்கிடங்கருகில்
கிடங்கைத்திறந்தார்கள் கொப்பெனவேவிட்டுவிட்டார்
அப்போதுதெய்வகன்னி ஆளன்முகம்பார்த்து
வாடாகுடுப்பாநீ மதியழிவானென்றழைத்தாள்
அல்லிமெல்லியென்றுசொல்லி ஆணழகன்தான்வருவா
எப்போவருவாளோ என்னாசைதீருமேன்பான் [ன்
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதென்பான்
ஆருமிருபாணமது மார்புருகிப்போகுதென்பான்
அஞ்சுருகுபாணமது நெஞ்சுருகிப்போகுதென்பான்
அருச்சுனரைக்கூட்டியே அரிராமர்போகலுற்றார்
மதுரையைத்தாண்டியே வந்தாரேகானகத்தில்
மாயன்பெருமாளும் மாயையாய்ப்போகலுற்றார்
ஆலமரத்தடியில் அரிராமர்பள்ளிகொண்டார்
கள்ளக்குரட்டைவிட்டுக் கரியமால்தூங்குகிறார்
ஆயனருகாக அருச்சுனனார்வந்துநின்றார்
பாரளந்தார்பாதத்தைப் பார்த்திபன்பிடிக்கலுற்றான்
அலண்டுபுரண்டதுபோல் அரிராமர்கண்விழித்தார்

ஆனாலழகுமன்னா அருச்சுனரேகேட்டீரோ
காணாதசொற்பனத்தைக் கண்டேன்காணருச்சுனரே
என்னைத்தனியேவிட்டு எங்கேயோபோனதுவாய்
கானக்குறத்தியுமுன் கைபார்த்துச்சொன்னதுவாய்
வண்ணமருந்துனக்கு மலைக்குறத்திதந்ததுவாய்
அம்மருந்தை நீவாங்கி அல்லிபுரம்போனதுவாய்
வண்ணமருந்தெடுத்து தண்ணீலுரைக்கக்கண்டேன்
அல்லியுடதாதிமார் ஆயிரம்பேரோடிவந்து
அர்ச்சுனரேயுனையெடுத்து ஆற்றிலேபோடக்கண்டேன்
தூக்குமரந்தனிலே தேர்விஜயாபோடக்கண்டேன்
காளியம்மன்கோயிலிலே காவுகொடுக்கக்கண்டேன்
பூதக்கிடங்கிலேதான் போட்டடைக்கக்கண்டேன்
ஆரோஒருதெய்வகன்னி அழைத்துவரக்கண்டேனப்பா
என்னருகேவந்திருக்க கண்டேன்கனவாக
என்னகாண்மைத்துனனே இப்படிகனவுகண்டேன்
வாள்விஜயன்கோமானும் மாயனுக்கேதுரைப்பான்
பித்தமுயர்ந்ததினாற் போதக்கனாக்கண்டீர்
அல்லியர்மேல்சிந்தையது ஆசைமறக்கவில்லை
மாலையிட்டுஅல்லியனை மருவியணைவதெப்போ
கோபாலமைத்துனரே கூட்டிவைப்பதுன்பாரம்
அப்போதுமாயவரு மருச்சுனன்முகம்பார்த்து
ஏறமுகம்பார்த்து எம்பெருமாளேதுசொல்வார்
பட்டுநல்லகுண்டலமும் பவுத்திரமோதிரமும்
பட்டுதட்டிஒட்டியாணம் பசும்பொன்னாற்சமுதாடு
தாமரைப்பூச்சல்லடமுஞ் சந்திரகாந்திதட்டிகளும்
உத்தரசம்வல்லவட்டு உத்தமனேயெங்கேயென்றார்
அஞ்சிப்பயந்தவன் அர்ச்சுனனுமேதுசொல்வான்
ஆயர்பெருமாளேநீர் அனந்தநித்திரைபோகையிலே
மாதினதுபட்டணத்தைமதுரையைப்பார்ப்போமென்று
மாதுமேல்தன்னினைவாய் வந்துகுறிசொன்னாளையா
வண்ணமருந்துதந்து தண்ணீரிலுரையுமென்றாள்
மருந்துகரையும்போதவள் மனதுகரையுமென்றாள்
குளிகைகரையும்போது குணமுந்திரும்புமென்றாள்
மருந்தும்பலியாமல் மாயவரேபோச்சுதையா
நாலுமலைக்குத்தான் நடுவிலவள்குடிசையென்றாள்

இராமக்காள்பொம்மக்காள் இலட்சுமக்காளவள்போரும்
அந்தவார்த்தைகேட்டாக்கா ளபாலைந்தருவேனென்று [ம்
மருந்தைகொடுத்துவிட்டு வாங்கிவிட்டாளுடைமையெல்லா
அவள்-கொடுத்தபடியேதான் குலமாச்சேவர்க்கனரே
சொன்னபடியாகச் சேர்ந்தாளோ அல்லிநல்லாள்
குருபாபங்கண்டறியேன் உழன்றுநான்வந்தேனையா
பொம்மக்காள்பேரைச்சொல்லி இம்மக்காள்நேர்ந்ததை
உடைமைபறிகொடுத்து உழன்றுநான்வந்தேனையா [யா
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
குறத்தியிருப்பிடத்தைக் கொற்றவனேதேடிப்போய்
உன்னுடைமையுள்ளதெல்லாம் உத்தமனேவாங்கிவாரும்
கடுகியேவாங்கிவாரும் கட்டழகாவென்றுரைத்தார்

அர்ச்சுனன் குறத்தியிடம் சென்று தான்
கொடுத்ததை வாங்கினது.

ஆயாதுசொற்கேட்டு அர்ச்சுனனுந்தானடந்தார்
குறத்தியைத்தேடி கொப்பெனவேவருகிறரே
நாலுமலைநடுவே நல்விஜயன்தேடிவந்தார்
இராமக்காள்பொம்மக்கா லட்சுமக்காளென்றழைத்தார்
மாயன்பெருமாளு மலைக்குறத்திபோலேவந்தார்
ஆடாதம்பியரே அழைத்தகருமமென்ன
அப்போதருச்சுனனு மாலழகரேதுசொல்வார்
நீகொடுத்தமருந்ததனிற் சற்றும்பலனில்லையே
பொம்மக்காள்பேரைச்சொல்லத் திம்மக்காள்நேர்ந்ததும்
உன்பேச்சைகேட்டுநா னுதைப்பட்டுவந்தேன் [மா
நான்-கொடுத்தஉடைமையெல்லாம் கொப்பனவேதாரு
என்வார்த்தைநீகேளீர் இயலான்தம்பியரே [மென்றான்
காககடைதனிலே கண்டதலையாரிசேனை
கன்னமிட்டுவந்தேனென்று கட்டியடித்தார்கள்
அடியும்பட்டேனுதையும்பட்டே னலைச்சல்களும்பட்டு
உடைமைபறிகொடுப்பே னினியஉடமையது [வந்தேன்
அவ்வார்த்தைதான்கேட்ட ருச்சுனனுமேதுசொல்வான்
உடமைகொடுக்காவிட்டா லுன்னைவிடேன்கட்டுவர்ச்சி
எங்கிருந்துநான்கொடுப்பே னினியவுடமையது
மடியைப்பிடித்திழுத்தான் மாதுகுறத்தியவனை

நய்யோமுறையோவென்று கூவினாள் குறத்தியரும்
புற்றீசல்போலவேதான் புறப்பட்டார்சிறுகுறவர்
சில்லுபொல்வென்றுசொல்லிச் சிறுவராய்கூடினார்கள்
ஆளுக்கொருகுத்துவைத்து அடித்தாரேயர்ச்சுனரை
அர்ச்சுனன்தரித்திருந்த ஆபரணமுள்ளதெல்லாம்
கொண்டுவந்துதந்தாளே கொம்பனையாள்குறத்தியரும்
அல்லியர்க்காப்பட்டகளை போதுமென்றாரர்ச்சுனரும்
அர்ச்சுனமகாராஜா னையரிடம்வந்துவிட்டான் [ட்டார்
வாங்கிவந்தேனுடைமையென்று வணங்கியேதெண்டனி
அடபோதுமாயவனாரர்ச்சுனர்க்கேதுசொல்வார்
மாளிகைக்குப்போகவே மனமுண்டோஅர்ச்சுனரே
தருமர்தவிப்பாரே தம்பிமார்புலம்புவாரே
காணாதேயுன்னாச்சி கலங்கித்தவிப்பாளே
வந்துவெகுநாளாச்சே வாள்விசையனர்ச்சுனரே
பெண்ணாசைகொண்டுநீ புலம்பித்தவிக்கிறாயே
மாதர்மேலாசைகொண்டு மயங்குகிறாயர்ச்சுனரே
ஆணலழகுமன்னன் அர்ச்சுனனுமேதுசொல்வான்
எந்தவிதமானாலு மிளங்கொடியாளல்லியரை
தாலிகட்டிவையுமையா சுவாமிபெருமாளே
மாலையிட்டுவையுமையா மாயன்பெருமாளே
என்றுபணிந்தானே யியலானவாள்விஜயன்
மாயன்பெருமாளும் அரிராமரேதுசொல்வார்
ஆணலழகுமன்னன் அர்ச்சுனரே நீர்கேளும்
ஆண்டிவடிவாக அல்லியின்வாசலிலே
மடலூர்ந்துவந்தையாகில் மாலையிட்டுவைப்பேனடா
அப்படியேபோய்வருவேனையா செலவருளும்
அர்ச்சுனன் ஆண்டிவேசங்கொண்டு மடலூர்ந்தது.
மாயன்பெருமாளு மரிராமரப்போது
ஆண்டியைப்போலாக அர்ச்சுனற்குசெலவுதந்தார்
ஆணலழகுமன்ன னர்ச்சுனனுமேதுசொல்வான் [ல்
தொண்ணூறய்பத்துசென்ற துவண்டகிழவனைப்போ
பண்ணைப்பழம்போலே பழுத்தகிழவனைப்போல்
நாணற்பூபோலே நரைத்தகிழவனைப்போல்
தோலும்நரம்புகளுந் தொங்குதுகிழவனுக்கு

பழுத்தபழம்போலே பார்த்திபன்வடிவெடுத்தார்
காவிகஷாயமுடன் கைதனிலேமாத்திரையும்
திருநீறுந்தாமணிந்து திருகண்டமாலைசுற்றி
உருத்திராட்சந்தாவடமு முத்திராட்சமாலைகளும்
அன்றுரித்தமான்தோலும் அழகானபுலித்தோலும்
தொட்டமிதியடியுந தோளில்வைத்தகின்னரியும்
மாத்திரைக்கோற்பிரம்புகளும்மயிர்க்குச்சுங்கமண்டலமும்
வேலாயுதஞ்சூலாயுதம் விருதுகண்டகோடாலி
கௌரிநல்லபாத்திரமுங் கேதாரக்கங்கணமும்
சங்குசெயகண்டியையுந் தரித்தாரேபூஷணங்கள்
சடையுஞ்சடையுமாகத் தம்பிரானைப்போலானார்
ஆதிசிவன்போலாக அர்ச்சுனனார்வேடங்கொண்டார்
கைலாசநாதனைப்போல் காண்டீபர்வடிவெடுத்தார்
வேடங்கள்பூண்டாலோ வீராதிவீரனுந்தான்
ஆயர்பெருமாளு மங்கனமேயதுசெய்தார்
அல்லியரைப்போலாக அழகுபடமெழுதி
பாங்கிலும்நல்ல பவளசேனைநாயகியை
கூடவெழுதினாராம் கோவிந்தரெம்பெருமாள்
படத்தைப்பிடித்தவனும் பார்த்திபன்கைகொடுத்தார்
அல்லியதுவாசலிலே யங்கேபடம்விரித்து
அவள்-உடுத்திய ஆடையிலே ஒருமுழம்பிச்சைவாங்கி
வந்தாயேயாமாகில் மாலையிட்டுவைப்பேனடா
போய்வாருமென்றுசொல்லி பெருமாளனுப்பிவைத்தார்
வண்ணப்படமெடுத்து வாள்விஜயன்வழிநடந்தான்
தள்ளாடித்தள்ளாடி தளர்ந்துமெள்ளவழிநடந்தான்
தெருக்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
அல்லியரண்மனையா வாசாரவாசல்வந்தான்
ஆடிதாதியரே யரண்மனைக்குப்போகவேணும்
பிச்சைகேட்கவந்தேனம்மா போகவழிவிடுங்கள்
பொற்கொடியாள்வாசலிலே போய்வருவேனாச்சியரே
ஐயாபெரியவரே யறிவுபடைத்தவரே
நீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
ஆண்காற்றடியாது அல்லியதுகோட்டையிலே
போனப்பறந்துவரும் போகாதேசுவாமியென்றான்

ஆண்டிபரதேசி ஐயமென்றுவந்தவரை
வழியுமறிப்பார்கள் வைகத்திலாருமில்லை
தொண்டைற்றுஞ்சென்றதம்பா துவண்டகிழவனடி
தோலும்நரம்புகளும் தொங்குதுஎந்தனுக்கு [பாது
என்னைப்-பார்த்தவர்களெல்லோரும் பணிந்திடுவார்தப்
போகச்செலவுகொடும் போய்வருவேனச்சியென்முன்
வாசற்றடைக்காரர் வழிவிட்டார்சங்கமற்கு
அவ்வாசல்வாசலது அர்ச்சுனனும்தாண்டிவந்தான்
ஐந்தாம்படிதளத்தில் அர்ச்சுனனுர்வந்துவிட்டார்
புலியாசனம்போட்டு பொற்படத்தைமுன்னேவைத்தான்
ஆசனத்தின்மேலிருந்து அல்லிபடம்தான்விரித்து
மான்செவியுகண்ணையுமறைத்தாரேமாயவனார்
கண்ணிரண்டுந்தெரியாமற் காதிரண்டும்கேளாமல்
அல்லிமேற்சிந்தையா யர்ச்சுனன்புலம்பலுற்றான் [ன்
அல்லியேமெல்லிஎன்பான் வந்தனிலேபெண்ணேணெண்பா
வருவாளோஅல்லியென்பான் வாய்திறந்துபெண்ணே
என்பான், உன்னுசைகொண்டேனடி யூராசைபோமறந்
தேன், தாயாரை நான்மறந்தேன் தமயனதுபேர்மறந்தேன்
தம்பிதமயனைச் சகலரையும்நான்மறந்தேன்
உன்னுசைகொண்டுநா னுழன்றுகிறேனடி
மன்மதபாணமது மார்பைப்பிளக்குதடி
சித்தசன்விட்டகணை சிறுமார்புருகுதடி
காமக்கணையாலே கணைதாங்கிப்போறேனடி
அஞ்சுருபாணமது நெஞ்சுருகிப்போகுதடி
ஆறுருபாணமது மார்புருகிப்போகுதடி
மார்போடேமார்பணைத்தால் மகாவிடாய்திருமடி
என்றுதெளியுமோ எக்காலஞ்செல்லுமடி
அல்லிமேற்சிந்தையா யருச்சுனன்புலம்பலுற்றான்
அவ்வாசல்காக்கின்ற ஆயிரந்தாதியர்கள்
அவ்வார்த்தைதான்கேட் டதிகவிசாரங்கொண்டார்கள்
இதுவென்னகாலக்கேடோ வதறிவோம்தோழியரே
பாங்கியிலும்நல்லதொரு பவளசேனைதன்னருகில்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்ததாதியர்கள்
பவளசேனைபக்கத்தில் பணிந்தவர்களோதுசொல்வார்

ஆரோ ஒருகிழவ னாண்டி பரதேசியவன்
பிச்சைக்குவந்தான்காண் போகவழிதான்விட்டோம்
ஐந்தாங்கட்டுவாசலது அரண்மனையில்தான்வந்தான்
அல்லியரைப்போலாக அழகுபடமெழுதி
உன்னையுங்கூடவே ஒருமையாய்வைத்தெழுதி
வண்ணப்படம்விரித்து வல்லமையாய்படிக்கிருன்
அல்லியர்மேலாசையாக அலைந்துபுலம்புகிருன்
வாடிஎன்றும்போடிஎன்றும் வம்புதும்புஞ்சொல்லுகிருன்
ஆகடியம்பேசுகிரு னழும்புகளுஞ்சொல்லுகிருன்
சொல்லுகிறவார்த்தையது செவிகேட்கமுடியாது
இவ்வார்த்தைதான்கேட் டேதுசொல்வாள்பவளச்சேனை
அல்லிப்பெருமாளை அழகுமணஞ்சூட்டவென்று
மாருவேடங்கொண்டவனும் மாலையிடவந்தவன்காண்
ஆண்டிபரசேசியானு லழுப்புகளுஞ்சொல்வானே
எல்லாமறிந்திடுவோம் யாரடிதோழிகளே
ஓரைந்துதாதியர்கள் ஒருநிறமாயெழுந்திருங்கள்
ஒருநிறமாய்க்குழல்முடித்து ஒருநிறமாயெழுந்திருங்கள்
ஐந்துவிதப்பட்டுகளை அலங்காரமாயெடுத்து
பொன்னொருதட்டிலேயும் பூவொருதட்டிலேயும்
ஆடையொருதட்டிலேயும் ஆபரணமொருதட்டிலேயும்
ஒன்பதுரத்தினமு மொருதட்டில்தானெடுத்து
பண்டாரமுன்னாலே பாங்கியரேகொண்டுபோய்
ஐயருக்குமுன்னேவந்து அடிபணிந்துதெண்டனிட்டு
ஐந்துபேர்பெண்களில் யார்வேண்டும்சொல்லுமென்று
ஆபரணமுத்துவஸ்த்ர மாசையென்ருலெடுத்துக்கொள்
ளும், பெண்களின் மேலாசையென்ருல் பின்தொடர்ந்து
வருவோமென்று, ஐயரைக்கேட்பதற்கு ஆரணங்கேபோ
ங்களென்ருள், அவ்வளவில்தோழிமா ரதிகமுடனோடி
வந்து, ஐந்துபேர்தோழிமா ரலங்காரஞ்செய்துகொண்
டார், ஐந்துவிததட்டிலே அபரணபூஷணங்கள்
முத்துகளும்வஸ்திரமும் முன்னாலேகொண்டுவந்தார்
ஐயரதுமுன்னேவைத் தடிபணிந்துதெண்டனிட்டார்
ஐயாபெரியவரே யடியேன்சரணமென்ருர்
ஆச்சியருந்தனுக்கு அனுப்பிவைத்தாள்பூஷணங்கள்

ஐந்துபேருனக்கு அனுப்பிவைத்தார்சங்கமரே
ஆசையுள்ளபெண்களை நீ ரழைத்தால்வருவோமையா
வேண்டுமென்றரத்தினத்தை எடுத்துகொள்ளும்சங்கம
என்றந்தபெண்களுமே யிறங்கியேதெண்டனிட்டு [ரே
அல்லிமெல்லியெனபா னைந்தனில்பெண்ணென்பான்
வருவாளோ அல்லியென்பான் வாய்திறந்துபெண்ணெ
எப்போவருவாளோ என்னுசைதீர்ந்திடுமோ [ன்பான்
எனக்கு-டன்மதபாணமடி மார்புருகிப்போகுதடி
சித்தசன்விட்டகணை சிறுமார்புருகுதடி
காமக்கணையாலே கலைதாங்கிப்போரேனடி
அல்லியென்றுசொல்லி யலைகிருன்சங்கமனும்
கேட்டந்ததாதியுங் கிலேசங்கொண்டுதானடந்தாள்
பவளசேனை தன்னருகில் பக்கத்தில்வந்தார்கள்
ஆச்சியின்சொற்படிக் பக்கத்தில்வந்தார்கள்
அலங்காரந்தன்னுடனே யாபரணமுண்டுவைந்தோம்
ஏனென்றுங்கேட்கவில்லை யேறமுகம்பார்க்கவில்லை
அல்லியின்மேற்சிந்தைகொண் டலைகிருன்சங்கமனும்
அநேகநேரம்நின்று அலைந்துமேவந்துவிட்டோம்
இவ்வார்த்தைதான்கேட் டிளங்கொடியாள்பவளச்சேனை
எண்ணுதயெண்ணமெல்லாம் எண்ணியிளங்கொடியும்
ஐயமென்றுவந்ததொரு ஆண்டிபரதேசியல்ல
கட்டினவிருதழுத்திக் கலியாணம்பண்ணவந்தான்
தெய்வமென்றுநாமறியோஞ் கிவராஜரென்றறியோம்
தன்மனதிலேயடக்கி தான்வந்தாள்பவளச்சேனை
அல்லியின்பக்கம்வந்து ஆரணங்குதெண்டனிட்டாள்
ஏதுபவளசேனை யிந்நேரம்வந்ததென்ன
வேர்க்கவிரிவிர்க்க வெந்துயிலுஞ்சோர்ந்துவிழ
உச்சியுருமத்தி லுத்தமியிங்குவந்தோம்
ஆச்சியரேகேட்டாயோ அதிசயமானவிதம்
நாடுசுகப்படவே நாளாச்சுவாச்சியரே
உனக்குவரும்பாக்கியங்க ளெவர்க்குந்தெரியாது
ஆதிசிவனைப்போ லாண்டியிங்கொருவர்வந்தார்
படம்பிடிக்கும்பண்டாரம் பரமசிவன்போலேவந்தார்
மாணிக்கச்சொக்கலிங்கம் வந்தார்போற்காணுதம்மா

சடையுஞ்சடை முடியுந் தம்பிரான்போற்காணுதம்மா
கண்டுமறியோமம்மா கலியுகத்திற்றானறியோம்
தோலும்நரம்புகளுந் தொங்குதுகிழவனுக்கு
ஐந்தாங்கட்டுவாசலிலே ஐயர்வந்து நிற்கிறார்
தெரிசனம்பண்ணோமாகிற் றேஷவினை தீருமம்மா
பார்த்தால்பசிதீரும் பண்டாரமானவரை
ஆச்சியெழுந்தாரம்மா ஐயரைபோய்ப்பார்ப்போம்
என்றதுதான்கேட் டேதுசொல்வாளல்லியம்மாள்
ஆண்காற்றடியாத அரண்மனைவாசலிலே
ஆண்டிபரதேசி யையமென்றுவந்தாலும்
கொடுத்தனுப்பலாகாதோ கொம்பனையேயென்தோழி
எந்தனுடன்சொல்வானேன் எழுந்திருந்தாயென்றாள்
பாங்கியிலும்நல்ல பவளசேனையேதுசொல்வாள்
பிச்சைகொடுக்கிறது பெருமையென்றுபாராதே
நல்லோரைப்பெரியோரை நடந்துபோய்ச்சேவித்தால்
காசிபோகவேண்டுமோ கருமந்துலையாதோ
பெரியோரைச்சேவித்தால் பிழையொருக்காலுமில்லை
கைலாசநாதரைப்போற் காண்கிறதே ஆச்சியரே
என்வார்த்தைதள்ளாதேயெழுந்திருபோவோமென்றாள்
மகுடத்துரைச்சியவள் வாய்வரசியேதுசொல்வாள்
ஆண்டியைப்பார்ப்பதற்கு அழைக்கிறாய்யென்தோழி
ஆணழகுமன்னன் அரிகிழவனானாலும்
என்னைக்-கண்டானேயாமாகில் காமங்கொளுத்திடுமே
பரிகாசஞ்செய்தாலே பாங்கியரேஎன்னசெய்வேன்
வீரமணிவாளாலே வீசியெறிந்திடுவேன்
அப்படியேயாகுமம்மா ஆச்சியெழுந்திருங்கள்
சிங்காதனத்தைவிட்டு தேன்மொழியாள்தானெழுந்தாள்
பட்டுபளபளென்ன பாடகக்கால்சோதிமின்ன
நெற்றிசுற்றிநிகநிகென்ன நீலவிழிதுலங்க
காற்பிலிகலகலென்ன கைவளையல்பளபளென்ன
முந்தாணிநிலம்புரள மோதிரக்கால்சப்தமிட
தோழியரைத்தோளணிந்து தோகையும்தானடந்தாள்
பாங்கிமார்தோழியர்கள் பக்கப்புடைசூழ
வாசலும்வாசலது படியேழுந்தான்தாண்டி

ஆண்டியிருக்குமந்த அஞ்சாங்கட்டுவாசல்வந்தார்
அல்லிவரும்போது அர்ச்சுனனுமேதுசொல்வார்
என்னகாலல்லியரே எப்போமனதிறங்கும்
என்றைக்குகாணுவேனென்றுசைதிரும்படி
மாரனவனெய்தகணை மார்பைப்பிளக்குதடி
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதடி
மாலையிடுவதெப்போ மருவியணைவதெப்போ
கூடியணைவதெப்போ குறைகளெல்லாந்தீர்வதெப்போ
அல்லிமெல்லியென்பா னனந்தனிலேபெண்ணேயென்
பான், வருவாளோயல்லியென வாய்திறந்துபெண்ணே
யென்பான், கட்டழகியல்லியரும் காதாரக்கேட்டுவிட்டா
உருக்கியசெம்பொனது உக்கிரம்போற்கண்சிவந்து [ள்
பிறந்துவளர்ந்துநான் பூமிபாரமாண்டிருந்தேன்
நீன்முகனைக்கொன்றுநான நீலிபட்டமாணடேனே
வாடியென்றழைத்தவர்கள் வையகத்தில்யாருமில்லை
அடியென்றழைத்தவர்கள் அவனியிலாருமில்லை
ஆண்டியவன்வாயாலே அலைச்சல்படநாளாச்சே
எடுத்துவாபெரியகத்தி இருதுண்டம்போடவென்றாள்
எடுபரிசைபெரியகத்தி எடுத்துவாதாதியென்றாள்
பாங்கியிலும்நல்ல பவளச்சேனையேதுசொல்வாள்
பாண்டிப்பெருமாளே பதறுதேயாச்சியென்றாள்
அப்படியேகொண்டுவந்து ஆச்சியருகில்வைத்தாள்
கண்ணாடியெதிர்வைத்துக் கண்டாள்தன்படத்தழகை
தன்னழகுப்படத்தழகும் சரியாகத்தோன்றியது
உச்சிசுழியழகும் உரோமத்தின்போழகும்
மயிரழகுப்பாவனையும் மாபாவியெங்குகண்டான்
முகத்துத்திருவழகை மூதேவியெங்குகண்டான்
கண்ணின்விழியழகை கழுசிறையனெங்குகண்டான்
பவளம்போலென்னிதழும் பல்லழகுமெங்குகண்டான்
மார்பின்ஸ்தனமழகும் மச்சமுமெங்குகண்டான்
இடையழகுந்துடையழகும் யேனுதியெங்குகண்டான்
ஆபாரணந்தன்னழகு மாடைத்துயிலழகும்
வடிவழகுமொப்பனையு மாபாவியெங்குகண்டான்
என்னையெழுதிவந்த தல்லாமல்என்தோழி
உன்னையுகங்கூடவே யுடனுயெழுதிவந்தான்

எடுத்துவாபெரியகத்தி யிருதுண்டாய்போடவென்ருள்
பக்கச்சதைகளெல்லாம் பதைக்கிறதேயல்லியற்கு
பாங்கியிலும்நல்லதொரு பவளச்சேனையேதுசொல்வாள்
ஐயமார்பட்டதொரு அடைவுபோலாகுமிது
பாண்டியர்கள்பட்டதொரு பதலம்போலாகுமிது
ஆண்டியைவெட்டினலே யாரார்தலைபோமோ
அந்தக்கதையெனக் காரணங்கேசொல்லுமென்ருள்

பவளச்சேனை பாண்டியர்க ளடைந்த துன்பத்தை
அல்லியரசாணிக்கு கதையாகக் கூறினது.

வைகைபெருக்கெடுத்து மாவெள்ளப்போகையிலே
ஆராலும்வைகைதன்னை யடைக்கமுடியாமல்
பாண்டியராசாக்கள் பகுந்துகரைபோட்டார்கள்
ஆணுய்ப்பிறந்தவர்க ளரைஞாண்கயிர்கட்டினவர்
பெண்ணுய்ப்பிறந்தவர்கள் புடவையுடுத்தினவர்
அவரவாக்கொருபங்கு அளந்துகரைபோட்டார்கள்
அவரவர்கள்பங்கு அடைத்தார்கள்வைகைதன்னை
அன்ருடம்பிட்டுசுட்டு ஔவையார்வீற்றிருப்பார் [ள்
அவளுக்கொருபங்குமல்லோ அளந்துகரைபோட்டார்க
பங்குக்காளில்லாமல் பரதவித்துத்தானழுதாள்
மண்ணுஞ்சுமக்கரியாள் மனஸ்தாபப்பட்டழுதாள்
வாணியக்கிழவியவள் மனத்துயரமாகையிலே
மாணிக்கச்சொக்கலிங்கம் மகாதேவர்தானறிந்தார்
அட்டாளுஞ்சொக்கலிங்கம் ஆதிசிவன்தானடந்தார்
ஔவையார்மனத்துயரம் ஆயாசம்தீர்க்கவென்று
ஒட்டனைப்போலாக உலகளந்தணைத்துனரும்
கன்னங்கருத்தவர்போல் கர்த்தர்வடிவெடுத்தார்
தட்டுக்கூடையில்வைத்துக் கொஜக்கோலைகைபிடித்து
மண்வெட்டித்தோளில்வைத்து மகாதேவர்வாராரே
மதுரைத்தெருவிலே வந்தாரேசொக்கலிங்கம்
அப்போதுசொக்கலிங்கம் ஆதிசிவன்கூறிவாரார் [ய்
மண்ணெடுப்பேன்சுவர்வைப்பேன்வைப்பீரேகூலியாளா
என்றுமேசொல்லியல்லோ ஈஸ்வரனுர்கூறிவாரார்
கூறியேவந்தாரே கொடிமதுரைவீதியிலே
ஔவையார்தன்னருகே ஆதிசிவன்வந்துவிட்டார்
ஔவையருமப்போ ஒட்டனுக்கேதுசொல்வாள்

ஆரடாஒட்டாநீ அன்புடனேகேளுமென்றாள்
அன்றாடம்பிட்டுசுட்டு அங்காடிவிற்பேனடா
நூற்றொருபிட்டுசுட்டா லொருபிட்டுத்தேருமடா
உதிர்ந்ததோர்பிட்டுனக்கு வுத்தமனே நான்தருவேன்
மண்ணெடுத்துத்தாரடைத்து வருவாயோமன்னவனே
உதிர்ந்துபோகும்பிட்டையெல்லா முத்தமனே நான்தரு
சத்தியம்தப்பாமல் தருகிறேன்போவென்றாள் [வேன்
பிட்டுக்குலைகட்டுமம்மாபோயடைத்துவாரேனென்றான்
ஔவையாருந்தாமெழுந்து அடுப்பூதிமூட்டினாளே
பிட்டுக்குலையட்டியல்லோ போதச்சமைக்கலுற்றாள்
இருபதுபிட்டுசுட்டு யெடுத்தாளேகூன்கிழவி
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்சொக்கலிங்கம்
காலாறடைத்துவந்தேன் கன்னிபசிக்குதென்றார்
சுட்டீரேபிட்டுகளைச் சொல்லுமுதிர்ந்ததுண்டோ
எனக்கென்றுஎங்கிருந்தா யீடழிவானொட்டாநீ
இந்தாருமென்றுசொல்லி ஈந்துவிட்டாள்பிட்டதனை
குறையாரடைத்துவாரேன் கொப்பெனவேபிட்டுசுடும்
புரக்கடையிற்போவாளும் புன்னைமரத்தடியிருந்தார்
கொண்டுவந்தபிட்டையெல்லாங் கொப்பெனவேயுண்டு
ஒருநாழிதரித் தோடிவந்தார்சொக்கலிங்கம் [விட்டார்
அரையாரடைத்துவந்தே னுச்சிபசிக்குதென்றார்
சுட்டீரோபிட்டுகளைச் சொல்லுமுதிர்ந்ததுண்டோ
ஐம்பதுபிட்டுசுட்டே னனைத்துமுதிர்ந்ததடா
இந்தாருமப்பாவென் றெடுத்துக்கொடுத்துவிட்டாள்
வாங்கியந்தபிட்டதனை வழிநடந்தார்சொக்கலிங்கம்
கொன்றைமரத்தடியிற் கொண்டுவந்துதான்புசித்தார்
ஈரரைநாழிசென் றெழுந்தவருமோடிவந்தார் [டார்
மார்மேலும்தோள்மேலும் மண்வாரிப்போட்டுக்கொண்
முக்காலாறடைத்துவந்தேன் மெத்தபசிக்குதடா
சுட்டீரோபிட்டுகளுங் சொல்லுமுதிர்ந்ததுண்டோ
நூற்றொருபிட்டுகளுஞ் சுட்டாளேகூன்கிழவி
ஒருபிட்டுதான்தவிர மற்றபிட்டுதிர்ந்தனவே [தாள்
உதிர்ந்திருந்தபிட்டையெல்லாம் உத்தமனார்கைகொடுத்
வாங்கியந்தசொக்கலிங்கம் வழிநடந்தார்மெல்லெனவே
குருந்தமரத்தருகே கொப்பெனவேவந்தமர்ந்தார்

கொண்டுவந்தபிட்டையெல்லாம் கொப்பெனவேயுண்டுவிட்டார்
தலைக்குயரந்தட்டுவைத்து சங்கரனார்பள்ளிகொண்டார்
ஆனந்த நித்திரையாய் ஆதிசிவன்போனாரே
ஒருபிட்டுவிற்றாளே உத்தமியாள்கூன்கிழவி
நூறுபிட்டுலாபமதை நேருடனேகண்டுகொண்டாள்
ஆறாயிரம்பாண்டியரு மையரவர்வந்தார்கள்
வைகைக்கரைபார்த்து வருகையிலேபாண்டியர்கள்
கொஞ்சமாய்ஜலம்பெருகிக் குறையாறவருகிறது
கண்டந்தபாண்டியருங் கடிதானகோபமுடன்
ஆருதடாபங்கிதுதா னடைக்காமல்போனதென்ன
எவருதடாபங்கிதுதா னேதுக்கடைக்கவில்லை
பிட்டுவிற்கும்வாணிச்சி பொற்கொடியாள்பங்குதுதான்
ஆள்பேருசேவகரும் அதிவிரைவாயோடிவந்தார்
ஔவையாரைதானுமங்கே யழைத்துவந்தாராசரண்டை
வந்துமேதெண்டனிட்டாள் வாழ்பாண்டிராசருக்கு
வாடி நீகூன்கிழவி மாசக்கன்னிஔவையாரே
அவரவர்கள்பங்குதனை யடைத்தார்கள்வைகைதன்னை
உன்பங்கையடைக்காமற் போனதென்னகூன்கிழவி [லி
ஆரோஒருவொட்டனையா ஆரடைப்பேனென்றுசொல்
நூறுபிட்டுவாங்கிதின்று நேராயடைப்பேனென்றான்
பிட்டுதின்றபாவியைத்தான் பின்வரக்காணேனே
ஆரடைத்தானென்றிருந்தேனந் நீதம்பண்ணிவிட்டான்
அவ்வார்த்தைதான்கேட்டா ராயிரம்பாண்டியர்கள்
ஆரடாசேவகரே அவனைப்பிடியுமென்றார்
தேடிப்பிடியுமென்றார் சீரானஒட்டனைத்தான்
அப்போதுசேவகர்க ளாராய்ந்துதேடலுற்றார்
மதுரைத்தெருவுகளும் வனங்களும்தோப்புகளும்
தேடிவருகிறார்கள் சீரானஒட்டனைத்தான்
மரத்தடியில்பள்ளிகொண்ட மன்னவனைக்கண்டார்கள்
கண்டுபிடித்தார்கள் கடுகெனவேகூட்டிவந்தார்
பாண்டியராசாக்கள் பார்த்தவருங்கோபமதாய்
வாணியக்கிழவியை நீ வனமோசஞ்செய்தாயடா [ட்டு
ஆறடைப்பேனென்றுசொல்லி பிட்டெல்லாந் தின்றுவி
தண்ணெடுத்துப்போட்டுநீ வைகையடையுமென்றால்
தட்டிலேமண்வாரித் தலைமேலெடுத்துக்கொண்டு

அடிமேலடிவைத்துமல்லோ அஞ்சிநடைநடக்க
ஆதிசிவனென்று அறியாமற்பாண்டியர்கள்
பிட்டுதின்றமயக்கத்தினுற் போகமனம்வல்லையோடா
என்றுசொல்லிபாண்டிய ரீஸ்வரரைத்தானடித்தார்
பாரப்பிரம்பாலே பாண்டியரடித்துவாரூர்
அடிபட்டசொக்கலிங்கம் அம்மண்ணைபோட்டுவிட்டார்
ஆறுமடைத்தவ ரரூபியாய்ப்போய்மறைந்தார்
ஆருயிரம்பாண்டியற்கு மடிதுடையிற்பட்டதுவே
ஆறுமாதபிண்டத்திற்கு மந்தவடிபட்டதம்மா
அப்படிப்போலாகுமிது அல்லியம்மாமிஞ்சாதே
ஆண்டியரைக்கொன்ருக்கா லாராதலைபோமோ
உன்கையாற்கொல்லாதே கட்டழகிசங்கமரை
கொல்வாரைவிட்டுமல்லோ கொல்லவிடுசங்கமரை

ஆண்டியை சர்ப்பங்களால் கொல்ல நினைத்தது.

பாம்புகளைக்கொண்டு பாரவிஷமேற்றி
சர்ப்பங்களைவிட்டுநீ சங்கமரைக்கொல்லுமென்ருர்
அவ்வார்த்தைதான்கேட் டல்லிப்பெருமாளும்
ஆரடித்தோழிகளே அலங்காரத்தோழிகளே
பாம்புபிடாரர்களை பார்த்தோடியழையுமென்ருள்
ஓட்டம்நடையுமாக ஓடியழையுமென்ருள்
அவ்வார்த்தைதான்கேட் டாரணங்குதோழிமாரும்
பாம்புபிடாரனைப் பத்தினிமாராஞேர்கள்
அல்லிப்பெருமாளு மழைத்தோடிவாருமென்ருள்
வாருங்களென்றுசொல்லி வரவழைத்தார்தாதியர்கள்
மகடிக்குழலூதி மகாவிருதுகட்டினுர்கள்
பாம்புப்பெட்டிதோளில்வைத்துப் பிடாரப்பெண்கள்வா
வீதியும்வீதியது தெருவும்பலக்கடந்து [ருர்கள்
அல்லியம்மாள்வாசலிலே அனைவோரும்வந்தார்கள்
மகுடத்துரைச்சியற்கு வந்துதெண்டம்பண்ணினுர்கள்
எங்களை அழைத்தவகை யேதுவகைசொல்லுமென்ருர்
உங்களை அழைத்ததுதா னென்ஞற்குறையுமில்லை
காட்டிற்குப்போங்களடி கன்னிபுத்தில்மருந்துவைத்து
கரிநாகஞ்செந்நாகம் காற்கோடகப்பாம்புதனை
மண்ணுளிப்பாம்புகளும் மனைவிரியன்தாசிரியும்
மட்டில்லாப்பாம்புகளை வகைவகையாய்ப்பிடித்து

செல்மமுருகிறதே சிந்தைதணலாகுதம்மா
பண்டாரமானவரைப் பத்தினியேகொல்லுமென்றாள்
கும்பிட்டுதெண்டனிட்டாள் குணமானபாம்பிற்கு
அவ்வசனங்கேட்ட தத்தண்டபாம்புகளும்
செந்நாகமுள்ளதெல்லாஞ் சீறியெழுந்தனவே
கரிநாகமுள்ளதெல்லாங் கதறியெழுந்தனவே
இருதலைப்பாம்புகள்தா னெழும்பிவருகுதங்கே
மூன்றுதலைநாகமெல்லா முடுகிவருகிறதே
சீறிவருநாகமெல்லாந் தேர்விஜயனைப்பார்த்து
ஓடிவரும்பாம்பனைத்து மர்ச்சுனரைக்கண்டதுவே
ஆனாலழகுமன்ன னர்ச்சுனராஜனென்றான்
முன்னழகும்பின்னழகும் முதுகில்மச்சரேகைகளும்
பல்லிற்பரசவீணை பாதத்திற்செந்தாமரை
மீசைமுறுக்கழகும் விழிநல்லபார்வைகளும்
அவரழகைத்தான்பார்த்து அர்ச்சுனரென்றறிந்து
நாகக்கன்னிமணவாளன் நல்விஜயராஜனல்லோ
தருமரதுதம்பியராந் தனஞ்செயனர்ச்சுனர்காண்
வெற்றிமதயானை விமருக்குத்தம்பியலலோ
மாயரதுமைத்துனர்காண் வாள்விஜயரிவர்காணும்
அல்லியரைமாலையிட ஆண்டிகோலமானாரே
மாலையிடவேணுமென்று வேடங்கொண்டுவந்தாரே[ரும்
மாப்பிள்ளையைக்கொல்லவென்று மருந்திட்டாளல்லிய
கணவனைக்கொல்லவென்று கட்டழகிமருந்திட்டாளே
அல்லியதுவார்த்தைக்கேட்டருச்சுனரைக்கொல்லவென்
பொற்கொடியாள்நாகக்கன்னி போதச்சிறையாவாள் [று
கனமோசம்வந்துவிடும் கன்னிசெய்தகாரியங்கள்
செல்வமகனுக்குச் செங்கானல்வீசுதென்று
ஐந்துதலைநாகமது அர்ச்சுனற்குகுடைபிடிக்கும்
தோள்மேலேயேறுவதுந் தும்பிபறப்பதுவும்
கீதங்கள்பாடுவதும் கொண்டானடிப்பதுவும்
அரும்பவனிகூத்துகளும் ஆடுஞ்சிலநாகம்
மகுடத்துரைச்சியவள் மாதரும்பார்த்துவிட்டாள்
பாம்புமயங்கவேதான் பாவிமருந்துவைத்தான்
வானஞ்சுழல்வதற்கு மருந்துண்டுபாவிகையில்
என்னைமயக்கவொரு மருந்தரியமாட்டானோ

ஆண்டியைக்கொல்லவேணு மதிதுரிதமாய்வாருமென்
ருன், உச்சிதங்கள்வேணமட்டு முங்களுக்குநான்தருவே
பாம்புப்பிடாரப்பெண்க ளாரணியம்வந்தார்கள் [ன்
புற்றுக்குமருந்துவைத்தார் பெரும்பாம்புதான்பிடிக்க
மந்திரத்தைச்சொல்லியவர் மகடிக்குழலூதினர்கள்
புற்றீசல்போலாகப் புறப்பட்டதுபாம்புகளும்
கரிநாகஞ்செந்நாகங் கறுத்த நிறப்பாம்புகளும்
ஆடிவரும்பாம்புகள்தா னமர்ந்ததுபெட்டியிலே
சீறிவருகின்ற செந்நாகமுள்ளதெல்லாம்
மட்டில்லாப்பாம்புகளை வகையுடனேதான்பிடித்தார்
காவடியைதோளில்வைத்து கடுகியேவாருர்கள்
விருதுகளைக்கட்டிக்கொண்டு மகடிக்குழலூதினர்கள்
காடுசெடிதாண்டி கடுகிவந்தார்தென்மதுரை
செட்டித்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
அல்லியம்மாள்தன்னுடைய அரண்மனைக்குவந்தார்கள்
வாயலூர்வாசலது யேழுகட்டுந்தான்தாண்டி
பத்தினிக்குதெண்டனிட்டு பாம்புகளை முன்னேவைத்தார்
வகைக்கொருப்பாம்பாக மாதேநாம்கொண்டுவந்தோம்
கொண்டுவந்தோமாச்சிஎன்று கொம்பனைக்குதெண்டனி
மருடத்துரைச்சியு மாதுமவளேதுசொல்வாள் [ட்டார்
ஆர்பெண்தாதிகளே அலங்காரத்தோழிகளே
பாலும்பழமுமாய் பாம்புகட்குவையுமென்ருள்
அபினிமருந்துகளு மடைவானசாராயமும்
முட்டையுடைத்துமல்லோ முன்னலேவையுமென்ருள்
கொண்டுவந்துவைத்தார்கள் கொம்பனைமார்பாம்புகட்கு
அத்தண்டபாம்புகளு மாகாரமுண்கிறது
கண்கள்சிவக்கிறதே காந்தாளமாயினதே
அவ்வலரிக்கண்களெல்லாம் செவ்வலரிபூத்ததங்கே
பாம்புகளைபார்த்துமல்லோ பத்தினியாளேதுசொல்வாள்
அங்கயற்கண்ணம்மை யருளாலேயான்பிறந்தேன்
பட்டமுஞ்செங்கோலும் பாதிநாடாளுகிறேன்
வாடியென்றும்போடியென்றும் வப்புசொன்னோருமில்
ஆண்டியிடவாயாலே அலைச்சல்படுகிறேனே [லே
சாதிகெட்டபண்டாரம் தாறுமாருய்ப்பேசுகிருன்
என் அங்கமுருகிறதே ஆவிதணலாகிறதே

ஆர்கா ணுந்தா திகளே யலங்காரத்தோழிகளே
வெள்ளிப்பிரம்பாலே விசுங்கள்பாம்புகளை
பாரப்பிரம்பாலே பாம்பையடியுமென்ருள்
தாதிமாரப்போது சவுக்கெடுத்துவீசலுற்ருர்
மாறியடிக்கலுற்ருர் வண்ணவிதப்பாம்புகளை
அப்போதுசர்ப்பமெல்லா மல்லியரைப்பார்த்துரைக்கும்
மாப்பிள்ளை நீயுமாக மணமுகூர்த்தம்செய்கையிலே
அன்னவூஞ்சலாடுதற் கழைத்தால்வருவோமே
என்றந்தபாம்புகள்தா னெகிர்ப்பறந்ததுவே
பாங்கியிலும்நல்லதொரு பவளசேனை நீகேளும்
எந்தவிதத்தினுலே கொன்றிடுவோமென்தோழி
பண்டாரந்தன்னைக்கொல்ல பக்குவஞ்சொல்லுமென்ருள்
ஆறுற்கேளாச்சியரே ஆலோசனைசொல்லுகிறேன் [ள்
நீபிறக்கதவசுபண்ண நீதியுள்ளகாட்டானை
ஆனையையழைத்துவந் தனந்தமயக்கமேற்றி
கொல்லவிடலாமோ கொம்பனையேசங்கமனை
அவ்வார்த்தைதான்கேட் டல்லிமனமகிழ்ந்து
ஆனையினுல்ஆண்டியைக்கொல்ல வகைதேடினது.
ஆராடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
காட்டானைதன்னை நீங்கள் கடுகவழையுமென்ருள்
ஆச்சியரே நீர்கேளு மடியேனெருவார்த்தை
நீபிறக்கதவசுபண்ண நீதியுள்ளகாட்டானை
வெறித்துதிரிகிறதே வெங்கானகந்தனிலே
தன்னிழலைத்தான்பார்த்து தன்மதப்பொழிகின்றது
கொம்பினுற்மலையையல்லோ குத்திப்பிளக்கிறதே
மலைகள்பருவதத்தை மண்ணேடேசாய்த்துவிடும்
மதப்பட்டுதிரியுதம்மா மயிலனையேயவ்வானை
எங்களைக்கண்டாலே எடுத்துஅறைந்துவிடும்
செத்துமடிந்திடுவோம் சிவலோகம்சேர்ந்திடுவோம்
சென்ருேமேயாமாகில் திரும்பிவருவதில்லை
இவ்வார்த்தைதான்கேட் டேதுசொல்வாளல்லியரும்
கணையாழிமோதிரத்தைக் கழற்றிக்கொடுத்தாளே
மூத்திரைமோதிரத்தை மொய்குழலாள்கொண்டுநீங்கள்
ஆனைமுன்னேவைத்து அடிபணிந்துதெண்டனிட்டு
நீபெற்றமகளல்லியம்மாள் புலம்பியழுகிருளே

உன்னைப்-பார்க்கமனதாகப் பத்தினியாளிருக்கிறாளே
அழைத்தோடிவாருமென்று சொன்னாளேயல்லியம்மாள்
கணையாழிகழட்டியல்லோ கடுகழைத்துவாருமென்றாள்
ஓட்டம்நடையாக ஓடுங்கள்தாதியென்றாள்
மத்தகஜந்தான்பிடிக்கு மாவொட்டப்பெண்களவர்
தங்களதுமாளிகையிற் சடுதியிற்போய் நுழைந்து
புத்திரரானவர்க்குப் புத்திமிகவுரைத்து
மத்தகஜந்தான்பிடிக்க மகாவனம்போகிறோமே
சாவோமோபிழைப்போமோ சாமிசெயலெப்படியோ
பிழைத்துநாம்வந்தோமானல் பிள்ளைமுகம்பார்ப்போம்
இல்லாமற்போச்சுதானல் ஈசன்பதம்சேருகிறோம்
பிள்ளைகளைக்கூட்டிவந்து பெரியோர்கையிலொப்புவித்து
வாய்க்கரிசிவாங்கி மலைதனிற்போகலுற்றார்
இருண்டவனங்களெல்லா மெங்கெங்குந்தேடலுற்றார்
மலையோரம்படுத்திருந்த மதயானைகண்டதுவே
யானையதுவீறிட்டு அலங்காரமாயெழுந்து
தன்னிழல்தான்பார்த்து தரையில்நடக்குமது
கொம்பால்மலையைக்குத்தி கிளம்பிற்றுயானையது
கண்டுபயந்தார்கள் கட்டழகிபெண்களெல்லாம்
யானையைக்கண்டுமவ ரடிபணிந்துதெண்டனிட்டார்
கணையாழிமுன்போட்டுக் கன்னிமாரேதுசொல்வார்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குநாயகியாள்
நீ-தபசுபண்ணிபெற்றதொரு தையநல்லாளல்லியரும்
உன்னை-காணவிருப்பமாகிக் கலங்கித்தவிக்கிறாளே
பார்க்கமனதாகிப் பதைப்பதைத்துப்புலம்புகிறாள்
போசனம்பண்ணுமற் புலம்பித்தவிக்கிறாள்காண்
உண்ணாளுடுக்கா ளொருபொழுதும்நீராடாள்
படுக்கைப்பொருந்தாளே பத்தினியாளல்லியரும் [றாள்
அழுதகண்ணுஞ்சிந்தையுமா யழைத்தோடிவாருமென்
நீ-வாராமற்போனுக்கால் மாண்டுமடிவேனென்றாள் [ள்
செத்துமடிவேனென்றாள்செலவழிந்துபோவேனென்று
கடுகெனவேவாருமென்று கையெடுத்துதெண்டனிட்
கேட்டந்தமதயானை கெர்ச்சித்துதான்வருமாம் [டார்
யானைவரும்போது அழகானதாதியர்கள்
தெத்துத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு

அல்லியம்மாள்தன்னருகே அடிபணிந்துதெண்டனிட்
யானைவருகுதென்று யாவருமேதெண்டனிட்டார் [டார்
மதுரைத்துரைச்சியவள் மாதுகன்னிதான்கேட்டு
கரும்புசுமைகளைத்தான் கட்டுக்கட்டாய்வையுமென்றாள்
தென்னமட்டைவாழைமட்டை தோழிகளேவையுமென்
பச்சரிசிதேங்காயும் பாங்கிகளேவையுமென்றாள் [றாள்
ஐங்கலஞ்சாராயமு மறுகலமெட்டிக்கொட்டை
கெஞ்சாவபினிகளும் கொண்டுவந்துவையுமென்றாள்
இடிமருந்துபாஷாண மிளங்கொடியே வையுமென்றாள்
கொண்டுவந்துவைத்தார்கள் கொம்பனையாள்முன்னாலே
வாழ்மதுரைப்பட்டணத்தில் மத்தகஜம்வருகிறதாம்
யானைவருகுதென்று அம்மதுரைப்பட்டணத்தார்
மதுரைக்குடிபடைகள் மாளிகையிற்போய்புகுந்தார்
ஒடியொழிப்பார்க ளுத்தமரானவர்கள்
அப்போதுமத்தகெஜம் ஆங்காரமாய்நடந்து
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டார்
அல்லியம்மாள் தன்னுடைய அரண்மனையில்வந்ததுகா
யானையைக்கண்டவுடன் அல்லியெழுந்திருந்து [ண
மத்தகஜம்முன்னேவந்து வணங்கியேதெண்டனிட்டாள்
யானைக்குமுன்பாக ஆகாரம்வைத்தார்கள்
வயிராறவுண்டதுவே மயக்கம்பெரிதாச்சு
கண்கள்சிவந்தனவே கனமயக்கம்கொண்டதுவே
அல்லிப்பெருமாளு மடிவணங்கியேதுசொல்வாள்
நான்பிறக்கவே ணுமென்று நல்லதவஞ்செய்தீர்களே
நீர்-தபசுபண்ணிபெற்றமகள் தடுமாறிநின்றுவிட்டேன்
அன்று-ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டித்தலையறுத்து வீரபட்டங்கட்டிக்கொண்டேன்
நீன்முகனைக்கொன்றுநான் நீலிபட்டமாளுகிறேன்
வாடிபெண்ணேயென்பார்கள் வையகத்திலாருமில்லை
அடியென்றழைத்தவர்க ளாருமில்லைபூமியிலே
ஆண்டியிடவாயாலே அலைச்சல்படுகிறேன்யான்
சாதிகெட்டபண்டாரந் தாறுமாறாய்ச்சொல்லுகிறான்
சொல்லாதுஞ்சொல்லுகிறான் சென்மமுருகுதையா
பொறுக்கமுடியவில்லை பாவியவன்சொலவதெல்லாம்

செல்வம்குலைந்ததையா சீரழிந்துநின்றுவிட்டேன்
ஆண்டியைக்கொல்வதற்கு அழைப்பித்தேனுச்சியென்
அல்லியுடவார்த்தைகேட்டு ஆங்காரக்கோபமுடன்
கண்சிவந்துமத்தகஜம் காளையரைக்கொல்வதற்கு
தும்பிக்கைதூக்கியல்லோ சுழற்றியரையவரும்
முதுகில்மச்சரேகைகளும் முன்னழகுகண்டதுகாண்
மச்சவடிவுகொண்டு மயங்கிற்று அப்போது
மச்சரேகைபடைத்தவர்கள் மண்டலத்தில் யாருமில்லை
அருச்சுனனொருவனல்லால் அவனியிலேயாருமில்லை
வாள்விஜயனல்லாமல் மண்டலத்திலாருமில்லை
தேவேந்திரன்மகன்காண் திருமாற்குமைத்துனன்காண்
திரௌபதையைமாலையிட்ட தேர்விஜயனிவர்காணும்
அல்லியரைக்கன்னமிட ஆண்டிக்கோலமாகிவந்தார்
மாப்பிள்ளையைக்கொல்லவென்றுமருந்திட்டாள்மாபாவி
கணவனைக்கொல்வதற்குக் கனத்தமருந்திட்டாளே
அல்லிதன்வார்த்தைகேட்டுஅருச்சுனரைகொன்றக்கால்
ஆயர்பெருமாளும் அறிந்தால்பழுதுவரும்
வீமனறிந்தாலே வெகுமோசம்நேர்ந்துவிடும்
அல்லியற்கேற்றதொரு அழகுள்ளபுருஷனிவன்
மகளாரைமாலையிட வையகத்திலாருமில்லை
செல்வமருமகன்தான் சீரழியக்காரணமேன்
அருமைமருமகன்தா னலைச்சல்படுவானேன்
தும்பிக்கையாலே சுழற்றிஎடுத்துக்கொண்டு
கும்பஸ்தலத்தில்வைத்து கூத்தாடுமேயானையது
கண்டாளேயானைதனை கண்கொள்ளாக்கோபமுடன்
மதயானைதான்மயங்க மருந்தறிவான்பாவியவன்
காட்டானைதான்மயங்க கனமருந்தறிவாண்டி
என்னைமயக்கும்வகை இவனறியமாட்டானே
ஆராடிதாதிகளே அடியுங்கள்யானைதன்னை
மாறிஅடியுமென்றாள் மதயானைதன்னையவள்
அப்போதுமத்தகஜம் அல்லியரைப்பார்த்துரைக்கும்
மாப்பிள்ளைநீயுமாக மணக்கோலம்வரும்போது
என்னையழைத்தாலும் ஏந்திழையேவருவேனோ
வேண்டியழைத்தாலும் வருவேனோமெல்லியரே
என்றுநடந்ததே இருண்டவனங்களுக்கு

மதயானைபோனபின்பு மாயவரேதுசெய்தார்
மாரல்செவியுங்கண்களிரண்டு மாயவனார்தெரியவைத்தார்
கண்ணுந்தெரிகிறதே காதிரெண்டுங்கேட்கிறதே
அல்லிப்பெருமாளு மாரணங்கேதுசொல்வார்
பிரங்கியிலும்நல்லவளே பவளசேனைநாயகியே
இந்தகிழவனைதான் என்செய்வேன்தோழியென்றாள்
செல்வங்குலையுதடி தேன்மொழியேயென்னசெய்வேன்
பாண்டிப்பெருமாளே பதறுதேசற்றேநில்லும்
அறிந்துநான்வந்துமல்லோ ஆச்சியரேசொல்லுகிறேன்
தெரிந்துநான்வந்துமல்லோ சொல்லுகிறேனுந்தனுக்கு
திடுக்கென்றெழுந்து தோழியும்வருகிறாளே
சங்கமனாருகில்வந்து தையலருமேதுசொல்வாள்
ஐயாபெரியவரே யறிவைப்படைத்தவரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தபசுபண்ணி புத்திமிகக்கற்றவரே
எங்கிருந்துவந்தீர்கா னிங்கேபுலம்புகிறாய்
ஏதுவகையாக இங்கேவந்தீர்சொல்லுமையா
ஆர்காணுமாச்சியரே யருகில்வந்துகேட்கிறது
மல்லிகார்ச்சுனமிருந்து வந்தேனிதுவழியாய்
துங்கபத்திரிகோதாவரி துய்யகிருஷ்ணநதியுடன்
கேதாரஞ்சரஸ்வதியும் ஸ்நானங்களாடிவந்தேன்
பாராதவஸதலங்களில்லை பணியாதகோவிலில்லை
முழுகாததீர்த்தமில்லை மிதியாதகோவிலில்லை
புண்ணியகோடிதீர்த்தமாடிப்போரேனம்மாராமேசுவரம்
பிட்டுக்குமண்சுமந்த பித்தரையுந்தெரிசித்தேன்
நாறுபத்துஞ்சென்றதம்மா நிகரானயென்வயது
தோலுநரம்புகளும் தொங்குதுபாரெந்தனுக்கு
இப்பவோபின்னையோ இன்னமரைநாழிகையோ
எப்பவோஎன்சடலம் இறப்பதுநானறியேன்
அல்லிப்பெருமாளும் அரசாளும்நாயகியாள்
கன்னிகைபென்றார்கள் கட்டழகியல்லியரை
பத்தினியாளென்றுவெகு பேர்களுஞ்சொன்னார்கள்
ஆகையினாலேதா னரணங்கைத்தேடிவந்தேன்
எங்கள்-முப்பாட்டநாளையிலே தைத்தபழஞ்சோளி
அக்ஷயபாத்திரந்தா னடிபீரலாச்சுதென்று

சோளிக்குபழஞ்சேலை கேட்கவந்தேன்சுந்தரியே
உடுத்திக்கிழிந்திருக்கு முள்ளாடையொருமுழந்தான்
எனக்குமவள்தந்தாலே எழுந்திருந்துபோவேனம்மா
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குவந்துவிட்டாள்
அல்லியற்குதெண்டனிட்டு அன்புடனேதுசொல்வாள்
ஐயர்பெரியவர்மே லாயாசப்பட்டீரே
அவர்-முப்பாட்டநாளேயிலே தைத்தபழஞ்சோளியம்மா
அக்ஷயபாத்திரந்தா னடிபீரலாச்சுதே
சோளிக்குபழஞ்சேலை கேட்கிறார்சுந்தரியே [ள்
பிச்சைகொடுத்தனுப்பும் போய்விடுவான்சுவாமியென்று
அவ்வார்த்தைதான்கேட்டு அரசுதுரைநாயகியாள்
அறுபதுமுழம்புடவை அழகானபச்சைவடம்
எடுத்துக்கொடுங்களடி இரக்கமில்லாபாவியற்கு
நச்சுநச்சென்று நரைக்கிழவன்போராட்டம்
எப்போதான் துலையும் எடுத்துக்கொடுங்களென்றாள்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள்
பச்சைவடங்கொண்டுவந்து பண்டாரமுன்னேவைத்தார்
ஐயாபெரியவரே யறிவுபடைத்தவரே
சோளிக்குபழஞ்சேலை சுந்தரியைக்கேட்டீரே
முப்பதுமுழம்புடவை முன்னேவைத்தோமெடுத்துப்
ஆர்காணுமாச்சியரே ஆரணங்கேநீர்கேளும் [போம்
இப்படிக்குவேணுமானால் எனக்குமனேகமுண்டு
நாட்டிலேநான்குலட்சம் நமக்குக்கொடுப்பார்கள்
பத்தினியாள்கட்டினதோர் பாவாடையுள்ளாடை
உள்ளாடைசேலைதனில் ஒருமுழம்வேண்டுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட் டல்லியருங்கோபங்கொண்டு
இப்படிக்குபிச்சைகேட்டோ ருண்டோவுலகதன்னில்
பாங்கியிலும்நல்லதொரு பவளசேனையேது சொல்வாள்
ஆச்சியரேயுந்தனுக்கு அதனாற்பழுதுமில்லை
கொடுப்பதினாலேயம்மா குறையொன்றுவருவதில்லை
அழுக்கில்புழுங்கினதோர் ஆடைதந்தாற்சேதமென்ன
கொடுக்காமற்போனாலவன் கொஞ்சத்தில்விடுவதில்லை
சனியன்தொலையவேண்டும் சற்றேகொடுத்தனுப்பும்
அப்படியேநான்கொடுத்தா லாண்டியவன்போவானோ
கேட்டுவாதாதியரே கேடுகெட்டசங்கமனை

பாங்கியிலும்நல்லவளாம் பவளசேலையோடிவந்து
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
திரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
உள்ளாடைசேலையது ஒருமுழந்தந்தாலே
போகிறீரோபெரியவரேபுண்ணியரேசொல்லுமென்றாள்
ஆனாற்கேளாச்சியரே அதிலுமொருவயணம் [வேண்
ஏந்திழையாள்பிச்சைதந்தா லிருகையாற்வாங்கிக்கொள்
தேன்மொழியாள்கைதலத்தை தீண்டியேயான்பிடித்து
அள்ளியே நீறிடுவோம் ஆனந்தமாரியற்கு
இருகையினால்வாங்கி ஏந்திழையாளளிக்கவேண்டும்
உலகத்திலுள்ளபடி உத்தமியேதப்பாது
அவ்வார்த்தைதான்கேட்டு அழகானதாதியரும்
மருடத்துணைச்சியற்கு வந்தவளும்தெண்டனிட்டாள்
ஆச்சியரே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
ஐயருக்குபிச்சையது ஆரணங்கேதந்தபின்பு
உன்- கைத்தலத்தைதானபிடித்து கடுகியேநீறிடுவார்
வாங்கிதரித்துக்கொண்டால்வாழ்த்தியவர்போய்விடுவார்
உலகத்திலுள்ளபடி உனக்குக்குறைவுமில்லை
தலையினெழுத்திதுவோ தையலரேஎன்தோழி
உடுத்தியசேனையது உள்ளாடைதான்கிழித்தாள்
இந்தாருஞ்சுவாமியென்று ஈந்தாளேயல்லியம்மாள்
வாங்கியந்தசங்கமனும் வாழ்வரசிமுகம்பார்த்து
அள்ளியேநீறுமிட்டார் ஆரணங்குகைத்தலத்தில்
பத்தினியைவாழ்த்தியவர் பல்லொளியைக்காட்டினரே
அடிவானமின்னலைப்போ லல்லியற்குத்தோன்றினது
கண்டுமயங்கினளே கட்டழகியல்லியவள்
காண்டீபனர்ச்சுனருங் காற்றாய்ப்பறந்துவிட்டார்
தெத்துத்தெருதாண்டி சீரானகாட்டில்வந்தார்
மாயன்பெருமாளிடம் வந்துவிட்டானர்ச்சுனனும்
அல்லியின்வாசலிலே அதிசயங்களுள்ளதெல்லாம்
மாயருடன்சொல்லியல்லோ மனஸ்தாபப்பட்டழுதான்
மாலைதரிப்பதெப்போ மனதுகுறைதீர்வதெப்போ
கூடியணைவதெப்போ குறைகளெல்லாந்தீர்வதெப்போ
மன்மதபாணமது மார்புருகிப்போகுதென்றான்
அப்போது அல்லியரும் அவள்சோகம்தீர்ந்தெழுந்து

ஆராடிதோழியர்க ளாயிரம்பேர்வாங்களடி [ம்
ஆண்டியையைகொண்டுவாரும் ஆக்கினைகள்செய்யவேணு
பாங்கியிலும்நல்லதொரு பவளசேனையேதுசொல்வாள்
சந்திரனேசூரியனே சதுர்முகப்பிரமாவோ
மாணிக்கச்சொக்கலிங்கம் வடிவுகொண்டுவந்தாரோ
எங்கென்றுதேடுவோம் எழிலானசங்கமனே
போனாலும்போய்போரான் போவோமரண்மனைக்கு
அல்லியரைக்கூட்டிக்கொண்டு அரண்மனையில்வந்தார்
மாளிகைவாசலது மண்டபம்வந்தார்க ள் [கள்

ஸ்ரீ கிருஷ்ணபகவான் பாம்புப்பிடாரனாகவும்
அருச்சுனன் பாம்பாகவும் வடிவுகொண்டது.

அப்போதுபெருமாளும் ஆயரென்னவடிவெடுத்தார்
பாம்புப்பிடாரனாகப் பாரளந்தார்வடிவெடுத்தார்
தொண்ணூறும்பத்தும்சென்ற துவண்டகிழவனைப்
பண்ணைப்பூப்போல பழுத்தகிழவனானார் [போல்
பத்துவிதப்பாம்புகளைப் பாரளந்தாருண்டுபண்ணார்
வாழ்விசையனருச்சுனரை மாணிக்கப்பாம்பாக்கி
போர்விசயனருச்சுனரை பெட்டியிலேதானடைத்து
மூப்பதுவிருதுகட்டி முகக்குழலெடுத்து
பாம்புபெட்டிகாவடியை பாரளந்தார்தோளில்வைத்து
மகடிக்குழலூதி வாருரேயெம்பெருமாள்
அல்லியவள்பிறந்த அழகானபொய்கையண்டை
ஆலமரத்தடியில் அரிராமர்வந்தமர்ந்தார்
நடுக்காட்டிடைச்சியர்கள் நானூறுகன்னியர்கள்
பாற்குடங்கள்தாமெடுத்துப் பத்தினிக்குகொண்டுவந்தார்
காரும்பசும்பாலைக் கப்பங்கள்கட்டிவைப்பார்
ஆலமரநீழலிலே அனைவரும்வந்தமர்ந்தார்கள்
பெண்ணரசுமாதரெல்லாம் பிடாரனைக்கண்டார்கள்
ஐயாபெரியவரே அழகானபிடாரனே நீர்
எந்தவூரெந்தநாடு எங்கிருந்துவந்தீரையா
ஊரென்னபேரென்ன உத்தமனேசொல்லுமென்று
கொங்குமலையாளம் கொச்சிதேசமெங்களது
பாம்புபிடிக்கிறதும் பவனியாட்டிவைப்போனென்றார்
ஆனால்கேளையாவே அடியேனொருவார்த்தை

என்னென்னபாம்புவிதம் எடுத்துதான்காட்டுமென்றூர்
பசியாயிருக்குதம்மா பாம்பாடமாட்டாது
ஐந்துநாளாச்சுதம்மா ஆகாரந்தான்புகித்து
போசனங்களில்லாமல் புல்லாடல்பட்டுதம்மா
பாலதுதான்குடித்துப் பசியதுதான்தீர்ந்தால்
அப்போதுவிளையாடும் அழகானபாம்பிதுதான்
அவ்வார்த்தைகேட்டு அங்கிருக்குமாதரெல்லாம் [ன்றூர்
கொஞ்சம்பால்வார்க்கிறோம் குடிக்கவையும்பாம்பையெ
அப்போதுபிடாரன் ஆயரவரேதுசொல்வார்
ஒருவர்-கண்பார்க்கக்குடியாது கனமுள்ளபாம்பிதுதான்
பக்கத்திரைவளைத்து பாற்குடத்தைமுன்புவைத்தால்
உண்டுபசியாறும் உத்தமியே இப்பாம்பு

பாற்குடங்களனைத்திலுமுள்ள பாலையெல்லாம்
பாம்பு குடித்தது.

அத்தண்டபெண்களெல்லாம் அவ்வார்த்தைதான்கேட்டு
பாற்குடமுள்ளதெல்லாம் பால் திறந்துவைத்தார்கள்
சுற்றித்திரைபோட்டுச் சீரானபாம்பைவிட்டார்
பக்கத்திரைவளைத்துப் பாம்புகளையுள்ளேவிட்டார்
ஆணலழகுமன்னன் அருச்சுனவீரியனும்
பாலைகுடித்துவிட்டுப் பானையுநட்டிவிட்டார்[ளெல்லாம்
திரையெடுத்துப்பார்த்தார்கள் திகிலடைந்தார்பெண்க
ஐயையோதெய்வமென்று அறைந்துகொண்டாரெல்ல
பாவிகெடுத்தாயே பாலெல்லாம்போச்சுதடா [வரும்
இத்தனைபாலையது ஏதாய்க்குடித்ததடா
அல்லியறிந்தாலே ஆக்கினைகள்செய்வாளே
தாமணிப்போட்டல்லவோ தலையைத்தரிப்பாளே
கொல்லநினைப்பாளே குடிகேடுவந்திடுமே
ஆரடாபாதகனே அறிவுகெட்டபிடாராநீ
கொஞ்சம்பால்குடிக்குமென்று குடமெல்லாம்வைத்தா
நரைத்தலைநாய்பிடுங்க கிழத்தலைக்குக்கேடுவா [யே
எங்களைக்கெடுத்தாயடா எங்கள்பாவங்கொண்டாயடா
என்றுபுலம்புகிறூ ரிளங்கொடிமாதரெல்லாம் [லாம்
அழுதகண் ணுஞ்சிந்தையுமாய் போகிறூர்கள்மாதரெல்
அல்லியம்மாள்தன்வாசல் அரண்மனையில்வந்தார்கள்

அல்லியர்க்குமுன்வந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
ஆச்சியரேஎன்தாயே அதிசயத்தைநீர்கேளும்
மதுராபுரியருகே வைகைக்கரையோரம்
ஆலமரத்தடியி லங்கேயொருகிழவன்
பாம்புப்பிடாரனவன் பாருலகில்யா 'றியோம்
பத்துவிதப்பாம்புகளில் பஞ்சரந்தினப்பாம்பிதுதான்
சந்திரனைப்போலாகத் தளும்புதேஎன்னுச்சி
சூரியனைப்போலேயல்லோ துலங்குதேஎன்னுச்சி
வேரிற்பவளமிது மின்னுகிறகாந்தியைப்போல்
மின்னற்கொடிபோலே விளங்குகிறதப்பாம்பு
பாம்புபசியாயிருக்கிறது பால்வார்த்துப்போங்களென்று
பாற்குடத்தைகீழிறக்கிப் பாலதுவார்க்கவந்தோம் [ன்
கண்ணாலேபார்த்தாலே கரண்டிப்பால் குடியாதென்றான்
அத்தனைப்பாலையுந்தா னப்பாம்புஉண்டதம்மா

அல்லியரசாணி பாம்புப்பிடாரனை வரவழைத்தது.

அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியருமேதுசொல்வாள்
இந்தவதிசயத்தை எங்கிலும்கண்டதில்லை
பாம்புகளைப்பார்க்கவேண்டும் பிடாரனையழையுமென்றாள்
அந்தக்கிழவனைப்போய் அழைத்தோடிவாருமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரத்தோழியர்கள்
பாம்புகளையாட்டிவைத்தால் பாக்கியங்கள்தந்திடுவார்
வேணுமென்றஉச்சிதங்கள்உத்தமியாள்தான்கொடுப்பா
வாருமையாவென்றுசொல்லி வருந்தினர்தாதியர்கள்[ள்
அப்போதுபிடாரனவன் அரிராமர்தானெழுந்து
காவடியைத்தோளில்வைத்து கடுகிவழிநடந்தான்
அங்காடிவீதிகளும் அரண்மனைத்தெருதாண்டி
அல்லியம்மாள்தன்வாச லரண்மனையிற்போய்புகுந்தார்
வாசலும்வாசலது படியேழுந்தான்தாண்டி
சிங்காதனத்துக்கு முன்பாகவந்துநின்றார்
உத்தமியைகண்டவனும் ஒதுங்கியே தெண்டனிட்டான்
வந்துபணிந்தவரும் வணங்கியேநிற்கலுற்றார்
ஐயாபிடாரனே அப்பாய்பையாட்டுமென்றாள்
வண்ணவண்ணப்பாம்பெடுத்து விதவிதமாயாட்டலுற்றா
ஆடாதகூத்துகளை ஆட்டிவைத்தான்பிடாரனவன் [ன்
ஐயாகிழவனாரே அன்பானபிடாரனே நீ

வேரிற்பவளம்போலே தளும்புதுபெட்டியிலே
சந்திரபிரகாசம்போலத் தளும்புதுஎன்னுச்சி
சூரியனைப்போலேயல்லோ துலங்குறதுபெட்டியிலே
என்னபாம்பிருக்கிறது எடுத்துநீயாட்டுமென்ருள்
ஆச்சியரே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னோடேதான்பிறந்த எனக்கிளையதங்கையவள்
தங்கையவள்வளர்த்துவந்த தயவானபாம்பிதுதான்
எப்பாம்பெடுத்தாலும் இப்பாம்பெடுத்தறியேன்
பெண்களைக்கண்டாலே பிரியமுடனேடிவரும்
மார்மேலுந்தோள்மேலும் மடிமேற்புரண்டாடும்
தோளின்மேலேறுவதும் தும்பிபறப்பதுவும்
மார்பின்மேலேறுவதும் மடியிலிருக்குமது
முகத்தோடேமுகமணைத்து முத்தங்கொடுக்குமது
மார்பின்மேலேறியல்லோ மருவிவிளையாடும்
கீதங்கள்பாடுவதும் கொண்டாடிக்குமது
ஆடாதகூத்துகளும் அரும்பவனியாடுவதும்
வெட்டும்பிளவெடுத்து மெத்தெனவேவாயிலிடும்
வெற்றிலைச்சுருளெடுத்து விரும்பியதுகொடுக்கும்
பஞ்சரத்னப்பாம்பிதுதான் பத்தினியேநானெடுக்கேன்
உன்னையிதுகண்டாலே ஓடிவந்துமடியிலேறும்
இப்பாம்பைநானெடுக்கே னென்ருன்பிடாரனுமே
ஆனல்கேளையாவே அன்பானபிடாரா நீ
அப்பெரியபாம்பினது அதிசயத்தைப்பார்க்கவேணும்
சற்றேயெடுத்துவிடும் சந்தேகப்படவேண்டாம்
உச்சிதங்கள்வேணதெல்லா முன்றனுக்குயான்தருவேன்
மெத்தவருந்தினளே மெல்லிநல்லாளல்லியரும்
அப்போபிடாரனவன் அப்பாம்பைத்தானெடுத்தார்
பெட்டிதிறக்கையிலே பேரானவாள்விஜயன்

அர்ச்சுனன் பாம்புருக்கொண்டு அல்லியம்மாளை
மருவியது.

அல்லிமடிமேலே அர்ச்சுனனேறினனே
மார்மேலும்தோள்மேலும் மருவிவிளையாடுகிருன்
முகத்தோடேமுகமணைத்து முத்தங்கொடுக்கிருனே [ன்
போதுமையாமைத்துனரே போய்வாருஞ்சுவாமியென்ரு
மாயவனைக்கண்காட்டி வழிபிடித்துபோங்களென்ருன்

தும்பிபறக்கிறதுஞ் சேர்ந்துவிளையாடுவதும்
கொண்டானடிப்பதுவும் கூத்துகளாடுவதும்
வெற்றிலைபாக்கெடுத்து மெல்லியற்குகொடுப்பதுவும்
பார்த்துமகிழ்ந்தாளே பத்தினியாளல்லியரும்
ஐயாபிடாரனே நீ அன்பானவார்த்தைகேளும்
இன்றையராத்திரிக்கு இருக்கட்டுமிப்பாம்பு
நாளைக்குவந்துதான் வாங்கிப்போம்பாம்பையென்ருள்
அவ்வார்த்தைதான்கேட் டன்புடனேயேதுசொல்வார்
என்னுடையதங்கையவள் இன்பமுள்ளநாயகியாள்
பஞ்சணைமெத்தையிலே படுத்திருக்கும்போதையிலே
கூடப்படுத்துக்கொண்டு குலாவிவரும்பாம்பிதுதான்
பக்கத்தில்பிரிந்ததில்லை பத்தினியாள்தங்கையவள்
காணமற்போனலே கலங்கித்தவிப்பாளே
பாராமற்போனலே படுக்கைபொருந்தாளே
உண்ணுள்குளியாளே வுறக்கம்வந்துதூங்காளே [னல்
அல்லவென்றுஉன்னிடத்தி லாச்சியேநான்விட்டுப்போ
பாம்புகரைந்துபோகும் பத்தினியேயேதுசெய்வேன்
அறைபலம்குறைந்துபோகும் அழகானவிப்பாம்பு
கரைந்துகுறைந்தாலும் கனகந்தருவேனென்ருள்
தராசுநிறையாக நிறுத்துப்போம்பாம்பையென்ருள்
அப்படியேசம்மதித்தார் ஆயன்பிடாரனவன்
எடுத்துதராசில்வைத்து இடைபார்த்துவந்துவிட்டார்
பாலும்பழங்களுமே பசியாறவையுமென்ருர்
நாளைவருகிறேன் நாயகமேபோகிறேன்யான்
பாஷையினலே பார்த்தீபனேதுசொல்வான்
எட்டொருநாள்போனபின்பு இங்கேவாமைத்துனரே
இந்தவிசுவாச மெனக்குத்தெரியுமென்ருன்
போங்காணுஞ்சுவாமியென்று புகழாகதெண்டனிட்டார்
பாம்பைக்கொடுத்தல்லோ பாரளந்தார்போய்நடந்தார்
பாலும்பழங்களுமே பாம்புக்குவைத்தார்கள்
பார்த்திபனருச்சுனரும் பசியாற்றிதானிருந்தார்
அந்திக்காலமாச்சுதங்கே ஆதித்தன்போய்மறைந்தார்
ஆதித்தன்தான்மறைய அல்லியம்மாளேதுசொல்வாள்
அந்தியனுஷ்டானம் அனைத்துமிகக்கழித்து
செபதபங்களுள்ளதெல்லாம் செய்தாளேயல்லியம்மாள்

சொக்கரைப்பூசைசெய்து செவிதனிலேபூச்சொருகி
போசனர்சாலையிலே புகுந்தாளேயல்லியம்மாள்
சற்கரைபால்போசனம் சாதங்கறிவகையும்
உண்டுபசியாறி உத்தமியாள்கையலம்பி
பஞ்சணைமெத்தையது பள்ளியறைசோடியென்றாள்
தோழியரானவர்கள் சுருக்காயெழுந்திருந்து
கண்மூன்றுடைய கனவயிரக்கட்டிலிட்டார்
மெத்தைமடித்துவிட்டார் மேலேதலையணைபோட்டார்
காம்பரிந்தஜெங்கலப்பூ கட்டிலின்மேல்சொரிந்தார்
தங்கத்தலையணையுஞ் சார்மணையுமிட்டார்கள்
ஒருகுதலையணையும் ஒய்யாரதிண்டுவைத்தார்
அறுகுதலையணையும்வைத்து அலங்காரஞ்செய்தார்கள்
அத்தர்புனுகுகளும் அள்ளித்தெளித்தார்கள்
கதம்பமும்கஸ்தூரி கரைத்துத்தெளித்தார்கள்
சந்தனமும்பன்னீருஞ் சாடிஞரெத்திசையும்
சந்தனமும்பன்னீருஞ் சாம்பிராணிதூபமிட்டார்
குத்துவிளக்குகளைக் கொழுந்துபடவேற்றினர்
மாடங்கள்தோறுமங்கே மணிவிளக்குமேற்றினர்
சன்னலிலேபன்னீரைச் சாடிஞரெத்திசையும்
பஞ்சணைமெத்தையண்டை பாக்குபடிகம்வைத்தார்
மூத்துசுட்டசுண்ணாம்பும் மோரங்கிவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் அழகுள்ளவெற்றிலையும்
காச்சாகளிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
வாகாய்சுருள்மடித்து மாணிக்கதட்டில்வைத்தார் [தார்
கிண்ணியிற்பாலைவைத்து கெண்டிகையிற்றீர்த்தம்வைத்
சோடித்தோமாச்சென்று தெண்டனிட்டார்தாதியர்கள்
பாம்பெடுத்துமடிவைத்து பத்தினியாள்தானடந்தாள்
பஞ்சணைமெத்தையின்மேல் படுக்கையறைபோய்சேர்ந்
மாணிக்கதவடைத்து வயிரத்தாள்பூட்டினளே [தாள்
அத்தண்டதாதிகளும் அங்கங்கேபள்ளிகொண்டார் [ள்
பஞ்சரத்னபாம்பெடுத்து பக்கத்தில்வைத்துக்கொண்டா
பைங்கிளியாலல்லியம்மாள் பள்ளிகொண்டாள்மலரணை
அப்போதருச்சுனரும் ஆயரைத்தானினைந்து [யில்
என்சோபந்தெளியவேண்டும் ஸ்ரீராமாதயவுசெய்யும்
காமவிகாரமதுகளை தீரவேண்டுமென்றான்

ஸ்ரீகிருஷ்ணபகவான் மூதேவியையழைத்து
அல்லியின்மேல் பிரவேசிக்கச் செய்தது.

அருச்சுனன்துயரமதை அறிந்தாரேயெம்பெருமாள்
சீதேவிமுன்பிறந்த திருவினையாள்மூதேவி
மூதேவிநாயகியை முகில்லண்ணர்தாமழைத்து
மகுடத்துரைச்சியற்கு மாருதநித்திரையை
விடிந்துமொருசாமம் மெல்லிநித்திரைதெளியாமல்
மாருதநித்திரைகொள்ளுமென்று வரவிட்டார்மாயவரும்
வந்துநிறைந்துகொண்டாள் வளம்பெரியமூதேவி
அனந்தல்தெளியாமல் அயர்ந்துநித்திரைபோகலுற்ரு
பாம்புவடிவைவிட்டுப் பார்த்திபனருச்சுனனும் [ள்
எப்போதும்போலாக இளவிஜயன்வடிவுகொண்டான்
சங்கரரும்பார்வதியும் தழுவியிருந்ததுபோல்
சிவனுடனேபார்வதியும் சேர்ந்திருந்தபாவனைபோல்
தென்னரிராமனுக்குச் சீதைவந்துவாய்த்ததுபோல்
கந்தருடன் வள்ளியம்மை கைகலந்தபாவனைபோல்
சாரையுஞ்சர்ப்பமும் சருவிமயலானதுபோல்
மானுங்கலையுமல்லோ மருவியணைந்ததுபோல்
கூடிமருவினனே குங்குமப்பூமெத்தையிலே
கண்ணாடிமேலேயல்லோ கடுகுருண்டபாவனைபோல்
மல்லிகைப்பூமேலே வண்டிருந்துவாய்த்ததுபோல்
மருவியணைந்தானே மகாவிடாய்தீர்த்தானே
ஆருதசோபமெல்லாம் ஆறினனருச்சுனனும்
தீராதசோபமெல்லாம் தீர்த்தானருச்சுனனும்
மங்கையரைப்புல்கியல்லோ மருவினனருச்சுனனும்
வெள்ளிமுளைக்கையிலே வெண்கோட்டான்கூவும்போது
பாம்புவடிவெடுத்துப் பக்கம்படுத்திருந்தான்
எப்போதுஞ்சர்ப்பம்போ லெழில்விஜயன்வீற்றிருந்தான்
பொழுதுவிடிந்ததங்கேபொற்கொடிமார்கண்விழித்தார்
தோழியர்கள்தாதியர்கள் திடுக்கிட்டெழுந்தார்கள்
அல்லிப்பெருமாளும் அசந்துநித்திரைபோகலுற்ருள்
கொம்பனைமார்தோழியர்கள் கூவியெழுப்பினர்கள்
தட்டியெழுப்பினர்கள் தாமக்குழலாளை
பொட்டெனகண்விழித்துப் பொற்கொடியாள்தானெழுந்
அலைகுலையத்தலைகுலைய ஆடைகலந்திருக்க [து

கதவைத்திறந்தாளே கட்டழகியல்லியம்மாள்
பாங்கியர்கள்சூழவேதான் பவளசேனைவந்துவிட்டாள்
அல்லிப்பெருமாளை ஆரணங்கைத்தான்பார்த்து
உற்றுப்பார்த்தவளுமே உத்தமியைக்கேட்கலுற்ருள்
ஒருநாளுமில்லாத வுச்சிதங்கள்காணுதம்மா
வாரிமுடித்ததலை மயிருங்கலைந்ததென்ன
கோதிமுடித்ததலை கூந்தல்களைந்ததென்ன
மஞ்சளழிந்ததென்ன மார்பழிந்துபோனதென்ன
பொட்டுகலைந்ததென்ன பூவழிந்துபோனதென்ன
கண்ணிலிட்டமைகளெல்லாம் கரையவந்தகாரணமேன்
கோவைப்பழம்போலே குமரியின்செவ்வுதடும்
குமரியின்செவ்வுதடும் கோதியிருப்பானேன்
படுக்கைகலைவானேன் பஞ்சணைகலைவானேன்
காம்பரிந்தஜங்கலப்பூ கசங்கிநசுங்குவானேன்
மங்கையரேயுந்தனுக்கு வாட்டம்வந்தவாறேது
அல்லிப்பெருமாளு மாரணங்கேதுசொல்வாள்
பிடாரனவன்சொன்னவார்த்தை பொய்யல்லதாதியரே
மனிதருடன்கூடவே மருவினபாம்பிதுதான்
பஞ்சணைமெத்தையிலே பக்கத்தில்வைத்திருந்தேன்
ஏதாய்விளையாடிற்ரே இளங்கொடியேதேன்மொழியே
என்று-முத்தின்மிதியடியைத்தொட்டுநடந்தசைந்தாள்
பூங்காவனத்திற்போய் புனல்கங்கைநீராடி
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழிந்து
கன்னியிளங்கொடியாள் கால்முகஞ்சுத்திசெய்து
வாயோடுபல்லும் மதிமுகஞ்சுத்திசெய்து
சிவனுக்கருளென்று திருநீற்றுக்காப்பணிந்தாள்
சிங்காரமெத்தையின்மேல் தேன்மொழியாள்வந்தமர்ந்
ஆரடிதாதியரே அலங்காரத்தோழியரே [தாள்
பாம்புதனக்குப் பழங்களும்வையுமென்ருள்
கொண்டுவந்துவைத்தார்கள் குடம்நிறைந்தபாலதுவை
பஞ்சரத்னப்பாம்பிதுதான் பாலைக்குடித்ததுவே
அப்போதுபெருமாளும் ஆயரவர்தாமெழுந்து
பிடாரனைப்போலாகப் பெருமாளும்வந்துவிட்டார்
வாசலுள்ளவாசலது படியேழுந்தான்தாண்டி
அல்லியம்மாள்முன்னே யடிபணிந்துதெண்டனிட்டார்

ஆச்சியரே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
இப்பாம்புமில்லாம லென்னுடைய தங்கையவள்
அழுதகண்ணுஞ்சிந்தையுமா யமுதுண்ணமாட்டாமல்
கண்ணீரைவிட்டவளும் கலங்கியழுதாளே
கேளாதவார்த்தையெல்லாம் கேட்டாளம்மாவுன்னாலே
உன்னாலேபட்டகளை உத்தமியேபோதுமம்மா
என்னுடையபாம்பதுதா னெத்தனைகரைந்துபோச்சோ
எவ்வளவுதேய்ந்ததோ எடுத்துவானிறுப்போமென்று
கொண்டுவந்து நிறுத்தார்கள் கொப்பனவேதிராசுதனில்
பாரமிகக்குறைந்து பாம்புதட்டெழும்பியது
அரைவாசிகுறைந்ததம்மா அழகானபாம்பிதுதான்
இரண்டுநாளிருந்தாலே யிங்கேதான்சாகுமம்மா
அறியாமல்விட்டுப்போனே னர்த்தம்வரலாச்சுதம்மா
கொஞ்சமிடைக்குத்தான் கொண்டுவாரும்ரத்தினத்தை
என்றுசொல்லத்தான்கேட் டிளங்கொடியல்லியம்மாள்
வச்சிரமாணிக்கமும் வைத்திடைகட்டித்தந்தாள்த் [டார்
பாம்பெடுத்துபெட்டியில் பாரளந்தார்வைத்துகொண்

ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ச்சுனனாகிய பாம்பை
எடுத்துப் போனது.

போகிறேனச்சியென்று போய்நடந்தான்பிடாரனவன்
கோட்டைக்கடந்தவரும் கொத்தளமுந்தான் தாண்டி
தெத்துதெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
ஆரண்யந்தன்னிலே யரிராமர்வந்துவிட்டார்
ஆனாலழகுமன்ன னர்ச்சுனனேதுசொல்வான்
வாழ்வரசியல்லியரை மாலையிடுவதெப்போ
தாலிதரிப்பதெப்போ சுவாமிபெருமாளே
கட்டினவிருதறுத்துக் கலியாணஞ்செய்வதெப்போ
என்றுதெளியுமோ எக்காலஞ்சென்றிடுமோ
அல்லிமேற்சிந்தையா யலைகுருனர்ச்சுனனும்

ஸ்ரீ கிருஷ்ணபகவான் மறுபடியும் மிருகங்களை
யுண்டுபண்ணினது.

அன்றுபோய்மற்றுநா ளரிராமரேதுசெய்தார்
மாயமிருகங்களை வனத்திலேயுண்டுபண்ணார்
காட்டானைசிங்கங்களும் கரடிபுலியானைகளும்

ஏனக்கடம்பைகளும் எருமைக்குரங்குகளும்
புள்ளிமான்முள்ளம்பன்றி புனுகுபூனைமுயல்களுடன்
மயில்குயிலன்னமும் வண்ணவண்ணப்பக்ஷிகளும்
அந்தமானமிருகமெல்லாம் அரிராமருண்டுபண்ணுர்
மதுரைக்குடிபடைகள் வனத்தில்வரவஞ்சுகிருர்
கண்டவரைஎதிர்க்கிற காட்டானைசிங்கந்தான்
ஓடிப்பதுங்கியல்லோ ஒளிப்பாரேசெனங்களெல்லாம்
அழுதகண்ணுஞ்சிந்தையுமா யல்லியண்டைஓடிவந்தார்
அழுதமுகத்துடனே யல்லியண்டைஓடிவந்தார்
இத்தனைநாள்பிழைத்தோ மிடுக்கமில்லா திருந்தோம்
என்னகுறைசெய்தோமோ இயலானமிருகமம்மா
காட்டானைகரடிபுலி கண்டுமிரட்டுதம்மா
எந்தவிதமாய்ப்பிழைத்து மிடுக்கமில்லா திருப்போம்
மிருந்தபன்றிமானினமும் விம்மிதுரத்துதம்மா
மறுதேசம்போய்நாங்கள் வகையாகபிழைப்போமம்மா
மதுரையிலுள்ளஜெனம் வலசைகுடிபோருமென்ருர்
அவ்வார்த்தைதான்கேட் டலங்காரித்தாதியர்கள் [ள்
அல்லியம்மாள்தன்னுடனே யறிக்கையிட்டார்தாதியர்க
மருடத்துரைச்சியவள் வார்த்தையதுகேட்டு [ள்
வேட்டைக்காரபெண்களை விரைந்தோடியழையுமென்ரு
குறவர்பெண்கள்மறவர்பெண்கள் கூட்டிவாதாதியென்ரு
வில்லியப்பெண்களை நீ வேட்டைக்கழையுமென்ருள் [ள்
கேட்டந்ததாதியர்கள் கொப்பெனவேவோடிவந்தார்
வேட்டைக்காரப்பெண்களைத்தா னோடியழைத்தார்கள்
இப்போதுவில்லியர் மெல்லியர்வாருர்கள் [லும்
காற்செருப்புந்தோல்குல்லாவும் கைதனிலேசில்லாக்கோ
இரட்டைகுண்டுதுப்பாக்கி இருதோளில்வைத்தார்கள்
பன்றிகுத்தும்வல்லயங்கள் பாங்குகளுந்தானெடுத்தார்
மான்வலையும்முயல்வலையும் வகையுடனேதானெடுத்தார்
உண்டுவில்லுசுண்டுவில்லுஞ் சிங்காணிவில்லெடுத்தார்
வெள்ளித்தமுக்கடித்து வெண்கலக்கொம்பூதிவாரார்
பொன்னின்தமுக்கடித்துப் புறப்பட்டார்பெண்களவர்
வேட்டைநாயுஞ்சங்கிலியும் வருதுகட்டிவாரார்கள்
கரிநாயுஞ்சங்கிலியும் கடுகெனவேகூட்டிவந்தார்
அல்லியம்மாள்வீதியிலே அனைவோரும்வந்துநின்ருர்

## அல்லியம்மாள்மறுபடியும் வேட்டைக்குப்போகிறது.

ஐயாயிரந்தோழியர்க ளடங்கலும்பயணமென்ருர்
பல்லக்கைஜோடியென்ருள் பத்தினியாளல்லியரும்
கனகதண்டிசொப்பனிட்டு கன்னியர்முன்னேவைத்தார்
ஆயிரம்பெண்களவ ரழகுள்ளகுதிரையேறி
பாண்டிப்பெருமாளும் பல்லக்கிலேறிஞளே
பாராசாரிபுரவியது பஞ்சகலியாணியது
குதிரைகள்ஜோடித்து மெல்லியர்கள்கொண்டுவந்தார்
ஏறிஞள்கனகதண்டி யெடுத்தாள்கொடிவிருது
ஆனையின்மேற்பேரிகைதா னடிபடுதேகுமுகுமென்று
வெண்கலபேரிகைகள் விருதுமுழங்குதங்கே
மேளமுழங்கிறது மும்மண்டலமதிர
மதுரைத்தெருக்களெல்லாம் மண்தூளெழும்புகிறது
மதுரைத்தெருத்தாண்டி வந்துவிட்டார்கானகத்தில்
காடுசெடிபுகுந்து கனவேட்டையாடுகிருர்
கனகதண்டிவிட்டிறங்கி கட்டழகியல்லியம்மாள்
ஏறிஞள்புரவியின்மே லெடுத்தாளே அம்புவில்லை
தட்டிஞள்புரவிதன்னைச் சாரிவிட்டாள்கானகத்தில்
வளைத்தாளேவில்லதனை வாங்கிவிட்டாளஸ்திரத்தை
இழுத்துவிட்டாள்பாணத்தன்னை இமயகிரிநடுங்க
தொட்டாளேவில்லதனைசொரிந்துவிட்டாள்பாணங்களை
காட்டானைசிங்கங்களைக் கண்டுதுரத்தலுற்ருர்
புலிகள்கரடிகளைப் போடுகிருள்பாணத்தால
கலைமான்பன்றிகளும் காண்டாமிருகங்களும்
மட்டில்லாமிருகங்களை வதைபண்ணிப்போட்டிடுவாள்
புள்ளிமான்றனைக்கண்டு போட்டாளேபாணத்தாலே
மதயானைமிருகங்களை அதமாக்கிப்போடுகிருள்
அநேகமிருகங்களை அதமாக்கிப்போடுகிருள்
மாயன்பெருமாளு மலைஜோகியேதுசெய்தார்
அந்தவனந்தனிலே அதிகஜலமில்லாமல்
தண்ணீர்கிடையாமல் சுவாமியவருண்டுபண்ணுர்
அல்லிப்பெருமாட்கு அதிகதாகமுண்டுபண்ணுர்
தண்ணீர்களாலே தாகவிடாயாஞளே
நெஞ்சுலர்ந்துபோகிறதே நினைவுதப்பிப்போகிறதே
உண்ணாக்குந்தொண்டையது உலர்ந்துமேபோகிறதே

காதையடைக்கிறதே களையாய்வருகிறதே
தண்ணீர்களையாலே தான்விழுந்தாள்பூமியிலே

அர்ச்சுனன் காசிப்பிராமணனாகவந்து
தீர்த்தங் கொடுப்பது.

காண்டீபனர்ச்சுனனுங் கட்டழகரப்போது
காசிப்பிராமணன்போல் கடுகவடிவெடுத்தார் [போல்
தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்
நாணற்பூப்போலேயல்லோ நரைத்தகிழவனானார்
காசிநல்லதீர்த்தமது காவடியைத்தோளில்வைத்து
மூர்ச்சையாய்விழுந்தாளே மொய்குழலாளல்லியம்மாள்
அந்தவழியாக அர்ச்சுனரும்வந்தாரே
பிராமணரைக்கண்டார்கள் பொற்கொடிமார்தோழியர்கள்
ஐயாபெரியவரே அழகானவேதியரே
மெத்தப்பெரியவரே மேனாட்டுவேதியரே
பாருலகையாளுமொரு பத்தினியாளல்லியம்மாள்
தண்ணீர்க்களையாகத் தவித்துவிழுந்தாளே
தாகவிடாய்மிகுந்து தளர்ந்தாள்காண்ராஜகன்னி
காதையடைத்தவளுங் களைத்துவிழுந்தாளே
காசிதீர்த்தம்தாருமையா களைகள்தெளியவேணும்
புண்யமாய்ப்போகுதையா பிராமணரேதீர்த்தங்கொடும்
என்றதுகேட்டு இறக்கினன்காவடியை
திறந்தானேகாவடியைத் தீர்த்தக்குப்பிதானெடுத்து
மாதுகளைதெளிய வார்க்கலுற்றான் தீர்த்தமதை
தாகந்தெளிவதற்குத் தண்ணீருந்தான்கொண்டுவந்து
கடுகவந்தவர்ச்சுனனுங் காவடியைத்தோளில்வைத்து
காற்றாய்ப்பறந்துமல்லோ கரியமால்பக்கம்வந்தான்
மாயன்பெருமாளே வார்த்தையொன்று நீர்கேளும்
களைப்பட்டிருந்தாளே கன்னியிளங்கொடியாள்
தண்ணீரையான்கொடுத்துத்தாகவிடாய்தீர்த்துவந்தேன்
மாலைதரிப்பதெப்போ மணமுகூர்த்தஞ்செய்வதெப்போ
தாலிதரிப்பதெப்பபோ சுவாமிபெருமாளே
என்றுதெளிந்திடுமோ எக்காலஞ்செல்லுமோதான்
அல்லிமேல்சிந்தைகொண்டு அலைகிறானருச்சுனனும்
மாதுமேற்சிந்தையாய் மயங்குகிறானர்ச்சுனனும்
மாயன்பெருமாளு மலைராமரேதுசொல்வார்

ஸ்ரீகிருஷ்ணபகவானும் அருச்சுனனும் மாறுவேடங்
கொண்டு தண்ணீர்பந்தல் வைத்தது.

அத்வானகானத்தி லாரணியந்தன்னிலேதான்
தண்ணீர்பந்தல்போடுகிருர் சுவாமிபெருமாளும்
வெந்நீர்குளிந்தநீர் மோர்களும்வைத்தார்கள
கொள்ளுதண்ணீர்வைத்தார் குளிர்ந்தஜலம்வைத்தார்கள்
தண்ணீர்பந்தல்வைத்தபின்பு சுவாமியென்னவடிவெடு
தெய்வப்பிராமணத்தி சிறுபெண்வடிவெடுத்தார் [த்தார்
காய்க்கும்பிராயமவள் கன்னிகட்டுபாவனையாம்
பூர்க்கும்பிராயமவள் பிஞ்சிவிடுங்காலமவள்
கொஞ்சம்வயல்லவோ கொழுந்தெல்லாம்பிஞ்சுகண்டீர்
சோலையிலேசந்திரனைச் சுழற்றிப்பிடித்ததுபோல்
ஈழத்துதச்சனவ னெழுதிவரவிட்டானே
மேல்நாட்டுத்தச்சனவன் விளைந்துவரவிட்டானே
வேரிற்பவளமது மின்னுகிறகாந்தியைப்போல்
மின்னற்கொடிபோலே மேகவன்னர்வடிவெடுத்தார்
அழகுதுலங்குவதும் ஆனந்தங்கொஞ்சுவதும்
வடிவுதுலங்குவதும் மாணிக்கங்கொஞ்சுவதும்
இந்தவிதமாக யெம்பெருமாள்வடிவெடுத்தார்
அருச்சுனராஜதுரை அவரென்னவடிவானுர்
தொண்ணுறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்போ
பண்ணைப்பூலோக பழுத்தக்கிழவனுனர் [ல்
நாணப்பூப்போல நரைத்தகிழவனுனர்
தோலும்நரம்புகளும் தொங்குதுகிழவனுக்கு
ஒருகண்நொள்ளைக்கண் ணொருபக்கம்நொண்டிக்கால்
ஒருகைமொண்டிக்கை யொருபக்கம்சாய்ந்தவுடல்
இந்தவிதமாக இளவிஜயன்வடிவெடுத்தான்
தண்ணீப்பந்தலுக்குள்ளாக தானிருந்தாரிருவர்களும்
பிடிசெம்புகைபிடித்து பிராமணத்திமுன்னிருந்தாள்
அல்லிப்பெருமாளும் அவளுடையசேனைகளும்
அத்துவானகானகத்தில் அந்தவழிவாரார்கள்
மிருகவேட்டையாடியல்லோ வெளிப்பட்டுவாரார்கள்
தண்ணீர்பந்தல்வழியாகத் தையலர்கள்வாரார்கள்
கண்டாளேதண்ணிப்பந்தல் கன்னியுள்ளேவந்தாளாம்
வந்துஇறங்கினுர்கள் வன்னலட்சம்சேனையெல்லாம்

அத்தண்டசேனைகளும் அனைவோரும்வந்தார்கள்
தண்ணீர்களைகளுமே சகலரும்தான்தெளிந்தார்
அல்லிப்பெருமாட்கு ஆசனங்கள்போட்டார்கள்
ஆசனத்தின்மேலாக அமர்ந்தாளேயல்லியம்மாள்
பிராமணக்கன்னியென்னும்பெண்ணரசைந்தான்பார்த்து
ஆர்காணுங்கன்னியரே அலங்காரப்பெண்மயிலே
எந்தவூரெந்தத்தேசம் எங்கிருந்துவந்தீர்காண்
அத்வானகானகத்தில் ஆர்வைத்தார்தண்ணீர்பந்தல்
என்பாவம்பெரிதுகண்டீர் பத்தினியேதுசெய்வேன் [ள்
தெய்வலோகம்வாழுகின்ற தெய்வப்பிராமணத்தி
நான்-வாழும்பெருமையது மகிழ்ச்சிகள்மெத்தவுண்டு
ஆண்டிப்பரதேசி அமுதுக்குவந்தார்கள்
அள்ளிப்பதரையிட்டு அனியாயம்பண்ணதோஷம்
சாணிதிரட்டிவந்து சாணங்கள்பட்டதோஷம்
ஆதிசிவன்சந்நிதிமுன் அழகாய்வளர்ந்ததுகாண்
சாணிமலையதுதான் சதிராய்வளர்ந்ததுகாண்
பிட்டுதிருநாளுக்குப் புறப்பட்டார்சொக்கலிங்கம்
முப்பத்துமுக்கோடி முனிவர்களுந்தேவர்களும்
வானவருமிந்திரரு மகாதேவர்தான்முதலாய்
கைலாசஞ்சுற்றியல்லோ வருகிறவேளையிலே
சாணிமலையதனைச் சங்கரனார்கண்டுவிட்டார்
என்னாலேவந்ததொரு இடறுகளைத்தாமறிந்தார்
பொல்லாதசாபமிட்டுப் பூமியிலேபோங்களென்றார்
சாபந்தொலைவதற்குத் தண்ணீர்பந்தல்வைத்தேனம்மா
அண்ணனில்லைதம்பியில்லை அனுசரிக்கயாருமில்லை
தாய்வீட்டுசெனங்களில்லை தாபரிக்கயாருமில்லை
மாமிவீட்டுசெனங்களில்லை மற்றுமனிதரில்லை
தாண்டிநுழைவதற்குத் தாழ்வாரமில்லையம்மா
எட்டிநுழைவதற்கு ஏரவாணந்தானுமில்லை
வாவென்றழைப்பதற்கு மனிதரொருவரில்லை
தோலும்நாம்புகளுந் தொங்கிற்றுகிழவனுக்கு
மாளுங்கிழவனுக்கு மாலையிட்டேனென்னுச்சி
இந்தக்கிழவனுந்தா னிறந்துமடியவில்லை
பாவந்தொலையவில்லை பத்தினியேயென்னசெய்வேன்
ஏவல்பணிசெய்து எங்கேயாகிலும்பிழைப்பேன்

அவ்வார்த்தைதான்கேட் டல்லியம்மாளேதுசொல்வாள்
எந்தனுக்கு தோழியாக எணக்கருகில் நீயிருந்தால்
சகலமானபாக்கியமுஞ் சம்பத்துதருவேனென்ருள்
கூடவருவாயோ கொம்பனையேயென்றழைத்தாள்
எப்படிவருவேனம்மா இளங்கொடியேஉன்பிறகே
இலக்குமிநோன்பதுதான் நாளைவருகுதம்மா
நோன்புமுடிக்கவேண்டும் நீதியுள்ளதாயாரே
என்றைக்குமுன்னடிமை ஆகவிருக்கிறேன்நான்
மகுடத்துரைச்சியவள் மாதருமேதுசொல்வாள்
எந்தனரண்மனையி லுன்னிடநோன்பதனை [தோழி
குறையாமற்செய்துவைப்பேன் கொம்பனையேயென்
வேணுமென்றசாமான்கள் மெல்லியரேநான்தருவேன்
வாருமம்மாவென்றுசொல்லி வருந்தியழைக்கலுற்ருள்
இந்தமுடவனைநான் எங்குபோட்டுவருவேனம்மா
டோலிலேபோட்டவரை தூக்கிவரச்சொல்லுமென்ருர்
பல்லக்கிலேறினுள் பத்தினியாளல்லியம்மாள்
கிழவனைதூக்கிவந்து டோலிலேபோட்டார்கள்
காடுசெடிதாண்டி கடுகிவருகிருர்கள்
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
மதுராபுரிப்பட்டணத்தில் மகிழ்ச்சியுடன்வாருர்கள்
தெத்துத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
மாளிகைவாசலிலே வந்தாளேஅல்லியம்மாள்
கனகதண்டுவிட்டிறங்கி கன்னியரும்போகலுற்ருள்
இந்தகிழவனையு மிவ்வாசல்வையுமென்ருள்
தோழிமாருள்ளவர்கள் தூக்கியெடுத்தார்கள்
ஐந்தாங்கட்டுவாசலிலே ஆரியனைவையுமென்ருள்
அப்போபிராமணத்தி அபிராமரேதுசொல்வார்
தனியாகவிட்டுப்போகத் தரிக்குமோவென்மனது
முடவனைநான்விட்டுவிட முறையல்லவெந்தனுக்கு
அவராலேயென்னகுற்றம் ஆச்சிவரட்டுமென்ருள்
அல்லிப்பெருமாளும் அரண்மனையிற்போய்புகுந்தாள்
முத்துச்செம்பொன்வாசல் மூன்றுகட்டுந்தான்தாண்டி
ஆசாரவாசலது அரண்மனைபோய்ச்சேர்ந்தாள்
அந்தியனுஷ்டான மனைத்துமேதான்கழித்து
போசனச்சாலையிலே புகுந்தாளேமாதுகன்னி

பிராமணகன்னியற்கும் அவளுடையபுருஷனுக்கும்
அமுதுபடியாிசி ஆனதெல்லாம்கொடுங்களென்ருள்
அந்திக்காலமாச்சுதங்கே ஆதித்தன்போய்மறைந்தான்
போசனம்உண்டவர்கள் பொற்கொடிமார்பள்ளிகொண்
மற்றுநாட்காலையிலே கதிரோனும்வந்துதித்தான் [டார்
திங்கட்கிழமையது தசமிபுனர்பூசம்
அன்றையதினமதிலே அரிராமரேதுசொல்வார்
அல்லிப்பெருமாளே அரசிதுரைநாயகமே
விரதம்முடிக்கவேண்டும் எந்நோன்புதீரவேண்டும்
சாலுங்கரகமது தையலரேவேண்டுமென்ருள் [தி
வேணுமென்றசாமானே வாங்கிக்கொண்டாள்பிராமணத்
தேவையுள்ளவஸ்துக்களைச் சேகரித்துக்கொண்டவளும்

அருச்சுனன் அல்லியம்மாளுக்குச்சூதாகத் தாலிகட்டி விருதறுத்துப் போனது.

பந்தக்கால்நட்டுமல்லோ பந்தலலங்கரித்து
பச்சோலைபந்தலது பாங்காயலங்கரித்து
நிலத்தைமெழுகியல்லோ மாவாலேகோலமிட்டார்
சாலுங்கரகமுமே சதுராய்நிறுத்திவைத்தார்
பாலிகைவைத்துமல்லோ பாங்காய்முளைதெளித்தார்
அரசாணிகால்நாட்டி அம்மிகுழவிவைத்தார்
அந்திகாலமாச்சுதங்கே ஆதித்தன்போய்மறைந்தான்
ஆயிரம்பெருவிளக்கை அழகாகவேற்றிவைத்தார்
குத்துவிளக்குக் குடவிளக்குமேற்றிவைத்தார்
மாயன்பெருமாளும் மலைராமரேதுசெய்தார்
அத்தண்டதோழிகட்கும் அல்லிப்பெருமாட்கும்
மயக்கத்தையுண்டுபண்ணர் மாயன்பெருமாளும்
மூதேவிதனையழைத்து முகத்தில்நிறையுமென்றூர்
வந்துநிறைந்தாளே வாடையிட்டாள்மூதேவி
சொரணைதப்பித்தோழியர்கள் சோர்ந்துபடுத்தார்கள்
அப்போபெருமாளும் அருச்சுனனைதானழைத்து
ஓமம்வளர்த்துமென்றூர் உலகளந்தமாயவரும்
வேதங்கள்தப்பாமலே வேள்விவளர்த்திஞர்கள்
ஐயன்பெருமாளும் அருளாளரேதுசொல்வார்
தேவேந்திரனையல்லோ சிந்தையிலேதானினைந்து
அர்ச்சுனராசனவன் அல்லியரைமணம்பொருந்த

மணமுகூர்த்தஞ்செய்வதற்கு மங்கிலியம்வேண்டுமப்பா
யானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
தும்பிக்கைபோலே திருமங்கிலியஞ்சரடு
மாயத்திருநீறும் வரவனுப்பவேண்டுமென்று
தோத்திரம்செய்தாரே ஸ்ரீராமரெம்பெருமாள்
இந்திரனுமப்போது இருதயத்திற்றனறிந்து
உள்ளமகிழ்ந்துமல்லோ உம்பர்பிரானிந்திரனும்
யானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
தும்பிக்கைபோலே திருமங்கிலியஞ்சரடும்
மாயத்திருநீறும் மகிழ்ச்சியுடன்தானெடுத்து
தூதன்கையிற்கொடுத்து ஸ்ரீராமர்கைகொடென்றார்
வாங்கியந்ததூதனவன் மாயவனார்கைகொடுத்தார்
ஆயரவர்வாங்கியல்லோ அருச்சுனனார்கைகொடுத்தார்
லக்கினமுந்தப்பாமல் நல்விசையன்கைகொடுத்தார்
தாரபலன்பார்த்துத் தரியுமென்றார்மங்கிலியம்
மாயரிடதன்பாதம் வணங்கியந்தஅர்ச்சுனனும்
ஈஸ்வரரைப்பார்வதியை இருதயத்தில்தானினைந்து
பிட்டுக்குமண்சுமந்த புனிதரைத்தானினைந்து
தேவேந்திரபகவானைச் சிந்தையிலேதானினைந்து
அல்லியென்னும்பெண்ணரசி ஆரணங்குதன்கழுத்தில்
சிவசிவாவென்றுசொல்லித் தேர்விஜயன்கட்டலுற்றான்
அரகராவென்றுசொல்லி அழுத்தினான்மங்கிலியம்
பிரமமுடிமூன்றுமுடி போட்டானே அருச்சுனனும்
ஈஸ்வரனார்வெண்ணீற்றை இட்டானேநெற்றியிலே
மாயன்பெருமாளும் வரமென்னதான்கொடுப்பார்
இந்தமங்கிலியந்தன்னையவள் வாள்கொண்டறுத்தாலும்
கோடாலியாலேயிவள் கொத்திப்பிளந்தாலும்
இரம்பத்தைப்பூட்டியிவள் நலமாயறுத்தாலும்
கத்திகொண்டறுத்தாலுங் கட்டழகிமங்கிலியம்
அறுமலிருக்கவென்று அரிராமர்வரமளித்தார்
அருச்சுனரைக்கூட்டிக்கொண்டு அரிராமர்தானடந்தார்
பத்துசுற்றுக்கோட்டைகளும் பார்த்திபன்தாண்டிவந்து
மஞ்சட்கொடிகளுமே மகுடரத்னதோரணமும்
பொம்மைவிருதுகளும் பூதத்தலைகளுமே

அல்லிக்கொடிவிருதும் அறுத்தெறிந்தானருச்சுனனும்
மூச்சுகொட்டாசெடிவிருதை மூனைவீரன்தானறுத்தான்

கிருஷ்ணபகவானும் அருச்சுனனும் தருமாபுரம் வந்து சேர்ந்தது.

வீராதிவீரன்தம்பி விசையன்வெளியானான்
மாயனுந்தானுமாக வழிநடந்துபோனார்கள்
மதுராபுரிகடந்து வனமாய்வனங்கடந்து
காடுசெடிதாண்டிக் கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
பொல்லாவனந்தாண்டி போய்ச்சேர்ந்தார்தருமபுரம்
மாளிகைவாசலிலே வந்துசேர்ந்தாரிருவருமாய்
பொற்கோழிகூவியல்லோ பொழுதுவிடிந்ததுகாண்
சுக்கலாதேவிபுத்ரன் சூரியனும்வந்துதித்தான்
அருணனுடதேரேறி ஆதித்தன்வந்துதித்தான்
தோழியருந்தாதியர்கள் தூக்கம்விழித்தார்கள்
அத்தண்டதோழியர்கள் அனைவருங்கண்விழித்தார்
பாங்கியிலுநல்லதொரு பவளசேனையேதுசொல்வாள்
அல்லிப்பெருமாளின் அருகாகவந்தார்கள்
தட்டியெழுப்பினார்கள் தாமக்குழலாளை
பொட்டெனக்கண்விழித்தாள் பொற்கொடியாளானவளும்

அல்லியம்மாள் மங்கிலியத்தைக்கண்டு பரதவிக்கிறது.

கழுத்திலேமங்கலியம் கண்டாளே அல்லியம்மாள்
அத்தண்டதோழிகளும் அனைவோரும்வந்தார்கள்
மூடாப்போலேதாலியது மூன்மார்பில்தொங்குதங்கே
கண்டுயிடிவிழுந்தாள் கட்டழகியல்லியரும்
பார்த்துப்பதங்குலைந்தாள் பத்தினியாளல்லியம்மாள்
இங்கிருந்தபாப்பாத்தி எங்கேபோனாள்பாருமென்றாள்
தேடிப்பிடித்து நீங்கள் சீக்கிரமாய்வாருமென்றாள்
எங்கெங்குந்தேடி யினியவிடமாராய்ந்தார்
தேடியலைந்தார்கள் திசையெட்டிற்கண்டதில்லை
எண்ணுதுமெண்ணியிவ ளிடிவிழுந்தாளல்லியம்மாள்
கத்தியெடுங்களடி கடுகஅறுக்கவென்றாள்
கத்திகொண்டறுத்தாலும் கத்தியொடியுதங்கே [தங்கே
இரம்பங்கொண்டறுத்தாலும் நாலுதுண்டாய்போகு
வாள்கொண்டறுத்தாலும் வாளுமடியுதங்கே

மெத்தவிசாரப்பட்டு மெல்லிபுலம்பலுற்ருள்
கட்டினவிருதறுத்துக் கழுத்தில்தாலிகட்டினதார்
ஆரென்றறிவேண்டி ஆரணங்கேபவளசேனே
எவனென்றுயானறியேன் ஏலப்பசுங்கிளியே
ஆயிரம்பாண்டியரை யழைத்தோடிவாங்களென்ருள்
பொன்னின்மலைநாடாளும் பேரெடுத்த அண்ணனையும்
அழைத்தோடிவாருமென்று அனுப்பினுள்தாதியரும்
ஓட்டம்பெருநடையாய் ஓடிவந்தார்தாதியர்கள்
ஆருயிரப்பாண்டியற்கும் அண்ணருக்குமேதுசொல்வாள்
மாதுகன்னியல்லியரை மங்கிலியஞ்சூட்டினுர்கள்
கட்டினவிருதுகளைக் கடுகவறுத்தார்கள்
அல்லிப்பெருமாளும் அழைத்தோடிவாருமென்ருள்
வாருங்களையாவென்று வணங்கினுர்தாதியர்கள்
அந்தவுரைகேட்டு ஆருயிரப்பாண்டியர்கள்
அலைகுலையத்தலைகுலைய அரைப்புடவைநழுவிவிழ
அல்லியிடவாசலுக்கு அனைவோரும்வந்தார்கள்
மகளாரைக்கண்டல்லவோ வயிறெரிந்துத்தானழுதார்
ஐயோமகளேஉன்னை அநீதம்பண்ணவனுர்
யானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
மூடாப்போலேதாலியல்லோ மூன்மார்பில்கட்டினதார்
இதுவென்னகாரணமோ வென்றழுதார்பாண்டியர்கள்
கண்ணீரைவிட்டுமல்லோ கதறிப்புலம்புகிருர்
மகுடத்துரைச்சியவள் வாய்திறந்தேதுரைப்பாள்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
அங்கயற்கண்கிருபையாலேயல்லியிலேபெண்பிறந்தேன்
சொக்கர்கிருபையாலே சுந்தரியும்பெண்பிறந்தேன்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை [ன்
வெட்டித்துணித்துநான் வீரபட்டங்கட்டிக்கொண்டே
பன்னிரண்டுபிராயமட்டும் பாருலகையாண்டிருந்தேன்
கொள்ளவருவார்க்கு குறடாகொடுப்பேனென்றேன்
ஆளவருஞ்சம்மந்தியை யடிப்பேனென்றேன்சேருபந்
கலியாணமென்றவரைக் கண்ணைப்பிடுங்கிடுவேன் [தால்
என்றுவிருதுகட்டி எல்லையரசாண்டேனே
பொம்மைவிருதுகட்டிப் பூமியரசாளுகிறேன்

முச்சுகொடிதெருவிற்கட்டி முடிசூட்டியாளுகிறேன்
காணவருவாரும் கைகட்டி நிற்பாரும்
பார்க்கவருவாரும் பணிந்துகைகட்டுவாரும்
எதிரிகளில்லாமல் எல்லையரசாண்டவளே
அடியென்றழைத்தவர்கள் அவனியிலொருவரில்லை
வாடிபெண்ணேயென்றவர்கள் வையகத்திலொருமில்லை
மதிக்கும்படியாக மண்டலத்தையாண்டேனே
கட்டினவிருதறுத்துக் கழுத்தில்தாலிகட்டினதார்
யாரோதெரியாது அந்நீதம்பண்ணுனே
ஆகாயலோகத்து அமரரென்று நானறியேன்
அந்தரலோகத்து கந்தருவரென்றறியேன்
திக்கெட்டையாண்டதொரு துரைகளென்றுயானறியேன்
பாலைபோல்தாலிகட்டிப் பறையன்மகன்போனுனே
மூடாப்போல் தாலிதொங்க முடிசூட்டியாள்வேனே
கண்டார்சிரிப்பாரே கலியுகத்தாரேசுவாரே
பார்த்தார்நகைப்பாரே பரியாசம்பண்ணுவாரே
சற்றும்மதியாரே தரணிதனிலுள்ளவர்கள் [ன்
நான்-செத்துமடிந்திடுவேன் சிவலோகஞ்சேர்ந்திடுவே
மாண்டுமடிந்திடுவேன் வைகுந்தஞ்சேர்ந்திடுவேன்
வல்லபிராணனை நான் கல்லோடேமோதிடுவேன்
சாவேன்கெடுவேன் நான்சமுத்திரத்தில்போய்விழுவேன்
முட்டிக்கொண்டாள் தூணோடே முகத்திலறைந்துகொ
மார்பிலறைந்துமே மண்மேற்புரண்டழுதாள் [ண்டாள்

பாண்டியர் அல்லியம்மாளுக்கு மனத்தேறுதல்
சொல்லுகிறது

ஆறுயிரவர்களும் ஐயமாரேதுசொல்வார்
அஞ்சாதேயென்மகளே ஆலோசனைசொல்லுகிறோம்
கட்டினதாலியைக் கடுக அறுத்தெறிந்து
விருதெடுத்துக்கட்டியல்லோ வெற்றியுடனாளுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட் டல்லியம்மாளேதுசொல்வாள்
கத்திகொண்டறுத்தாலும் கத்திமடியுதையா
வாள்கொண்டறுத்தாலும் வாளுமடியுதையா
ரம்பங்கொண்டறுத்தாலும் ரம்பமொடிந்திடுதே
பட்டிமாடுபோலாகப் பறையன்மகன்கட்டினனே
கழுத்துமிகநோகுதையா கட்டினதோர்தாலியாலே

எடுக்கமுடியவில்லை என்செய்வேனையாவே
ஆரென்றுநானறிவே னையாவேசொல்லுமெனருள்
அறிந்தேனேயாமாகில் ஐந்துதுண்டுபோட்டிடுவேன்
தெரிந்தேனேயாமாகில் சிவவதைசெய்திடுவேன்
என்றுசொல்லும்போது சொல்லுவார்பாண்டியர்கள்
வந்தவரலாற்றை மகளே நீசொல்லுமென்றார்
ஆனல்கேளையாவே அற்புதவதிசயங்கள்
பாறிவேட்டைபோனேனையா பாரவனந்தனிலே
ஆரோவொருவனவ னம்புபொறிக்கித்தந்தான்
பார்த்தேனேயாமாகில் பாணத்தாற்போட்டிடுவேன்
அறிந்தேனேயாமாகில் அம்புக்கிரைகொடுப்பேன்
காலும்பிடித்தானே கதையெனக்குச்சொன்னனே [ன்
அவன்முகத்தையான்பார்த்து ஆயுதமெடுக்கப்போனே
ஓட்டம்பிடித்தானே ஓடிவிட்டான்பாவிமகன்
மற்றொருநாளையிலே மதுரையிலேயொருவன்
பயித்தியகாரனைப்போல் பவளக்கட்டுதிருக்குளத்தில்
வண்ணமருந்தெடுத்து தண்ணீரிலுரைத்தானே [ன்
வம்புதும்புஞ்சொல்லியல்லோ மருந்தையவனுரைத்தா
அவனையான்கொண்டுவந்து ஆக்கினைகள்செய்வதற்கு
ஆற்றிலேபோட்டவனை அன்பாய்ப்புரட்டுமென்றேன்
அதினாலுஞ்சாகவில்லை அருப்பாவியானவனும்
தூக்குமரத்திலே துஷ்டனைப்போடுமென்றேன்
அதினாலுஞ்சாகவில்லை அருப்பாவியானவனும்
போடப்போனதாதியவள் பெலியானாள்செங்கமலம்
காளியம்மன்கோவிலிலே கடுகபெலிபோடுமென்றேன்
அக்காளிசெல்லியம்மா ளாண்பெலிவேண்டேனென்றாள்
பூதங்கிடக்கிலே போட்டவனைக்கொல்லுமென்றேன்
பூதங்களுள்ளதெல்லாம் போதப்பணிசெய்யுதையா
அதினாலுஞ்சாகவில்லை யரும்பாவியானவனும்
எவளோசிறுகன்னி இந்திராம்பைபோலேவந்தாள்
தன்கணவனென்றுசொல்லி தனித்துப்புலம்பிவந்தாள்
அவனைத்துரத்திவிட்டே னழைத்துபோனாள்சீக்கிரமாய்
பண்டாரம்போலொருவன் படமெழுதிவந்தானையா
என்னைப்போல்படமெழுதி இங்கேமடலூர்ந்தான்
சொல்வார்த்தைசொல்லி சோளிக்குசேலைகேட்டான்

கொடுத்தாலேயல்லாது போகேனென்றான்பாவியவன்
பாம்புதனைவிட்டேனே பாவியைக்கொல்வதற்கு
யானைமதமேற்றி அவனையேகொல்லவிட்டேன்
ஏதாலுஞ்சாகவில்லை இருந்தான்மகாபாவி
மற்றொருநாள்பிடாரனவன் வகையாகப்பாம்பெடுத்து
ஆடாதபாம்புகளை ஆடவைத்தான்வாசலிலே
மற்றொருநாளவனத்தில் நான்வேட்டைபோனேனே
தண்ணீர்களையாலே தாகவிடாய்பட்டுவந்தேன்
காசிப்பிராமணர்போற் காசிதீர்த்தம்வாத்ததுண்டு
வனவேட்டையாடினபின் மாளிகைக்குவரும்போது
தண்ணீர்ப்பந்தல்போட்டிருந்தாள் தையல்பிராமணத்தி
பரதேசியென்றழுதாள் பரிதாபப்பட்டேனையா
மாளிகைவாசலுக்கு மயிலனையைக்கூட்டிவந்தேன்
இலட்சுமிநோன்பென்று நடத்தினாள்பாவியவள்
கலியாணச்சடங்குபோலே கலசம்நிறுத்தினளே
வேள்விளர்த்தினள் வேதங்களோதினாள்
பார்த்துமிருந்தேனே பண்ணினநோன்புகளை
கண்டுமிருந்தேனே கண்ணுறங்கிவிட்டேன்
பார்ப்பானைப்போலிருந்த பாவியவன்கட்டிவிட்டானே
கழுத்திலேதாலிகட்டிக் கனவிருதறுத்துவிட்டான்
ஆரென்றுநானறியேன் ஐயாவேசொல்லுமென்றாள்
ஆருயிரவர்களும் ஆலோசனையேதுசொல்வார்
தேவரேயென்றாலே ஜெயிக்கமுடியாது
மண்டலத்துராஜரெல்லாம் மாதேயறிந்திடலாம்
சீமைசீமைராஜருக்குத் திருமுகமெழுதுமென்றார்
சொக்கலிங்கர்தன்னுடைய சொர்ணமயச்சந்நதியில்
கோயிற்கெதிராகக் கொப்பறையில்நெய்காச்சி
சத்தியங்கள்பண்ணச்சொன்னால் சாடையறிந்திடலாம்
மண்டலத்துக்கெழுதும் மதியுள்ளமந்திரியை
இராஜசமர்த்தெழுதும் நன்மையுள்ளமந்திரியை
ஊர்கணக்கப்பிள்ளைதன்னை உத்தமரைத்தானழைத்து

அரசர்களுக்குத் திருமுகமெழுதி அனுப்புகிறது.

சீமைசீமைராஜருக்குத் திருமுகமெழுதுமென்றார்
என்னவென்றுஓலை எழுதுவதுமென்றாளே
அத்யாத்தியாகோசலமுஞ் சலகர்ணபுரிதனிலே

ஆரியபப்ரமும் அச்சுஇழந்தொழுமார்க்கம்
அங்கதேசம்லிங்கம் அவந்திஅளகாபுரி
கொய்யாசிமன்னரும் கோவைமலையாளம்
அவ்திணுபுரம்சந்திரனுடு அழகுள்ளஇந்திரனுடு
துலுக்காணம்பைதோவை தெலுங்குதேசந்தருமாபுரி
குருநாடுசிந்துதேசம் பங்காளகாப்பில்தேசம்
விஜயபுரிவீமாபுரி மச்சதேசங்குருநாடு
மராட்டியம்சோமாபுரி மச்சுதேசங்குருநாடு
சினங்கிதஞ்சுமார்க்கம் வைந்தர்சிங்காளமும்
ஆனைகுந்திபட்டணமும் அழகானஒட்டியமும்
ஐம்பத்தாறுதேசத்து அரசர்களானவர்கள்
நம்பிக்கைசெய்து நலமுடனேபோவதற்கு
அல்லிமிகநினைத்து அரியகணக்கர்களை
மெல்லியாளல்லியம்மாள் மிகவுமேதானழைத்து
தேசதேசராஜருக்குத் திருமுகமெழுதுமென்றார்
அப்படியேகணக்கர்க ளன்புடனெழுதுகின்றார்
மதுராபுரியாளுகிற வாழ்வரசியல்லியம்மாள்
சொக்கரருளாலே சுந்தரியாள்தான்பிறந்தாள்
அங்கயற்கண்ணருளாலே அல்லியருந்தான்பிறந்தாள்
வழுபிராயத்திலே யெதிர்த்துவந்த நீன்முகனை
வெட்டித்தலைதுணித்து வீரபட்டங்கட்டினவள்
பன்ரண்டுபிராயமட்டும் பாருலகையாண்டகன்னி
விருதுகொடிகட்டியல்லோ வேணமட்டும்ஆண்டவள்
அருமிரம்பாண்டியற்கு அரியதுரைமகளாம் [காண்
அல்லியம்மாள்தன்கழுத்தில் யரோதெரியாது
தேன்மொழியாள்தன்கழுத்தில் திருட்டுத்தாலிகட்டினார்
கழித்திலேதாலிகட்டிக் கட்டினவிருதறுத்தார் [கள்
இன்னவரென்றுசொல்லி எனக்குத்தெரியாது
சீமையிலுள்ளதொரு துரைகள்மேலெந்தனுக்கு
ஐயறவுதோன்றியது அரசமன்னராஜாக்களே
சீமையாளும்ராஜாக்கள் துரைகள்வரவேண்டும்
எல்லையரசாளும் இராஜாக்களிங்குவந்து
கழுத்திலேதாலியது கட்டவில்லையென்றுசொல்லி
நாங்கள்சொன்ன நம்பிக்கையைச் செய்துகொடுக்கவேண்
ஓலையைத்தள்ளிவிட்டு வாராதிருந்தாக்கால் [டும்

கோட்டையிடித்திடுவேன் கொத்தளங்கள்பேத்திடுவேன்
அரண்மனையை நானிடித்து ஆமணக்குவிரைத்திடுவேன்
ஆண்சிறையும்பெண்சிறையு மடங்கலுநான்பிடிப்பேன்
வெட்டித்தலையறுப்பேன் வீரசொர்க்கம்சேர்த்திடுவேன்
ஓலைகண்ட நாழிகைக்கு வந்திடுங்களென்றுலொல்லி
எழுதுமென்றுளோலையதுமிளங்கொடியாளல்லியம்மாள்
அவ்வார்த்தைதான்கேட்டார் அன்பானமந்திரிகள்
சேமக்குருத்தோலை சீராகத்தானெடுத்து
ஈழப்பனையோலை இருபக்கங்காம்பரிந்து
தாளிப்பனையோலை தலைப்பக்கங்காம்பரிந்து
வாரியவோலையிலே வக்கணைகள் தானெழுதி
செந்திரிக்கம்போட்டுமல்லோ சீக்காமுத்திரைவைத்து
அல்லியம்மாமுன்புவைத்து அடிபணிந்துபெண்டனி
ஆரடாசிட்டிமல்ல ராயிரம்பேரெழுந்திருங்கள் [ட்டு
சீமையுள்ளராஜருக்குச் சுருளோலைகொண்டுபோங்கள்
மல்லரெழுந்திருந்து வாங்குரோலைதன்னை
காலால்நடவாமல் காற்ருய்ப்பறந்தார்கள்
மதுரையைத்தாண்டியவர் வனங்கள்புகுந்தார்கள்
காடுசெடிதாண்டிக் கரியமலைதான் தாண்டி
சீமைசீமைராஜருக்குத் திருமுகம்தந்தார்கள்
ஓலைச்சுருள்விரித்தா ருலகாளும்ராஜாக்கள் [டார்
அதிலிருந்தமர்மமெல்லாம் அனைத்துமறிந்துகொண்
நாமும்வருவோமென்ருர் இராஜாத்திசொற்படிக்கே
நம்பிக்கைதான்கொடுத்து நலமுடனேவாருமென்ருர்
தருமாபுரமாளும் தருமருக்கோலைதந்தார்
சந்தனவடிவழகர் தருமரவரேதுசொல்வார்
சீர்கணக்கரையழைத்துச் சுருளோலைபடியுமென்ருர்
அப்போதுகணக்கப்பிள்ளை யன்பாகசுருள்விருத்து
படித்தார்களோலைதனைப் பார்வேந்தர்கேட்டுவிட்டார்
சந்தனவடிவழகன் தருமரவர்கேட்டுவிட்டார்
நாமும்வருகிரும் ராஜாத்திகொலுவுக்கென்ருர்
மாயன்பெருமாளுக்கு வந்துதேசுருளோலை
ஓலையதுபடித்து உலகளந்தமாயவரும்
நாமும்வருகிரும் ராஜாத்திகொலுவுக்கென்ருர்
சீமையிலுள்ளதொரு துரைகளுக்குச்சொல்லிவந்தார்

காடுசெடித்தாண்டிக்கடுகிவந்தார் தூதுவர்கள்
அல்லியிடம்வந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
சீமைசீமைராஜருக்குச் சொல்லிவந்தோமாச்சியென்றார்
சீமைகளிலுள்ள துரைகளெல்லாம்வந்தார்கள்
மண்டலத்துராஜாக்கள் மகுடமன்னர்வாறார்கள்
திக்கெட்டையாண்டதொரு துரைராசர்வாறார்கள்
சந்தனவடிவழகா தருமரவரேதுசொல்வார்
மாயன்பெருமாளை வரவழைத்துவாருமென்றார்
ஒட்டம்நடையுமாக ஓடிவந்தார் தூதுவர்கள்
மாயன்பெருமாட்கு வந்துமேதெண்டனிட்டார்
சந்தனவடிவழகர் தர்மர்தன்னைக்காணவென்று
கூட்டிவரச்சொன்னார்காண் கோபாலசுவாமியென்றார்
அப்போதுபெருமாளும் அக்கணமேதானெழுந்து
தாரகனையெச்சரித்து சுவாமிரதம்வேணுமென்றார்
கொண்டுவந்தான்தாரகனும் கொப்பெனவேசித்ரரதம்
ஏறினார்தேர்மேலே யெம்பெருமாளாண்டவனும்
காடுசெடிதாண்டி கடுகவாறார்தர்மாபுரம்
கோபுரவாசலண்டை கோபாலர்தேரிறங்கி
மாயன்பெருமாளும் மாளிகையில்வந்துவிட்டார்
தரணியளந்தமாயன் தருமருக்குதெண்டனிட்டார்
சிங்காதனம்போட்டு ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
இட்டசிம்மாதனத்தி லெம்பெருமாள்வீற்றிருந்தார்
என்னையழைத்ததுதா னேதுகருமமென்றார்
தாரார்புகழுடைய தருமரவரேதுசொல்வார்
மதுராபுரியாளுகின்ற வாழ்வரசியல்லியற்கு
காணுமல்மங்கிலியம் கட்டியேபோனார்களாம்
திக்கெட்டையாண்டநல்ல துரைகள்மகாராஜருக்கு
சுருளோலையெழுதியல்லோ அனுப்பினார்தேசத்திற்கு
நம்பிக்கைசெய்துபோக நமக்கோலைவந்ததையா
அருச்சுனரும்நீருமாக ஆரணியம்போனீர்களே [டோ
காசியாத்திரைபோனபோது களவுசெய்துவந்ததுண்
தறுதலைப்பட்டிமகன் தாழ்வுசெய்துவந்ததுண்டோ
குற்றங்களுண்டானல் கோபாலாசொல்லுமென்றார்
அருச்சுனனை தன்னாலே ஆரணியம்போனீர்களே
நான்-ஒக்கநடந்தேனே ஒருகுற்றம்நானறியேன்

அம்பாரம்போடுமென்று ளாண்டவனுர்சந்நிதிமுன்
சம்பாநெல்லும்காருநெல்லும் அம்பாரம்போட்டார்கள்
மகுடத்துரைச்சியற்கு மணியாசனம்போட்டார்கள்
ஆருயிரவர்களும் அல்லியருந்தானெழுந்து
ஆலயந்தன்னருகே வந்தார்களெல்லவரும்
கோபுரவாயிலண்டை கொப்பெனவேவந்தார்கள்
மகுடத்துரைச்சியரும் வந்தமர்ந்தாராசனத்தில்
வந்தவந்தராசரெல்லாம் வீற்றிருந்தாரெத்திசையும்
அல்லிபெருமாளும் ஆரணங்குஏதுசொல்வாள்
கேளுங்கள்ராஜர்களே கீர்த்திபெற்றமன்னர்களே
ஆலவாய்சொக்கலிங்கம் ஐயர்தன்கிருபையாலும்
அங்கயற்கண்ணம்மை ஆச்சிசெயலாலும்
அல்லியிலைமேலே ஆரணங்குபெண்பிறந்தேன் [லை
ஒருவர்-வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேமணற்சேறுமுண்டு
அடிக்கிறகாற்றதனில் அலைகாற்றுருப்புமுண்டு
ஆலகாலமுண்டவற்கு கண்டங்கருப்புமுண்டு
குண்டுமணிக்கானுலும் கொஞ்சங்கருப்புமுண்டு
என்-மயிரேகருப்பொழிய மற்றகருப்புமில்லை
புருவங்கருப்பொழிய பின்னேகருப்புமில்லை
மாசிலாப்பெண்பிறந்தேன் மீனுட்சிதன்செயலால்
எழுபிராயத்திலே எதிர்த்துவந்த நீன்முகனை
வெட்டித்தலைதுணித்து வீரபட்டங்கட்டிக்கொண்டேன்
பனிரண்டுபிராயமட்டும் பாருலகையாளுகிறேன்
வாடியென்றழைத்தவர்கள் வையகத்திலாருமில்லை
வம்புதும்புச்சொன்னவர்கள் மண்டலத்திலாருமில்லை
யாரோதெரியாது அனியாயப்பண்ணுரே
காணுமல்மங்கிலியங் கட்டினுனென்கழுத்தில்
இனனினியானென் றெனக்குத்தெரியாது
ஆணையினுலேதா னழைப்பித்தேனுங்களைநான்
நானறியேனென்றுசொல்லி நம்பிக்கைசெய்திடுங்கள்
கொதிக்கிறநெய்தனிலே கொப்பெனவேகையிடுங்கள்
அம்பாரம்போட்ட நெல்லையள்ளிநிமிட்டிடுங்கள்
நெல்லுநிமிட்டாமற்போனவனைவிடுவதில்லை

லையது கொப்பளிக்கக் கண்டதேயுண்டானால்
வெட்டித்தலையெறிப்போம் வீரசொர்க்கஞ்சேர்த்திடுவோம்
நாகலோகம்போனாலும் நானவளைவிடுவதில்லை
ஆகாயம்போனாலும் அவளை நான்விடுவதில்லை
வானத்திற்போனாலும் வலைகட்டி நான்பிடிப்பேன்
பாதாளம்போனாலும் பேதிப்பேன் பைங்கொடி நான்
விட்டுவிடுவேனென்று சற்றுமனதெண்ணவேண்டாம்
சத்தியத்தைசெய்து நீங்கள் தயவுடனேபோய்விடுங்கள்
அவ்வார்த்தைதான்கேட் டவேகங்கொடு ராசரெல்லாம்
எழுந்தார்கள் சபையிலே யேதுசொல்வார் ராசாக்கள்
அல்லாடபாதே யாரணங்கு தாயகமே
பாருலகையாண்டதொரு பாண்டியர்தன்மகளே
செங்கோல்முடிசூட்டித் துரைத்தனங்கள்செய்பவளே
உன்-னையறிவோம்பேரறிவோமுன்செய்கைதானறிவோம்
மங்கிலியந்தொட்டுமக்கேவ தரித்தவகையறிவோம்
அறிந்தோமெயாகி யெழுப்புவருமெங்களுக்கு
மகுடமுடிராஜாக்கள் வந்தவர்கள் தாமெழுந்து
நெய்கிடாரந்தன்னருகே அக்கினிக்குழிமுன்னாலே
இருகைகளைகட்டியவ ரேதுசொல்வார்மன்னவர்கள்
ஐயன்பிடாரிகளே ஆகாயதுர்க்கைகளே
அந்தரதேவதையே சந்திரசூரியரே
இந்திரபிரமாவே கந்தர்வரிஷிகளே
ஆலவாய்ச்சொக்கலிங்க மங்கையற்கண்ணம்மையரே
மாணிக்கச்சொக்கலிங்க மகாதேவரீசுவரே
மாதருக்குமங்கலியம் தரித்தவகையறிவோம்
ஏதுமறியோமென் றிருகையைத்தானெடுத்து
காய்கிறநெய்தனிலே கையைத்துவைத்துவந்தார்
அப்பாரநெல்லைதனை மன்னர்நிமிட்டினார்கள்
ஒவ்வொருமன்னர்களாய் சோதனைதந்தார்கள்
மாயன்பெருமானும் வந்துசத்தியம்பண்ணவே
வெற்றிமதயானை விட்டெழுந்திருந்து
நெய்கிடாரந்தன்னருகே நேராய்வருகையிலே
அக்கினியாய்விசிய அருகில்வரவொட்டாமல்
வெந்துகருகிறது விமலனுதேகமெல்லாம்
மாயன்பெருமானே மைத்துனரே திருட்டுக்கிருஷ்ணா

முன்னிட்டகாலையவன் பின்னிட்டுவாங்கிக்கொண்டான்
என்னபுதுமையது எம்பெருமானென்றுகேட்டான்
அருகில்வரவொட்டாமல் அக்கினியாய்வீசுதுகாண்
ஒருபாவம்நானறியேன் எதுவினையென்றறியேன்
அக்கினிபகவானை ஆயருங்கைதொழுது
எம்பெருமான்மாயவரும் யாரைநினைக்கலுற்றூர்
ஒருநன்றிசெய்தவரை யுள்ளத்தில்வைக்கவேண்டும்
அக்கினிபகவானே அர்ச்சுனராஜருனக்கு
எத்தனைசகாயஞ்செய்தா ரெல்லாமறந்தீரோ
மாளுகின்றவுன்னையந்த வாள்விஜயன்காத்தானே
அந்தசகாயமல்லோ அறியாமலேன்மறந்தீர்
பெண்ணுடையமன்னன் பெண்ணரசைமாலையிட்டான்
உந்தனுக்குகோபமென்ன உறத்துவானேன்செந்தணலாய்
கோபத்தைவையாதே குளிர்ந்தஜலம்போலிருங்காண்
என்றுதொழுதாரே எம்பெருமான்மாயவரும்
ஆயரதுசொற்கேட் டக்கினிதேவரவர்
குளிர்ந்தஜலம்போலாகக் கொப்பெனவேநின்றுவிட்டார்
வாருங்காண்வீமசேனு வார்த்தைகேளும்மைத்துனரே
மாதுக்குமங்கிலியம் மதவீமா தரித்ததுண்டோ
செய்ததேதுண்டானல் சேரவரவொட்டாது
கலகங்களுண்டானல் கட்டழகா நாரநில்லு
மனதிற்கபடுகளும் வஞ்சனைகளில்லையென்ருல்
இராஜாக்கள்போலேநீ நம்பிக்கைசெய்யுமென்றூர்

## வீமராஜன் நெய்யைக் குடித்துவிட்டுக் கொப்பரையை உருட்டினது.

மறுபடியும்வீமராஜன் மன்னவனுந்தான்வருவான்
கொதிக்கிறநெய்யருகே கொப்பெனவேவந்துநின்ருன்
மணக்கின்றநெய்யருகே மதவீமன்வந்துவிட்டான்
தூக்கினன்கொப்பரையைத் துரிதமாய்நெய்யெல்லாம்
வெற்றிமதயானை வீமனவன்வாயில்வைத்து
நெட்டிக்குடித்துவிட்டு நேராகவிட்டெறிந்து
தருமர்தமக்கிளைய மதவீமன்வந்துவிட்டான்
மாயனுடனுக வழிபிடித்துபோய்நடந்தார்
மதுரைத்தெருதாண்டி வனமாய்வனங்கடந்து
இத்தனைபேர்தனிலே யெவனைத்திருடனென்பேன்

அநேககோடிராஜர்களி லாரைத்திருடனென்பேன்
சத்தியங்கள்செய்தாரே தரணியுள்ளராஜரெல்லாம்
நெய்யிலேகைதோய்த்து நெல்லைநிமிட்டிவிட்டார்
சோதனைகாட்டியல்லோ துரைகளெல்லாம்போகையிலே
அனைவோரைப்போலாக அவனுங்கைதோய்க்கவேணு
கொதிக்கின்றநெய்யதனைக் குடிக்கவிதிமுறையோ [ம்
திருடருக்குதெய்வமுண்டோ சோரருக்குநேயமுண்டோ
வானஞ்சுழல்வதற்கு மருந்துண்டவன்கையில்
பூமிசுழல்வதற்குப் பொடியுண்டவன்கையில்
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுரைக்கலையோ
வம்புதும்புபேசியவன் வாய்பழுதுசொல்லலையோ [ன்
ஆற்றில்புரட்டியல்லோ அவனைநான்கொல்லுமென்றே
அவனுடையமந்திரத்தா லாற்றைதடைகட்டலையோ
தூக்கிலேபோட்டவனை தோழியரைக்கொல்லுமென்றே
தாதியரைக்கொன்றுவிட்டான் தந்திரவித்தையினுல் [ன்
காளியம்மன்கோவிலுக்குக் காவுகொடுங்களென்றேன்
வடவாசல்செல்லியரை வாய்த்தடைகட்டிவிட்டான்
பண்டாரம்போலேவந்து படம்பிடித்தான்வாசலிலே
வம்பானவார்த்தைகளும் வாய்பழுதுசொன்னனே
அரவத்தைவிட்டுநா னண்டியைக்கொல்லுமென்றேன்
பாம்பைத்தடைகட்டினனே பாதகனவனும்
யானைமதமேற்றி ஆண்டியைக்கொல்லுமென்றேன்
யானைதடைகட்டினனே யரும்பாவியானவனும்
வேதியனைப்போலாக வேள்விவளர்த்தினனே
மறையவனைப்போலேவந்து மங்கிலியஞ்சூட்டிவிட்டான்
நெய்யைக்குடிக்கவவன் வகையறியமாட்டானே
மலையாளவித்தைகளும் மந்திரமும்கற்றபாவி
எந்தவூர்ராஜாவோ எனக்கறியச்சொல்லுமென்ருள்
தர்மாபுரமாளும் தருமர்தப்பிவீமரென்றார்
அவ்வார்த்தைதான்கேட் டல்லிப்பெருமாளும்
எட்டிப்பழம்போலே இருகண்ணுந்தான்சிவந்து
உருக்கியசெம்பொன் உதிரம்போல்கண்சிவந்து
தர்மாபுரமுள்ளதெல்லாம் தவிடுபொடியாக்கி
தங்கமதில்கோபுரத்தை தரையோடேசாய்த்திடுவேன்
ஆமணக்குப்பருத்தியுமா யடங்கலும்விரைத்திடுவேன்

ஆண்சிறையும்பெண்சிறையுமடங்கலும்நான்பிடிப்பேன்
பயணம்பயணமென்று பயணபேரிபோடுமென்ருள்
வெட்டியானைத்தானழைத்து வீரமுரசறைபுமென்ருள்
ஆயிரம்பாண்டியர்கள் அடங்கலும்பயணமானுர்
இன்றுவெளிக்கூடாரம் இயலுடனேபோடுமென்ருள்
சண்டாவைநாட்டுமென்ருள் தமுக்கையடியுமென்ருள்
அப்போதுசாம்புவனும் யானையேறிமாலைசூடி
அடித்தான்பறையோசை அம்மதுரைதானறிய
மதுரைபடைகளெல்லாம் வாருங்களென்றுசொல்லி
ஆயுதங்கட்டியல்லோ அனைவோரும்வாருமென்று

அல்லியரசானி பஞ்சபாண்டவர்பேரில்
சண்டைக்கு வருகிறது.

மதுரைப்படைகளும் மகாசனங்களுள்ளவரும்
எண்ணுத ஆயுதத்தை எடுத்தரையிற்கட் டிக்கொண்டு
அமரதரும்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியாரனவரும்
ஈழத்தூவக்கனரும் இளநாட்டுசோனகரும்
ஆரியரும்மாரியரும் அனைமலைத்துநாடார்களும்
உடையவருப்சூதகரும் மொட்டியரும்பார்ப்பாரும்
கிட்டிமன்னர்தேசமன்னர் உரைமன்னர்போர்மன்னர்
குறவர்மறவர்களும் குச்சிலியருள்ளவரும்
வேடரும்வில்லியரும் வேணசனமுள்ளவரும்
ஆயுதங்கள்கட்டியல்லோ அனேகஜனம்வந்தார்கள்
பட்டயஞ்சூரியர்கள் பாரியவில்சமுதாடும்
நிமையிலசுடும்குண்டுகளும் நேரிசமாம்பெரியகத்தி
கூலிசமும்சூலிசமும் குண்டுதுப்பாக்கிகளும்
மண்வெட்டிகோடாலி வல்லியமிருப்புலக்கை
வாளுகளும்வேலுகளும் வளைதடிசக்கரமும்
கண்டகோடாலிகளும் கவுண்டுகளுண்டுவில்லும்
சிங்காணிபூச்சுவில்லும் சேனவிதஆயுதமும்
இரப்பமுபபாசங்களும் நாலெட்டுஆயுதமும்
எண்ணுதவாயுதத்தை எடுத்தரையிற்கட்டினுர்கள்
சட்டைதமான்வச்சிரகபாய் தரித்தார்களெல்லவரும்
சண்டைக்குமுஸ்தீபாய் சமர்த்தரெல்லாம்வருகிருர்கள்
வந்துநிறைந்தார்கள் வளம்பெரியசேனையெல்லாம்

யானைகளோ ஆறுலக்ஷம் அசுவங்களேழுலக்ஷம்
ஒட்டகமோபத்துலக்ஷம் ஒன்றாககூட்டினார்கள்
கார்மேகம்போலாகக் கருத்தானைகூட்டம்வரும்
செவ்வானம்போலாகச் செவந்தபுரவிகளும்
வந்துநிறைந்தார்கள் வாழ்வரசியல்லியண்டை
பொன்னின்மலைநாடாளும் பேரெடுத்த அண்ணாவை
அண்ணாவை தானழைத்து ஆளுமென்றாள்பொன்மது
வென்றுகெலித்துநான் விருதுகட்டிவருமளவும் [ரை
செயித்துவருமளவும் தென்மதுரையாளுமென்றாள்
முத்துபடுந்துறையும் முனைவீரர்பட்டறையும்
யானைபடுந்துறையு மடங்கலும்பதனமென்றாள்
பவளம்படுந்துறையும் பட்டணப்பார்த்திருங்கள்
கப்பற்படுந்துறையுங் கடற்சோங்கும்பத்திரங்கள்
ஜெயித்துவருமளவும் சீர்மதுரையாளுமென்றாள்
பயணம்பயணமென்று ஏறினார்தேர்மேலே
வானத்துமேகம்போல் மணிரதங்கள்வருகிறது
ஆயிரம்தேரும் அணியணியாய்வருகிறது
சொக்கலிங்கம்துணையென்று தேரைநடத்தினார்
அச்சுகிறுகிறென்ன யானைநெடுந்தேரசைய
வண்டில்கிருச்சுமிட மதயானைகோஷ்டமிட
குதிரையனுமாணிக்கக் கோடிமன்னர்சத்தமிட
வெய்யலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
கானலுக்கெடுத்தார்கள் கருப்புநல்லகூடாரம்
கருப்புநிசான்செகப்புநிசான் கலந்துபறக்குதுபார்
அல்லிக்கொடிவிருது அலைகிறதுதோள்மேலே
மஞ்சள்கொடிபறக்க மகாதோரணமசைய
வருகிறதேழுலபலம் மண்ணிலிடங்கொள்ளாமல்
ஆற்றுமணல்போலே யனேகங்கோடிசேனைகளும்
மேகம்புரண்டாற்போல வேணசெனங்கள்வரும்
காட்டுகளாப்பூவும் காளாம்பூத்ததுபோல்
சுற்றிக்குடைபிடித்தார் சூரியன்தோற்றாமல்
பக்கங்குடைபிடித்தார் பகவானைக்காணாமல்
செந்தாளெழும்பினதே சூரியனைக்கப்பிறங்கே
அடிபடுதேபேரிகை யந்தரந்தானதிர
யானையின்மேல்பேரிகை குதிரையின்மேல்டங்காவும்

ஒட்டையின்மேல்நகபத்தும் ஓசையெழும்பினதே
வெங்கலபேரியது விருதுமுழங்கிறதே
பஞ்சசன்னியம்தேவதத்தம் பலவிருதுதான்முழங்க
சச்சரிகைவீணைகளும் தாக்கிமுரசறைய
ஒற்றவாசல்சங்கமது ஊதுகிறாருலகதிர
மதுராபுரியைவிட்டு வளநாட்டிற்போகலுற்றார்
காடுசெடிதாண்டிக் கரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
அண்டரறியாத இருண்டவனந்தாண்டி
தருமாபுரிபட்டணத்தை தானடுத்தாளல்லியம்மாள்
பட்டணத்தைச்சுத்திக்கொண்டு பாளையஞ்சூழ்ந்தாளே
பஞ்சவர்ணக்கூடாரம் பலதிசையும்போட்டார்கள்
இலக்ஷணைபோட்டாளே இராஜாத்தி அல்லியம்மாள்
ஜண்டாவைநட்டார்கள் தமுறடித்தார்பாளையத்தில்
அடிபடுதுராயபேரி அடிவானத்திடிபோலே
கோடைகாளத்திடிபோலே குமுறுதேராயபேரி
செவ்வானத்திடிபோலே சேரமுழங்கிடுகே
சத்தத்தொனியதுதான் தருமரவர்கேட்டுவிட்டார்
ஊரிலுள்ளஜனங்களெல்லாம் ஓடிவந்துபுலம்பலுற்றார்
சந்தனவடிவழகர் தருமலிங்கமகாராஜன்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்தார்
ஆறலழகுமன்ன னர்ச்சுனரைத்தானழைத்தார்
நகுலசகாதேவ ராஜாக்களைத்தானழைத்தார்
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்தார்
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்றார்
வாருமென்றபோதே வந்தாரேயெம்பெருமாள்
சந்தனவடிவழகர் தர்மருக்குச்சரணஞ்செய்தார்
கூடச்சரணஞ்செய்தார் கோபாலர்மாயவரும்
என்னையழைத்ததுதா னேதுகருமமென்றார்
பட்டணத்தைச்சுற்றியல்லோ பாளையங்கள்வந்ததுகாண்
கோட்டையைச்சுற்றியவர் முத்திரைபோட்டார்கள்
சண்டைபண்ணவாருமென்று தமுறுமடித்தார்கள்
சண்டைநிஜாமிட்டார்கள் தண்டுவந்திறங்கினதே
எந்தவூராஜாவோ ஏதுமறியேனே

ஆளோடே நீங்க ளறிந்துவரச்சொல்லுமென்றார்
அரக்காரொருவனைத்தா னனுப்பினார் மந்திரியை
வந்தவராரென்று வார்த்தையறியுமென்றார்
ஒற்றனொருவனவன் ஓடினான் மந்திரியும்
பாண்டியர்களெதிரில் பாங்குடனேதெண்டனிட்டு
எந்தவூராஜையா எதற்காகவந்தீர்கள்
சண்டைபண்ணவந்ததொரு வயணமென்னராஜர்களே
சொல்லுங்களையாவென்று தெண்டனிட்டார்வந்தவர்கள்
மந்திரியுங்கேட்கையிலே மகாராஜரேதுசொல்வார்
மதுராபுரியாளும் வாழ்வரசியல்லியற்கு
காணுமல்மங்கிலியம் கட்டினாரவள்கழுத்தில் [டான்
பொய்சத்தியம்பண்ணியல்லோ புகழ்வீமன்வந்துவிட்
ஆகையினாற்சண்டைசெய்ய யநேகதளம்கூட்டிவந்தோம்
சண்டைபண்ணிகெலிக்கசொல்லும் சாமர்த்தியராசர்களை
வந்தாலேயாச்சுது வராமலிருந்தாக்கால் [வோம்
கோட்டையிடித்திடுவோம் கொத்தளங்கள்போத்திடு
தங்கமதில்கோபுரத்தை தரையோடேசாய்த்திடுவோம்
ஆமணக்குப்பருத்திகளும் அடரவிரைத்திடுவோம்
ஆண்சிறையும்பெண்சிறையும் அடங்கலும்பிடித்திடு
கடுகவரச்சொல்லும் கட்டழகராஜர்களை [வோம்
அவ்வார்த்தைதான்கேட்டு அழகானதூதுவர்கள்
சந்தனவடிவழகர் தருமரண்டைவந்துவிட்டார்
வணங்கிநமஸ்கரித்து மந்திரியுமேதுசொல்வார்
மதுராபுரியாளும் வாழ்வரசிகன்னியற்கு
காணுமல்மங்கிலியம் கட்டினாரவள்கழுத்தில்
பொய்சத்தியம்பண்ணியல்லோ வந்தாராம்புண்ணியரும்
ஆகையினாலேதான் அல்லிதளங்கூட்டிவந்தாள்
சண்டைக்குவந்தாலே அல்லாதுராஜாவே [ன்றாள்
கோட்டைபிடிப்பேனென்றாள் கொம்பைபறிப்பேனெ
சண்டைக்குவரச்சொன்னாள் தருமலிங்கராஜாவே
என்றுசரணமிட்டா னியலானதூதுவனும்
தக்கப்புகழுடைய தருமராதுதான்கேட்டு
மாயன்பெருமாளின் மதிமுகத்தைதான்பார்த்து
தையலிளங்கொடிக்கு சத்தியஞ்செய்யவென்று [ன்றார்
தென்மதுரைபோனீர்களே செய்தியென்னசொல்லுமெ

அருண்மைந்ததருமருக்கே அரிராமரோதுசொல்வார்
மண்டலத்துராஜாக்கள் வந்துசக்கியம்பண்ணார்கள்
கொதிக்கிறநெய்தனிலே கொப்பெனவேகைவைத்து
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்வான்
சத்தியங்கள்செய்யாமல் தாமந்தவாழ்மார்பன்
கொதிக்கின்றநெய்தனை கொப்பரையோடெடுத்து
நெய்யைக்குடித்துவிட்டு கொப்பரையையுருட்டிவிட்டா [ன்
மதப்பட்டவீமன்செய்த வல்லமையாலிப்போது
சண்டைக்குவந்தாளே சாமர்த்தியமுள்ளகன்னி
சண்டைபண்ணவந்தவளைச் சற்றும்விடலாகாது
சண்டைகளைச்செய்யவேணும் சாமர்த்தியமுள்ளகன்னி
வந்தசண்டைவிடலாமோ வலம்பெரியதர்மரேசொல்
பின்னுக்கிடைந்தாலே விடுவாளோபெண்ணரசி
வென்றுஜெயிக்கவேண்டும் வீரபட்டம்சூட்டவேண்டும்
அவ்வார்த்தைதான்கேட்ட ருண்மைந்தரோதுசொல்வார்
ஆரையனுப்பிடுவோம் அமர்துசெய்யவென்றால்
எவரையனுப்பிடுவோம் எம்பெருமாள்சொல்லுமென்றார்
நகுலசகாதேவ ராஜாக்கள்தங்களையும்
வெற்றிமதயானை வீமனையனுப்புமென்றார்
மூவருடனாக வெகுசனங்கூட்டுமென்றார்
நானுங்கூடப்போறேன் ராஜாவேயஞ்சாதே
வென்றுஜெயித்துநான் வெளிப்பட்டுவருவேனென்றார்
மனதுக்கிசைந்தபடி மாயவரேசெய்யுமென்றார்

பஞ்சபாண்டவர் அல்லியோடு சண்டைக்குவருகிறது.

தர்மரதுசேனைகள் சகலஜெனம்வாருமென்றார்
இன்றுவொரக்கூடார மியலுடனேபோடுமென்றார்
சண்டைமுரசறையுங்கள் சண்டைகொடிநாட்டுமென்றா
பாளையங்களுள்ளதெல்லாம் பயணங்கள்சொன்னார்கள்
ஆரடாதேர்ப்பாகா அலங்கரியும்தேரையென்றார்
தேர்ப்பாகனோடிவந்து தேரையலங்கரித்து
ஆறுவண்டி நூறுசட்டம் அழகானகுத்துக்கால்
குத்துக்கால்செப்பனிட்டு கொடுங்கைதிலாவளைத்து
கும்பக்கலசமது கொடுங்கையலங்கரித்து
தேரையலங்கரித்து தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
அழகானசில்லினால் அலங்காரம்பண்ணினானே

நாலுபக்கஞ்சாலர்களும் நவரத்னதோரணமும்
கண்ணாடிசல்லிகட்டி கவரிமான்சுங்குவிட்டு
ஐந்துகொத்தாராச்சி அழகுமணிகட்டினனே
நவகண்டவீரமணி நான்குபக்கங்கட்டினனே
வீரஜயமாங்கட்டியே மகமேரலங்கரித்து
நான்குபுரவிகளை நன்றாய்குளிப்பாட்டி
பாராசாரிபுரவியொன்றும் சீவரத்னபுரவியொன்றும்
தேசியெனும்புரவியொன்றும் சீவரத்னபுரவியொன்றும்
நாலுகால்வண்டயமாம் நடுக்கழுத்தில்கொலுசுகளும்
முன்னாலேசுட்டிகளும் பின்னாலேகுச்சிகளும்
மாணிக்கக்கடிவாளம் வாயிற்கொடுத்தானே
நான்குகுதிரைகளை நன்றாயலங்கரித்து
தேரின்மேலேறினனே சீக்கிரமாய்ப்புரவிகளை
சாய்ந்திருந்துசண்டைசெய்ய சார்மணைபோட்டானே
குந்தியேசண்டைசெய்யகுறிஞ்சிப்பூமேடையிட்டானே
ஒளித்திருந்துசண்டைசெய்யஒருகுதலையணைகளிட்டான்
சந்தனப்பொட்டுமிட்டுச் சாம்பிராணிதூபமிட்டான்
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகனோடிவந்து
அலங்கரித்தேனென்றுசொல்லி யடிவணங்கிதெண்டனிட்டான்
வெற்றிமதயானை வீமனவனெழுந்து
நகுலசகாதேவ ராஜரவரெழுந்து
ஆயர்பெருமாளும் அரிராமர்தானெழுந்து
மகுடமணிக்காரர்கள் வாகுவலயமிட்டார்
வாள்களும்கத்திகளும் வலதுகையில்தானெடுத்து
அம்புவில்லுந்தானெடுத் தப்புறத்தூணிமுதுகணிந்தார்
சட்டைதமான்வச்சிரகபாய் தாமணிந்தார்ராசரெல்லாம்
சிண்டுவில்லுஞ்சுண்டுவில்லுஞ் சிங்காணிபூச்சிவில்லு
வச்சிரகபாயணிந்தான் மதவீமராஜனவன்
தண்டாயுதமணிந்தார் மந்திரவாளணிந்தார்
சண்டைக்குமுஸ்தீபாய் சமர்த்தர்வெளியானார்
அர்ச்சுனரதுவறிந்து ஆயரண்டையோடிவந்து
அல்லியவளோடே அமருக்குப்போரீரோ
அவள்மேலேஅம்புபட்டால் என்னாவியுருகிவிடும்
சீவனழிந்திடுவேன் செலவழிந்துபோவேனென்றான்
மாண்டுமடிந்திடுவேன் மாதருக்குப்பாணம்பட்டால்

எந்தவிதமானாலும் இட்டுவந்துசேருமையா
பொற்கொடிமாதரை நீர் பிடித்துவந்துசேருமையா
நல்லதருச்சுனரே நமக்குத்தெரியவரும்
எந்தவிதமானாலு மிட்டுவந்துசேர்க்கிறேன்பார்
உன்மனதுக்கிசைந்தபடி மனைவனேசெய்கிறேன்போ
என்றுமேசொன்னாரே எம்பெருமாள்மாயவரும்
அப்போதருச்சுனரு மாணழகர்தாமெழுந்து
வெற்றிமதயானை வீமனண்டையோடிவந்து
மதகரிவீமனுக்கு வணங்கிநமஸ்கரித்து
அண்ணாமதவீமா அடியேனொருவார்த்தை
அல்லியவள்மேலே அமருக்குப்போரீரோ
அவள்மேலேபாணமதை விடவேண்டாமண்ணாவே
வில்வித்தைசெய்யவேண்டாம்விஜயபாணம்போடவேண்
தந்திரமாய்கொண்டுவாருந்தாமந்தவாழ்மார்பா [டாம்
என்றுதொழுதானே எழில்விஜயனருச்சுனனும்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆணழகனேதுசொல்வான்
நல்லதுதம்பியரே நமக்குத்தெரியவரும்
என்றுசொல்லிமதவீம னேறினான்தேர்மேலே
ஏறினார்தேர்மேலே எடுத்தார்நெடுங்குடையை
முத்துக்குடைகளுமே முழுவயிரநற்குடையை
பட்டுக்குடைகளுமே பலதிசையுந்தானெடுத்தார்
கிருஷ்ணரதுதேர்மேலே கருடக்கொடிபறக்க
நகுலரதுதேர்மேலே நாமக்கொடிபறக்க
சகாதேவர்தேர்மேலே காவ்ஸதிரக்கொடிபறக்க
அச்சுகிறுகிறென யானைநெடுந்தேரசைய
வண்டில்கிறுச்சியிடும் மதயானைகோஷ்டமிடும்
குதிரையனுமானிக்கக் கோடிமன்னர்சத்தமிட
யானைசேனைபரிவார மடங்கலும்வருகிறதே
செந்தூளெழும்புவதுஞ் சூரியனைக்கப்புவதும்
கருந்தூளெழும்புவதும் கதிரோனைக்கப்புவதும்
அடிபடுதுராயமேரிகை அந்நகரந்தானதிர
வெண்கலபேரியது விருதுமுழங்கிவர [து
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைபேரியடிபடு
வெற்றிவெற்றியென்றுசொல்லி வெற்றிமுரசடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுதே

கோடைகாலத்திடிபோலே குமுறுதேராயபேரி
அடிவானத்திடிபோலே அடிபடுதேராயபேரி
அண்டமங்கிடுகிடென்ன அடிபடுதேராயபேரி
அல்லியென்றுபேர்சொன்னால் கல்லுதெய்வங்கூத்தாடும்
மண் தூளுஞ்செந்தூளும் மண்டலத்தைக்கப்பியதே
வருகிறஜெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
பட்டணந்தாண்டிப் பாளையம்வருகிறதே
யூகம்பிரித்தார்கள் யுத்தியஞ்செய்யவென்று
வந்துமுனைகொடுத்தார் வளம்பெரியசேனையெல்லாம்
இருவரதுபாளையங்க ளெட்டிநெருங்கிற்றங்கே
உத்திபிரிந்தார்கள் யுத்தியம்பண்ணுகிறார்
வில்வளைத்துநாரிபூட்டி வேணபாணந்தொடுத்தார்
சரமேற்சரம்பொழிந்தார் சாமர்த்தியமுள்ளவர்கள்
கலிங்கர்தெலுங்கர்களும் தெலுங்கர்கலிங்கர்களும்
கன்னடியகஸ்திரியர் கஸ்திரியர்கன்னடியர்
சத்திரியர்முத்திரியர் முத்திரியர்சத்திரியர்
யானையோடுயானைதாக்க அஸ்வத்தோடஸ்வந்தாக்க
ஒட்டகமுமொட்டகமும் ஒக்கப்போர்செய்யுதங்கே
ஒருவர்க்கொருவால்லோ உயுத்தங்கள்பண்ணுகிறார்
எட்டிற்றேநல்லசண்டை எழும்பிற்றேராயபேரி
மூளுதேநல்லசண்டை முழங்கிற்றேராயபேரி
வந்துமுனைகொடுத்தாள் வாழ்மாரியல்லியம்மாள்

வீமசேனன் யுத்தம்.

வெற்றிமதயானை வீமனவன்பாய்ந்து
வந்துவளைத்தானே வல்லிடிபோல்தேர்திருப்பி
தேரைதிருப்பியவன் செங்கையில்வில்லெடுத்தான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
அம்புதொடுத்தானே அல்லியவள்மேலாக
வாரிப்பொழிந்தானே வளம்பெரிய அஸ்திரத்தை
வாயுவாஸ்திரங்களோடு இந்திரஸ்திரங்களுந்தான்
சூரிய அஸ்திரமாம் சுப்பிரமணியஸ்திரமாம்
மூடுபனிபோலாக மிடுக்கிவிட்டான்பாணமதை
அம்புவரும்வேகமானு லார்க்கமுடிபோகாது
பாணம்வரும்வேகமானல் பார்க்கமுடிபோகாது
சரவருஷம்போலாகச் சரமேற்சரம்பொழிந்தார்

கண்டாளேயல்லியம்மாள் கண்கள்சிவந்தாளே
சீறியெறிபறந்து சிங்கத்தைப்போற்கதும்பி
கழுத்திலேமங்கியம் கட்டினவனாரடா
திருட்டுப்பயலேயுன் சிவன்பறித்திடுவேன்
சண்டிப்பயலேயுன் சாமாத்தியம்நாலழிப்பேன்
என்சமர்த்துஞ்சேவகமு மிப்போதெரியுதுபார்
அல்லியென்றுபேர்சொன்னா லழுதபிள்ளைவாய்மூடும்
அல்லியென்றுபேர்சொன்னா லண்டங்கிடுகிடெனவும்
அறைநாழிக்கோள்ளையிலே யளகாபுரஞ்சேர்த்திடுவேன்
தேரைத்திருப்பினாளே செங்கையிலே வில்லெடுத்தாள்
பம்பரப்போலோக பாரதந்திருப்பி
சக்கரத்திகிரிபோலே சம்பிரமத்துடன்தேர்திரும்பி
வில்வளைத்துநாரிபூட்டி விட்டாள்சரபாணம்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டாள்
அம்புவரும்விதங்க ளார்க்கமுடியாது
பாணம்வருவிதங்கள் பார்க்கமுடிகூடாது
கார்த்திகைமாதத்திலே கனத்தமழைபெய்கதுபோல்
ஐப்பசிமாதத்திலே யடர்ந்தமழைபெய்கதுபோல்
சோனைமழைபோலே சொரிகிறான்பாணங்களை
அக்கினியாஸ்திரங்கள் அனந்தம்பொழிந்தாளே
நெல்லிப்பழம்போலே நெருங்கிற்றேகொப்பளங்கள்
அருநெல்லிப்பழம்போலே யஸ்தமெல்லாங்கொப்பளிக்க
நான்நாள்மட்டாக நல்லசண்டைபண்ணினார்கள்
தன்மேல்வரும்பாணஞ் சங்கரிப்பான்வீமனவன்
இருவர்சமானமாக இனியசண்டைபண்ணுகிறார்
வீமன்விடும்பாணத்தினால் வெகுசனங்கள்மாளுது
யானையின்மேலிருந்ததுரை யறுத்துவிழுகிறார்கள்
குதிரையின்மேலிருந்ததுரை கொக்கரித்துகில்விழுந்தார்
ஒட்டகத்தின்மேலிருந்ததுரை யோலமிட்டுவிழுவார்கள்
அம்மாடியென்றுசொல்லி யலறிவிழுவார்கள்
தென்னங்காய்போலாகச் சேனதலையுருவவிட்டான்
பனங்காய்போலாகப் பரித்தெறிந்தான்வேலாதலை
அருந்ததலைகளெல்லா மம்மானுருடுதங்கே [லே
பெட்டியும்பேழைபோலே பெலிகொடுத்ததலைகள்போ
சட்டிகள்பானைபோலே தலைகளுருளவிட்டான்

அம்மாடியென்றுசொல்லி யனேகந்தலையுருளும்
காலறுந்துபோகுதே கைகளற்றுபோய்விடுதே
சால்குடலசைந்து இருநிலத்தில்வீழ்வாரும்
மணிக்குடல்தான்சரிந்து மண்ணிலேவீழுவாரும்
நில்லப்பூச்சிபோலாக நிலத்தில்நகங்கலுற்றார்
சாகிறபுணிபோலே தரையில்நகுங்கலுற்றார்
மாண்டசெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
செத்தசெனங்களென்றால் சொல்லமுடிபோகாது
அல்லியம்மாள்பாளையங்க ளலைந்தலைந்தோடுகுது [றார்
சண்டைபண்ணமாட்டாமல் சலாம்பண்ணியோடலுற்
ஆயுதத்தை தூரவைத்து அருகில்சலாம்பண் ணுவாராம்
பண்டாரமென்பாரும் பரதேசியென்பாரும்
நாமத்தைக்காட்டுவாரும் நான்தாதனென்பாரும்
பூநூலைக்காட்டுவாரும் பிராமணனென்பாரும்
பிச்சையிரந்துண்ணப் புறப்பட்டோமென்பாரும்
ஐயையோதெய்வமென்று அலைகிறதேபாளையங்கள்
வடுகரெல்லாநீனென்பார் வன்றமிழர்தண்ணீரென்பார்
துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லிப்புலம்புகிறார்
தண்ணிதண்ணியென்று தவிக்கிறதேபாளையங்கள்
மார்பளவுரத்தாறு வழியவிட்டான்வீமனவன்
பிடாரியம்மன்கோவிலுக்கு பலிகொடுத்தபாவனைபோல்
அம்மையார்கோவிலுக்கு ஆடுவெட்டும்பாவனைபோல்
துள்ளுகிறதலைகளெல்லாம் செருக்களங்கொள்ளவில்லை
ரத்தாறுஓடினதே யுத்தத்தளங்களெல்லாம்
இவ்விதமாக இனியபோர்செய்ததில்லை
தேவாதிதேவரெல்லாம் சொல்லுவாரொருவார்த்தை
ராமரதுசண்டையென்பார் ராவணன்சண்டையென்பார்
சூரபத்மன்சண்டையென்பார் சுப்ரமண்யன்சண்டை
யென்பார், வீரபத்ரன்சண்டையென்பார் வேள்விதக்கன்
சண்டையென்பார், வெற்றிமதயானை வீமனவன்பின்னி
டையான், நான்குநாள்மட்டுமல்லோ நல்லசண்டைபண்
ணுகிறான், அல்லிப்பெருமாளு மாக்கரித்துபற்கடித்து
ஆலவாய்சொக்கரென்று ஆண்டவனைத்தானினைத்து
திவ்வியாஸ்திரத்தை தூபமிட்டுத்தானெடுத்தாள்
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டாள்மண்மேலே

மார்புரளவாங்கியல்லோ தோள்புரளவாங்கிவிட்டாள்
மேலிட்டுவருகிறதே விமனது தேர்மேலே
வாயில்நெருப்பெரிய வந்துவிழுந்ததுவே
தேருமுடைந்ததுவே செம்புரவிசெத்ததுவே
போட்டதோர்வச்சிரகபாய் தவிடுபொடியாச்சுதங்கே
சட்டைதமான்வச்ரகபாய் தவிடுபொடியாச்சுதங்கே
சரீரங்களெல்லாம் சல்லடைக்கண்ணாச்சுதுகாண்
மானங்குலைந்தானே மதகரியான்விமசேனன் [ன்
விழுந்துமெழுந்தவனும் வெட்கங்கெட்டோடிவிட்டா

ஸ்ரீ கிருஷ்ணபகவான் யுத்தம்.

மாயன்பெருமாளும் மலைராமர்கண்டுவிட்டார்
வகைமோசம்வந்ததென்று மாயவருந்தேர் திருப்பி
வந்துமேசண்டைசெய்தார் மயிலனையாள்தன்னுடனே
பம்பரம்போல்திரும்பி பாணந்தொடுத்துவிட்டார்
அல்லிப்பெருமாளு மாக்கரித்துப்பற்கடித்து
சொக்கரைத்தானினைந்து தொட்டாளேபாணமதை
இருவர்சரங்களு மிருநிலந்தில்தான்சுழல
பம்பரம்போலாகப் பாரதந்திருப்பி
விட்டாள்சரபாணம் மேகவண்ணன்தேர்மேலே
வாய்வாஸ்திரங்களும் வருணாஸ்திரங்களும்
வச்சிரபாணமதை வாரிச்சரம்பொழிந்தான்
ஒன்றெல்லரண்டல்ல ஒருகோடிபாணம்விட்டாள்
சூரியனைத்தான்மறைத்தாள் தொடுத்தநல்லபாணமதால்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டாள்
பெருமாளுமல்லியரும் பிரியாதசண்டைபண்ணர்
மாளுஞ்சேனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
ஐயையோதெய்வமென் றலறுதேபாளையங்கள்
யானையின்மேலுள்ளவர்கள் அபயமிட்டுமண்ணைக்கவ்வ
குதிரையின்மேலுள்ளவர்கள் கொக்கரித்துமண்ணைக்கவ்
ஒட்டகமேலுள்ளவர்கள் ஓலமிட்டுமண்ணைக்கவ்வ [வ
இந்தவிதமாக இனியசண்டைபண்ணுகிறார்
அலைகடல்சத்தம்போல் அபயமிடும்வெகுஜனங்கள்
கூக்குரலாகிறதே கோஷ்டமிடும்பாளையங்கள்
அபாயம்சிவாயமென்று அலைகிறதேவெகுசனங்கள்
வடுகரெல்லாம்நீளென்பார்வன் றமிழர்தண்ணியென்பார்

துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லுகிருர்பாளையத்
தண்ணிர்தண்ணிரென்று தவிக்கிறதேபாளையங்கள் [தில்
அப்போது அல்லியம்மாள் அதிகமானகோபமுடன்
வுச்சிரபாணந்தன்னை மந்திரதூபமிட்டு
மாயரதுதேர்மேலே வரிந்துஇழுத்துவிட்டாள்
உக்கிராஸ்திரக்களது திவ்வியாஸ்திரங்களது
இராமச்சந்திர அஸ்திரமாம் நாராயண அஸ்திரமாம்
அக்கினியாஸ்திரம் அனந்தம்பொழிகின்ருளே
ஒன்றல்லஇரண்டல்ல ஒருகோடிபாணவிட்டாள்
வாரிப்பொரிந்தாளே வளம்பெரிய அஸ்திரத்தை
எடுத்துப்பொழிந்தாளே ஏழுலட்சம்பாணங்களை
பாதாளமூடுருவப் பாணந்தொடுத்தாளே
ஆயன்சரீரமெல்லாம் அங்கப்பிளக்கடித்தார்
சல்லடைக்கண்போலே சரீரமெல்லாந்துளைத்து
மயிருக்கொருபாணம் மாதுதொடுத்துவிட்டாள்
விற்பிடித்தகைகளெல்லாம் மெத்தசிவப்பேறிற்று [ள்
கையெல்லாஞ்சோர்ந்துவிட கன்னியரும்பாணம்விட்டா
ஆகாயதேவரெல்லாம் அல்லியரைக்கொண்டாடினர்
இந்தப்படியாக இனியசண்டைசெய்கையிலே
இவனேவொருபாரமென்ருெருபாணமதை
மார்புரளவாங்கியல்லோ தோள்புரளதொடுத்துவிட்டாள்
வாயில்நெருப்பெரிய வந்துவிழுந்ததுவே
தேருமொடிந்துபோச்சு செம்புரவிநாலும்போச்சு
சட்டைதயான்வச்சிரப்பாய் தவிடுபொடியாகி
செங்கையிலேவில்லெடுத்து சோடுசட்டைதானணிந்து
பாதசாரியாய்ப்போகிருர் பாரளந்தயெம்பெருமாள்
கைமோசம்வந்ததென்று கரியமாலோடுகிருர்

சகாதேவன் யுத்தம்.

கண்டான்சகாதேவன் கரியமாலோடுவதை
தேரைத்திருப்பினனே செங்கையில்வில்லெடுத்தான்
வந்துவளைந்துகொண்டான் வல்லிடிபோல்சகாதேவன்
பேரிகையறைவித்துப் போயெதிர்த்தானல்லியண்டை
சண்டைபேரிகையடித்து சமர்த்துடன்வந்தெதிர்த்தான்
கண்டாளேயல்லியம்மாள் கண்கள்ரெண்டுந்தான்சிவக்க
ஒருபாணம்விட்டாளே யுலகமெல்லாந்தானதிர

பேரிகையைகிழித்தாளே பெரியடமாரன்கிழித்தாள்
விழுந்துமெழுந்திருந்து வெட்கங்கெட்டுஓடிவிட்டான்

சகாதேவன் அல்லியைப் புலிக்கூட்டினுல்
பிடித்து வருகிறது.

எந்தவிதத்தினுலே இவளைச்செயித்திடலாம்
அடங்காதநீலிதனை அடக்கும்வழியெப்படித்தான்
என்றுமேதானினைத்து இளையசகாதேவன்
உள்ளங்கைசாஸ்திரத்தை உத்தியுடன்பார்த்து
பாதாளஅஞ்சனத்தைப் பார்த்துசகாதேவன்
பத்துசுற்றுபுலிக்கூண்டை பாங்குடனேகொண்டுவந்தார்
சூதுபண்ணியல்லியரை போனிலடைக்கவேணும்
இல்லாமற்போனுக்கால் இவளைஜெயிக்கமுடியாது
இவள்கையால்மாளுவ தெல்லாரும்நிச்சயந்தான்
சாஸ்திரத்தைத்தான்பார்த்து தாக்குள்ளசகாதேவன்
செருக்களத்தைவிட்டவனுஞ் சீக்கிரமாய்ப்போகலுற்று
மாளிகையில்போய்ச்சேர்ந்து மன்னன்சகாதேவன் [ன்
விசுவபிர்மதச்சர்களை விரைந்தோடியழையுமென்று
அப்போதுகாவலர்க ளழைத்தோடிவந்தார்கள்
ஆயிரம்தச்சர்களை யழைத்துவந்துவிட்டார்கள்
வந்துபணிந்தார்கள் மன்னன்சகாதேவனைத்தான்
எங்களையழைத்தபணி யாதென்றுகேட்டார்கள்
நிமிஷமரநாழிகையில் நிருமியுங்கூண்டையென்றுன்
ஒருபக்கம்பார்த்தாலே யுச்சிதகூண்டைபோலே
மறுபக்கம்பா ர்த்தாலே மச்சுவீடுபோலாக
பத்துசுற்றுகோட்டையதாய் பக்கங்கதவடைத்து
வாசலுக்குவாசலது வச்சிரத்தாள்போட்டு
சாவியுஞ்சங்கிலியுந் தாப்பாளும்வையுமென்றுன்
ஆயிரந்தச்சர்களு மக்கணமேசெப்பனிட்டு
நிமிஷமரைநாழிகையில் நியமித்தார்விசுவகர்மா
சோடித்தோமென்றுசொல்லித் தெண்டனிட்டுபோனுர்
அப்போசகாதேவன் அங்ஙனமேதாமெழுந்து
தேரைத்திருப்புகிற சூதனைத்தானழைத்து
குதிரையலங்கரித்துக் கூண்டிலேகட்டுமென்றுன்
பாராசாரிபுரவிகளை பாங்காயலங்கரித்து
கூண்டுக்கழகாக குதிரைகளைக்கட்டுமென்றுன்

சாஸ்திரகொடிவிருதை சமர்த்துடனே கட்டுமென்றான்
அங்கேசகாதேவ னப்புவில்லுங்கைபிடித்து
ஏறினான்கூண்டதனி லெடுத்தார்கள்பேரிகையை
திறவுகோல்பிடித்துச் சூதாகப்போறானே [ல்
கூண்டைத்திருப்பியல்லோ கொண்டுவந்தான்பாளையத்தி
செயங்கொண்டோமென்று செங்கையில்வில்லெடுத்தார்
சண்டைசண்டைஎன்றுசொல்லி சண்டைபேரியடிபடுது
வெற்றிவெற்றியென்றுசொல்லி வெற்றிநகாரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
கண்டாளேயல்லியம்மாள் காற்றைப்போல்தேர்திருப்பி
வந்துமுனைந்தாளே வல்லிபோல்வளைந்தாளே
எட்டுதேநல்லசண்டை எழும்பிற்றேராயபேரி
முட்டுதேநல்லசண்டை முழங்கிற்றேராயபேரி
விட்டாள்சரபாணம் மேனியெல்லாந்தான்மறைய
ஒருவர்விடும்பாணம் ஒருவர்தடுக்கிக்கொள்வார்
இருவர்சாமானமா யிருந்துசண்டைபண்ணுகிறார்
அர்த்தசந்திரபாணங்களி லல்லியொருபாணம்விட்டாள்
சகாதேவன்வில்முறியச் சமர்த்துடனேபாணம்விட்டாள்
வேதாளமாகவந்து வில்லைமுறித்ததுவே
வில்லுமுறியவேதான் வேந்தன்சகாதேவன்
வாள்கேடயந்தானெடுத்து மண்ணிற்குதித்தானே
முன்கந்துபின்கந்து முப்பத்திரண்டுகந்து
இந்திரவித்தையி லெழும்பிவாரான்சகாதேவன்
அப்போதுஅல்லியரு மாரணங்குதான்பார்த்து
கரணங்கள்போடுகிறாள் கைலாகுபண்ணுகிறாள்
கருடபாய்ச்சல்தானெடுத்து கொப்பெனவேபாயுகிறாள்
புலியும்புலியுமது போயெதிர்த்தபாவனைபோல்
யானையும்யானையுமாய் அதிர்ந்துமெதிர்த்ததுபோல்
சிங்கமும்சிங்கமுமாய்ச் சீரியெதிர்த்ததுபோல்
கொக்கரித்துயாளியிட்டுக் கொற்றவனும்பாய்கிறான்
துள்ளுமான்குட்டியைப்போல்துள்ளுகிறாளல்லியம்மாள்
ஓடியொளிப்பவன்போ லுபாயமாய்ச்சகாதேவன்
ஓடிப்போறானென்று உலகாளும்ராசகன்னி
கூடக்குதித்தாளே கூண்டுதனிற்பாய்ந்தாளே
முன்வாசற்புகுந்தவனும் பின்வாசலோடலுற்றான்

அவ்வாயற்புகுந்தாளே அல்லிமலர் நாயகியாள் [ருள்
எங்கேபோனன் கள்ளனென்று யிளங்கொடியாள்தேடுகி
ஐந்தாங்கட்டுவாசலிலே யல்லியம்மாள் தான்புகுந்தாள்
அவ்வாசற்கதவடைத்து தாப்பாளும்போட்டானே
ஐந்துவாசற்கதவடைத்து ஆணழகன் வெளியானன்
அகப்பட்டாளல்லியென் றடியுமென்றான்பேரிகையை
செயங்கள் செயங்களென்று செயபேரிபோடுமென்றான்
அகப்பட்டாளல்லியென்று அடுபடுதேபேரிகைதான்
சிக்கினளல்லியென்று சின்னங்களூதுகிறார்
அத்தண்டபேர்களுமே அனைவோருங்கேட்டார்கள்
சந்தோஷப்பட்டார் தருமருடசேனையெல்லாம்
தப்பினசேனையெல்லாந் தென்மதுரைசேர்ந்துவிட்டார்
அப்போதுசகாதேவ ஞனந்தமாய் வாருனே
கூண்டைதிருப்பியே கொண்டுவந்தான் வையகத்தில் [ன்
அருச்சுனன் தன்னருகே அடிபணிந்துதெண்டனிட்டா
தெண்டனிட்டசகாதேவர் சொல்லுவாரொருவார்த்தை
அல்லியுடன்சண்டைபண்ண வமருக்குப்போனபோது
ஆங்காரப்பெண்புலிதா னகப்பட்டதென் கையிலே
வேங்கைப்புலியதனை விடுகூண்டுதனிலடைத்து
மதுராபுரியாண்ட வாழ்வரசியல்லியரை
தேரேறிச்சண்டைசெய்யுந் துரைகளைகொண்டுவந்தேன்
அவ்வார்த்தைதான்கேட் டருச்சுன னுமனமகிழ்ந்து
சந்தோஷப்பட்டானே தாமந்தவாழ்மார்பன்
அன்னநடை துரோபதையா ளாரணங்கைதானழைத்து
சோரவளநங்கை சுபத்திரையைத்தானழைத்து
நான்செய்தகாரியத்தை நாயகமேநீர்கேளீர்
மாயவருய்யானுமாக வனவாசம்போனபோது
தீர்த்தயாத்திரைபோகையிலே செய்தபிழை நீர்கேளும்
ஆதிசிவனைத்தான் அடிவணங்கவேணுமென்று
மதுராபுரியிலே மாணிக்கச்சொக்கலிங்கம்
பிட்டுக்குமண்சுமந்த பித்தரைக்காணவென்று
மதுரைக்குபோகின்ற வழியிலேயங்கொருவன் [ன்றான்
அழுதகண் ணும்சிந்தையுமாய் யங்கொருவன்புலம்பிநி
மதுராபுரியாளும் வாழ்வரசியல்லியற்கு
அன்றுடமூத்தெடுத்து அளப்பானுமாரிழைக்கு

படிமூத்துகுறைந்ததென்று பதறியவன்விழுந்தான்
அல்லியரசானி அரசுநிலையாள்கிறதும் [மென்றேன்
அவள்பிறந்தவண்மைகளும் ஆவலெல்லாஞ்சொல்லு
ஆறுயிரம்பாண்டியர்க ளரியதவஞ்செய்ததுவும்
அகிலாண்டசொக்கலிங்கம் அங்கயற்கண் கிருபையினுல்
அல்லியிலைமேலே அவள்பிறந்தவண்மைகளும்
ஏழுபிராயத்திலே யெதிர்த்துவந்தநீன்மூகனை
வெட்டித்தலைதுணித்து வீரபட்டங்கட்டினதும்
கொள்ளவருமாப்பிள்ளைக்கு குறடாகொடுப்பேனென்று
சேரவருமாப்பிள்ளைக்கு சேருபந்துதருவேனென்ருள்
ஆளவருஞ்சம்பந்தியை யடிப்பேனேசேருபந்தால்
மூச்சுகொட்டாதெருவிற்கட்டி மொய்குழலாளாண்டிருந்
இவ்வார்த்தைதான்கேட் டென்மனதுதாளாமல் [தாள்
கட்டினவிருதறுத்துக் கலியாணஞ்செய்யவென்று
என்றுமனதிலெண்ணி எட்டுநாள்காத்திருந்தேன்
பத்தினியானவள் பாரிவேட்டைபோனதுவும் [னேன்
பெண்வேஷம்போட்டுமல்லோ பின்தொடர்ந்துபோ
கரும்புரவிமேலேறி மான்வேட்டையாடையிலே
ஆனந்தமாரியருக் கம்புபொறுக்கித்தந்தேன்
வேட்டைகளாடியே மெத்தக்களைத்தவளும்
ஆலமரத்தடியில் அங்கேபடுத்தாளே
காலும்பிடித்தேனே கதையொன்றுசொன்னேனே
அடையாளங்காட்டவென்று ஆரங்கழற்றிகொண்டேன்
அன்றுபோய்மற்றநாள் மற்றொருவேடங்கொண்டேன்
பித்தம்பிடித்தவன்போல்பெரும்பயித்தியங்கொண்டவனா
அல்லியதுபட்டணத்தில் அழகுதிருக்குளத்தில் [ய்
வண்ணமருந்தெடுத்து வளம்பாடியானுரைத்தேன்
அனேகந்தாதிமாரைவிட்டே யாற்றிலென்னைபுரட்டெ
அதினாலும்சாகாமல் யவள்நினைவாயிருந்தேன் [ன்ருள்
தூக்குமரந்தனிலே போடுமென்ருளென்னையவள்
செங்கமலத்தாதியரை வுபாயமாய்க்கொன்றுவிட்டேன்
காளியம்மன்கோவிலிலே காவுபோடச்சொன்னாளே
பூதக்கிடங்கிலே போட்டடைக்கச்சொன்னாளே
பூதம்பணிமாறப் பிழைத்திருந்தேனவ்விடத்தில்
மாயனொருபெண்ணாகி வரவழைத்துக்கொண்டுவந்தார்

ஆண்டியைப்போலவடிவெடுத்து அல்லிதன்வாசலிலே
வண்ணப்படமெடுத்து மாதுபிச்சைவாங்கிவந்தேன்
மாயன்பிடாரனுனர் வண்ணவிதப்பாம்பானேன்
பாய்புருவாய்ப்போயிருந்து படுக்கையிலேநான்கலந்து
பொடிப்போட்டுமாதினுக்கு புத்திரனுண்டாக்கிவைத்தே
மற்றொருவேஷமது மறுநாள்வடிவெடுத்து [ன்
பெருமாளந்தமாயவனுர் பிராமணப்பெண்ணுனர்
மெத்தக்கிழவனைப்போல் வேதியனுய்வடிவெடுத்து [ம்
அத்வானமானகாட்டில்தண்ணீர்பந்தல்வைத்திருந்தோ
அதுவேஷந்தன்னுடனே அரண்மனையிற்போயிருந்தே
தேவேந்திரனைநோக்கி செய்தேன்பெருந்தபசு [ன்
ஆனைத்தலைபோலே அழகானமங்கிலியம்
தும்பிக்கைபோலாகத் திருமங்கிலியச்சரடு [செய்தேன்
கொடுத்தனுப்பவேண்டுமென்று கொப்பெனவேதவஞ்
மாயத்திருநீறும் மங்கிலியந்தரித்துவிட்டேன்
மாலைப்பசுங்கிளிக்கு மங்கிலியந்தரித்துவிட்டேன்
ஆருமறியாமல் அங்கொருவர்காணுமல்
கட்டினவிருதறுத்துக் கடிகியேவந்துவிட்டோம்
நான்குமாதங்கெற்பமது நடக்குதுகாண்மாதினுக்கு
இன்னவனென்றுசொல்லி என்னையறியமாட்டாள்
கழுத்திலேமங்கிலியங் கட்டினவனையறியாள்
தரணியிலுள்ளராஜர்களை வாவென்றழைத்தவளும்
நெய்களைகாய்ச்சியல்லோ கைகளைத்துவையுமென்ருள்
மண்டலத்துராஜரெல்லாம் வந்துசத்தியஞ்செய்தார்கள்
வெற்றிமதயானை வீமன்குடித்துவிட்டான்
ஆகையினுலேயவள் அமருக்கேயிங்குவந்தாள்
தர்மபுடியானுஞ் சகாதேவன்பிடித்துவந்தான் [தான்
புலிகூண்டிலேயடைத்து பொற்கொடியைகொண்டுவந்
இந்தவயணமெல்லா மேந்திழைக்குநீயுரைத்து
தம்பிக்கைவாங்கியே நாயகியைவெளிவிடுங்கள்
கோபங்களாற்றுங்கள் கொம்பனையாள்நாயகிக்கு
மனந்தேறச்சொல்லுங்கள் மாலையிடப்பாருங்கள்
சத்தியத்தைவாங்கித் தையலைவிட்டுவிடும்
ஆயுதத்தைவாங்கியேதான் அப்புறத்தில்விட்டுவிடும்
என்றதுசொல்லியே எழில்விஜயனனுப்பிவைத்தான்

திரௌபதை முதலானவர்கள்வந்து அல்லியம்மாளை
மனந்திருப்பி மாலையிடச்செய்தது.

அப்படியேயாகுதென்று அன்னநடைமாதர்களும்
திரௌபதைநாககன்னி சுபத்திரைவருகிறார்கள
மந்தாரக்குந்தியம்மாள் மற்றுமுள்ளோர்வருகிறார்கள்
வாசலும்வாசலது படியேழுந்தான்கடந்து
புலிக்கூண்டுதன்னருகே போய்சேர்ந்தார்மாதரெல்லாம்
தோறுவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
ஆரடியம்மாளே அழகானகூண்டிலேதான்
இப்பெரியகூண்டிலேதா னிருக்கிறவளார்காணும்
வாயைத்திறந்துநீ வந்தவகைசொல்லுமென்றாள்
மருடத்துரைச்சியவள் வாய்திறந்தேதுசொல்வாள்
என்னசொல்வேன் நாயகியேஎன்தலைவிதிப்பயனை
ஆருக்கடங்காம லரசுநிலைசெய் திருந்தேன்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரி லுள்ளேமணற்சேருமுண்டு
அடிக்கிறகாற்றதனி லலைகாற்றுருப்புமுண்டு
ஆலாலகண்டருக்கு கண்டங்கருப்புமுண்டு
குண்டுமணிக்காலுலுங் கொஞ்சங்கருப்புமுண்டு
மயிரேகருப்பொழிய மற்றகருப்புமில்லை
புருவங்கருப்பொழிய பின்னேகருப்புமில்லை
ஆறுயிரம்பாண்டியர்கள் அரியதவஞ்செய்தார்கள்
மாலுகிறேமென்றுசொல்லி மலைமேற்றவமிருந்தார்
மாலாதேயென்றுநான் மலரிலவதர்த்தேன்
அல்லியிலைமேலே ஆரணங்குபெண்பிறந்தேன்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டித்தலைபிளந்து வீரபட்டங்கட்டிக்கொண்டேன
நீன்முகனைக்கொன்றுநான் நீலிபட்டங்கட்டிக்கொண்
எல்லையரசாண்டு இருந்தேனம்மாவிக்காலம் [டேன்
சேரவருமாப்பிள்ளைக்குச் சேருபந்துதருவேனென்றேன்
ஆளவருஞ்சம்பந்தியை யடிப்பேனென்றேன்சேருபந்
பொம்மைவிருதுகட்டிப் பூமியரசாண்டேனம்மா [தால்
எவனோதிருட்டுப்பையன் என்கழுத்தில்மங்கிலியம்
தாலியைக்கட்டினனே தனிவிருதையறுத்துவிட்டான்

அறிந்துபிடிக்கவென் றனைவரையும்வரவழைத்தேன்
நெய்தனைக்காச்சியே கையதுவையுமென்றேன்
நெய்யைக்குடித்துவிட்டு நிர்மூடனானவனும்
சண்டைக்குவந்திடத்தில் சமர்த்துகளைக்காட்டாமல்
ஒ.திரேயிருந்துமல்லோ என்சமர்த்தைப்பார்க்கவேணும்
என்னைமோசஞ்செய்து இக்கூண்டிலடைத்தானே
சரியாகநிற்கவேண்டுஞ் சமர்த்துகள்காட்டவேண்டும்
வெளியேவிடச்சொல்லும் வீரியத்தைக்காட்டுகிறேன்
அவ்வார்த்தைதான்கேட்டுயே துரௌபதியும் [யும்
கழுத்திலேமங்கிலியம் கட்டினவண்மையெல்லாம்
அந்தவதிசயத்தை ஆரணங்கேசொல்லுகிறேன்.
காட்டிலேவேட்டையாடக் கடுகவரும்போது
பெண்வேஷம்போட்டுமல்லோபின்னேதொடர்கிலேயோ
அம்புபொறுக்கலேயோ ஆரணங்கேயுந்தனுக்கு
காலும்பிடிக்கலேயோ கதையொன்றுஞ்சொல்லலேயோ
பித்தம்பிடித்தவர்போல் பெருமருந்துதானெடுத்து
வண்ணமருந்தெடுத்து தண்ணீரிலுரைக்கலேயோ
அல்லிப்பெருமாளே நீ அதிகோபங்கொள்ளாதே
ஆற்றிலேபோட்டுநீ அவரைபுரட்டலேயோ
தூக்கிலேபோடுமென்றாய் துய்யபசுங்கிளியே
காளியம்மன்கோவிலிலே காவுகொடுக்கச்சொன்னாய்
பூதக்கிடங்கிலே போட்டடையுமென்று சொன்னாய்
மற்றநாள்தெய்வகன்னி மணவாளனென்றழுது
தன்புருஷனென்றுசொல்லி தானழைத்துப்போகலேயோ
ஆண்டியரைப்போலேவந்து அல்லியேஉன்வாசலிலே
மடலூர்ந்துஉந்தனது வாசலிலிருக்கும்போது
பாம்புகளைவிட்டுப் பண்டாரத்தைகொல்லுமென்றாய்
பாம்புப்பிடாரனைப்போல் பத்தினிவருகையிலே
பாம்பாகவேடங்கொண்டு படுக்கிலேயோஉன்னிடத்தில்
உன்னிடத்தில்போகஞ்செய் துனக்குமைந்தனுக்கிவைத்
பார்ப்பானைப்போலேவந்து பணிமாலைசூட்டலேயோ[து
தாலித்தரித்தவர்தான் தருமர்தம்பிஅருச்சுனர்காண்[தே
உன்னைத்-தாலிகட்டிவந்ததுதான் சமர்த்தெனறும்பாரா
அல்லியிலேமேலே அதிசயமாய்ப்பெண்பிறந்து
மெத்தப்பெரியதென்று பாருதேஅல்லியரே

நான்-அக்கினியிற்பெண்பிறந்த அதிசயத்தை நீர்கேளும்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
சந்திரர்க்குமச்சமுண்டு சற்றேகறுப்புமுண்டு
குண்டுமணிக்காகிலும் கொஞ்சங்கறுப்புமுண்டு
எனக்கு-மயிரேகறுப்பொழிய மற்றகறுப்புமில்லை
புருவங்கறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை
மாசிலாபெண்பிறந்தேன் வளருகிறேனக்கினியில்
நெருப்பிற்பிறந்தேனே நீலப்பசுங்கிளியே
பாஞ்சாலனெக்கியத்தில் பிறந்தபதிவிரதை
மந்திரகிரிமேடைதன்னில் மச்சரையில்பெண்பிறந்தேன்
அர்ச்சுனரைமாலையிட அக்கினியிற்பெண்பிறந்தேன்
அரக்குமாமாளிகையில் ஐவரிறந்தாரென்று
செய்திதெரிந்து துயரமிட்டாரென்தகப்பன்
ஐவரிறந்தாரென்று ஆயாசப்பட்டார்கள்
நான்மீறிவளர்ந்தேனே மெல்லிருதுவானேன்
போதவளர்ந்தேனே பிள்ளைபெறும்நாளானேன்
கொள்ளவேவந்தார்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவந்தவர்கள் மட்டுமிதங்களில்லை
அப்போதருச்சுனரு மட்டுமிதங்களில்லை
குஷ்டரோகிபோலாக கொற்றவரும்வடிவெடுத்தார்
பாஞ்சாலன்பந்தலிலே பார்ப்பான்போல்வந்திருந்தார்
அப்போதுமென்தகப்பன் ஆலோசனைவதுசொல்வார்
வில்லைவளைத்தவர்க்கு மெல்லியரைகொடுப்பேனென்றார்
அவ்வார்த்தைதான்கேட்ட அரசுமுடிராஜாக்கள்
மண்டலத்துராஜாக்கள் வந்துவில்வளைத்ததில்லை
திக்கரசையாண்டதொரு துரைகளெல்லாம்வந்தார்கள்
வானவர்கோனிந்திரரும் வந்துவில்லைவளைத்தார்கள்
மண்ணுலகராஜர்களும் வில்லைவளைத்ததில்லை
தேசத்துராஜாக்கள் வில்லைவளைத்ததில்லை
அரசுமுடிராஜாக்கள் அவ்வில்லைவளைத்ததில்லை
திக்கரசுராஜாக்கள் சிலைவளைக்கமாட்டாமல்
வெட்கங்கள்கெட்டாரே வேந்தரந்தராஜாக்கள்
ஆருலுமுடியாது அவ்வில்லைவளைப்பதற்கு
வந்தவந்தராஜாக்கள் மானங்குலைந்தார்கள்

அப்போதுஉன்புருஷன் அர்ச்சுனண்டி ஆணழகன்
பார்ப்பானைப்போலிந்த பார்த்திபனெழுந்திருந்து
தேவாதிதேவர்மெச்ச துரைகளெல்லாம்பார்த்திருக்க
விஷ்ணுவும்பிரமாவும் வியந்துநடுங்கிடவே
விண்ணிரண்டுந்தானதிர அவ்வில்லைவளைத்தாரே
நீர்பார்த்துமினெய்தார் நித்திலங்குபூழடியார்
என்னைமாலையிட்டாரே எழில்விஜயனருச்சுனரும்
எனக்குருறைவுமுண்டோ வென்னுடையதங்கையரே
அவ்வார்த்தைதான்கேட் டேதுசொல்வாள் நாககன்னி
அல்லியரே அல்லியரே அதிசயத்தைநீர்கேளும்
நான்-இந்தவுலகமல்ல இன்னாட்டுமனுஷியல்ல
நாகலோகம்பெண்பிறந்த நாககன்னிநானல்லவோ
ஊருமொருமாணிக்கம் பேருமொருமாணிக்கம்
மாணிக்கம்தன்னை மடையடைக்கும்பொற்பாவை
என்னைவந்துமாலையிட்டா ரியலானஉன்புருஷன்
எனக்கென்னகுறையாக விருக்குறேண்டியப்பியரே
இவ்வார்த்தைதான்கேட் டெழுந்தாள்சுபத்திரையும்
பூவிற்பிறந்தாளே பொற்கொடியே நீர்கேளும்
மகுடத்துரைச்சியரே வார்த்தையொன்று நீர்கேளும்
ஆயராதுதங்கையர்காண் அம்மான்மகளல்லவோ
என்னைச்சிறையெடுத்து மிட்டுவந்தாருன்புருஷன்
நானென்னகுறையாக விருக்கிறேனாச்சியரே
அருச்சுனரைப்பார்த்து ஆவல்தெளிந்திடுமே
மீசைமுருக்கழகர் விழிவிற்கருப்பழகர்
நாவிலேநட்சத்திரம் நயனவிழிப்பார்வைகளும்
தோளில்துளசிமாலை தொப்புளிலமூர்தகலசம
பல்லில்பரசவீணை பாதத்தில்செந்தாமரை
முதுகிலேமச்சரேகை முழங்காலிலேமுத்துமாணிக்கம்
ஸ்திரீலீலைமன்மதண்டி சிறுபெண்கட்குகந்தவண்டி
அர்ச்சுனரைப்பார்த்தாலே ஆவல்தெளிந்துவிடும்
அவ்வார்த்தைதான்கேட் டல்லியருமேதுரைப்பாள்
அழகுவேண்டுமென்றுசொல்லி ஆரடிகாத்திருந்தார்
மாப்பிள்ளைவேணுமென்று மயங்கினவராரடிதான்
கணவனார்வேணுமென்று காத்திருந்தாராரடிதான்
வேண்டுமென்றிருந்தாலல்லோ விசையனைவேண்டுவது

இராசாக்கள்தன்னைப்போலே நானுமகுடஞ்சூட்டி
மாணிக்கக்கிரீடமது மகுடஞ்சிரலிட்டு
கத்திகட்டிசீமைகளைக் கன்னியரசாளலையோ
எதிர்த்தவரைசங்கரித்து எல்லையரசாளலையோ
மண்ணாண்டராசாத்தி மனையாட்டியாயிருந்தால்
பூமியாண்டராசாத்தி பெண்சாதியாயிருந்தால்
கண்டார்நகையாரோ கலியுகத்தாரேசாரோ
பார்த்தார்நகையாரோ பாருலகமேசாதோ [யும்
இவ்வார்த்தைதான்கேட் டேதுசொல்வாள்ரோபதை
மகுடத்துரைச்சியரே வார்த்தையொன்று நீர்கேளும்
தலையிலெழுதினதை தள்ளிவைப்பாராருமில்லை
ஏட்டிலெழுதினதை யெடுத்தெறிவாராருமில்லை
அன்றெழுதுமாதிசிவன் அழித்தெழுதப்போறதில்லை
கதியைத்துலைக்கலாம் காவேரிநீந்திடலாம்
விதியைத்தொலைப்பதற்கு வேறுவிதநாமறியோம்
கழுத்திலேதாலியது கட்டியிருக்கையிலே
வயிற்றிலேபிள்ளையது வந்துமிருக்கையிலே
ஆயாசப்படுவதுதான் அன்னியருக்கேச்சாகும்
தரணியுள்ளோர்கேட்டால் சற்றேநகைப்பார்கள்
மாலைதரித்து நீ மணமுகூர்த்தஞ்செய்யவேணும்
எப்போதும்போலேயுங்களிராச்சியமாளவேண்டும்
மதுராபுரிபட்டணத்தில் மண்டலத்தில்யாருமில்லை
எப்போதும்போலே நீ யெல்லையரசாளுமம்மா
அவ்வார்த்தைதான்கேட்டல்லியம்மாளேதுசொல்வாள்
நல்லது ஆச்சியரே நம்மைவெளியேவிடும்
உங்கள்-மனதின்படியாக விவகாரம்பேசுகிறேன்
கூண்டிலடைத்துமென்னை விவகாரம்பேசுவதேன்
விழியெதிரே நிற்கவேணும் விவகாரம்பேசவேணும்
வெளியேவிடுங்களென்றாள் மெல்லியிளங்கொடியாள்
அவ்வார்த்தைதான்கேட் டன்னநடைதுரோபதையாள்
தோகைமயிலாளும் துரோபதையுமேதுசொல்வாள்
கையிலிருக்கும்வாளைக் கன்னியரேவிட்டுவிடு
சந்திராயுதத்தை நீ சன்னலிலேவீசிவிடு
எனவார்த்தைதள்ளி நீ யாதொன்றும்பேசவேண்டாம்
என்று-நம்பிக்கைதந்தாலே நானும்விடுவேனம்மா

சத்தியத்தைத்தந்தாலே தையலேவிடுவேனம்மா
அப்படியேயாகுமென்று ஆரணங்குமேதுசொல்வாள்
சொக்கர்திருவாணை ஸ்ரீராமர்தன்னாணை
ஆதிசிவன்தன்னாணை ஆருயிரவராணை
அங்கயற்கண்ணம்மை யலர்மேலுதன்னாணை
பரமசிவன்தன்னாணை பார்வதியாள்தன்னாணை
சந்திரசூரியரும் சமதானதேவதைமேல்
ஈசுவரருமீசுபரியு மிருடியர்மேலாணையென்றாள்
இந்திரரும்பிர்மாவு மெல்லார்மேலாணையென்றாள்
சத்தியந்தவறுவேனென் றெண்ணாதேதையலரே
காலம்பிரண்டாலுங் கலியுகம்பொய்த்தாலும்
சந்திரர்சூரியர் தெற்குவடக்கானாலும்
சத்தியந்தவறுவேனென் றெண்ணாதேதையலரே
கதவைத்திறந்தல்லோ கடுகவிடுங்களென்றாள்
அப்போதிரௌபதியாள் ஆரணங்குமேதுசொல்வாள்
சகாதேவராஜாவைச் சடுதியில்வரவழைத்து
கதவைத்திறந்துநீர் கன்னியரைவிடுங்களென்றாள்
அப்போசகாதேவன் அன்புடனேஓடிவந்து
தந்திரவுபாயத்திற் சாத்தும்கதவுதன்னை
எட்டித்திறந்தானே இயலானபொற்கதவை
சூஸ்திரமாகவேதான் திறந்துவிட்டான்பொற்கதவை
மின்னலொளிபோல வெளிப்பட்டாளல்லியம்மாள்
சந்திரனைப்போலே தளும்புகிறாள்தோகைநல்லாள்
குன்றுவேற்சந்திரன் கொதித்தெழுந்தபாவனைபோல்
மருடத்துரைச்சியவள் வந்தாள்வெளியாக
மூடுசிவிகைவைத்தார் முன்னாலேயல்லியற்கு
ஏறினாள்சிவிகைதன்னி லெடுத்தார்நெடுங்குடைகள்
அந்தப்புரத்திலே யாரணங்கைக்கொண்டுசென்றார் [றார்
பத்தாங்கட்டரண்மனையிற் பத்தினியைக்கொண்டுசென்
சிவிகைதனைவிட்டிறங்கிச் சென்றாளேமாளிகையில் [தார்
கெண்டியில்தீர்த்தமது கொண்டுவந்துமுன்னேவைத்
கைகாலுஞ்சுத்திபண்ணிக் கனிவாயைக்கொப்பளித்து
அமுதுண்ணுமண்டபத்தி லாரணங்குபோய்ச்சேர்ந்தாள்
பந்தியாய்மேலாகப் பாங்குடனேவந்தமர்ந்தாள்
வாழையிலைபோட்டு வரிசையுடன்நீர்தெளித்து

மல்லிகைமொக்குபோலே மாற்றுவெள்ளி நிறம்போல்
போசனமும்பாலித்து பொரிக்கறியும் வைத்தார்கள்
பத்துவகைக்கறியும் பதினெட்டுபச்சடியும்
சர்க்கரைபோற்போதனமும் முப்பழவர்க்கமுடன்
உண்டுபுசித்தார்க ளுரிமையுடனல்லியரும்
கைகாலலம்பினார்கள கனிவாய்சுத்தம்பண்ணினார்கள்
மற்றுமொருமண்டபத்தில் வந்தமர்ந்தாரெல்லவரும்
சந்தனமும்புட்பமும் தாம்பூலந்தான்கொடுத்தார்
வாங்கித்தரித்தார்கள் மண்டபத்தில்கொலுவிருந்தார்
அன்னநடைதிரௌபதியாள் அர்ச்சுனனைத்தானழைத்
து, கல்யாணமுகூர்த்தமதுகடுகெனவேவையுமென்றார்
ஓலையெழுதியே ஊருக்கனுப்புமென்றாள்
ஆறுயிரம்பாண்டியர்க ளனைவருக்கும்வோலையது
எழுதியனுப்புமென்று ளின்பத்திரௌபதியாள்

கலியாணவோலையெழுதி அரசனுக்கனுப்புதல்.

ஈழப்பனையோலை இருபக்கங்காம்பரிந்து
தாழப்பனையோலை தலைப்பக்கங்காம்பரிந்து
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனர்மனமகிழ்ந்து
அண்ணன் தருமராயருக் கறிக்கையிட்டாரர்ச்சுனனும்
சாத்திரப்பிராமணரை சடுதியிலேதாமழைத்து
ஊர்க்கணக்கப்பிள்ளைகளை யுத்தமரைவரவழைத்து
சீரானகணக்கர்களை சிறப்புடனேயழைத்து
திங்கள்கிழமையிலே தசமிநல்லமுகூர்த்தமதில்
அல்லியற்குமர்ச்சுனற்கு மழகுமுகூர்த்தம்வைத்து
ஆறுயிரம்பாண்டியர்க ளனைவோரும்வாருமெனறார்
எழுதுமென்றாரோலையது இன்பமுடன்தருமலிங்கம்
அப்போதுகணக்கப்பிள்ளை அன்புடனேஓலைகொண்டு
வாரியவோலையிலே மஞ்சளைமேற்பூசி
ஆறுயிரம்பாண்டியர்களையண்மார்தங்களுக்கு
வக்கணையாகவேதான் வைத்துஎழுதினார்கள்
எழுதினவோலைதன்னைச் சுருள்முடித்துத்தந்தார்கள்
செந்தரிக்கந்தான்போட்டு திருவடிக்கீழ்வைத்தார்கள்
சாஷ்டாங்கதெண்டனிட்டு நடந்தாரேகணக்கப்பிள்ளை
ஓலைகளையெடுத்து உத்தமனார்தருமலிங்கம்
காற்றிலதிகமான கடுந்தூதரையழைத்து

மலையுடனேதலைகொடுக்கும் மன்னர்களைத்தானழைத்து
ஓலைகொண்டுபோகுமென்றார் உத்தமனார்தருமலிங்கம்
இந்திரபுரந்தாண்டி இயலான நாடுவிட்டு
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி யதிகவனந்தாண்டி
குன்றுமலைதாண்டி கொப்பெனவேதூதாட்கள்
மதுராபுரிபட்டணத்தில் வந்துவிட்டார்தூதாட்கள்
பாண்டியர்ராஜர்முன்னே பாங்குடனேஓலைவைத்தார்
ஆறாயிரம்பாண்டியர்கள் தாமமுடிராஜாக்கள்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்தூதாட்கள்
நாமும்வருவோமென்றார் ராஜாக்கள்பந்தலுக்கு
ஆறாயிரவர்களும் ஐயன்மார்பயணமானார்
பொன்னுமலைநாடாளும் போரெழுதியவர்கூட
மற்றுமுள்ளராஜாக்கள மன்னர்பயணமானார்
யானைபரிவார மடங்கலும்பயணமானார்
துரியோதனராஜனுக்குச் சுருளோலைவந்ததுகாண்
துருபதேசனுக்குச் சுருளோலைவந்ததுகாண்
மந்திரதேசனுக்கு வந்துதேஓலையது
மண்டலத்துராஜருக்கு வந்துதேஓலையது
கலியாணஓலைதன்னைக் கண்டந்தராஜாக்கள்
சகலமானபேரும் சந்தோஷப்பட்டார்கள்
திக்கரசையாண்டதொரு துரைகளெல்லாம்வாரார்கள்
மண்டலத்தையாண்டார்கள் வருகிறார்துரைகளெல்லாம்
மேளமுழங்கியது முப்மண்டபந்தானதிர
செந்தூளெழும்பியது சூரியனைக்கப்பிற்றங்கே
கருந்தூளெழும்பியது கதிரோனைக்கப்பிற்றங்கே
முத்தைப்பிளந்தார்கள் மூன்றுங்கால்நட்டார்கள்
பவளப்பிளந்தார்கள் பந்தக்கால்நாட்டினார்கள்
வெள்ளியால்கால்நிறுத்தி வெற்றிலையால்பந்தலிட்டார்
மூங்கில்பிளந்தார்கள் முச்சூடும்பந்தலிட்டார்
கரும்பாலேகால்நிறுத்தி அரும்பாலேபந்தலிட்டார்
பச்சோலைபந்தலது பாங்காயலங்கரித்தார்
வன்னிமரம்கமுகுமரம் வாசலெல்லாம்கட்டினார்கள்
சோலைபலமரமும் தெருவெல்லாம்நாட்டினார்கள்
வாழைமரங்களது வாசலெல்லாம்நாட்டினார்கள்

மாவிலைத்தோரணமு மகுடதோரணங்கட்டினார்கள்
எங்கெங்குஞ்சோலைகளு மெத்திசைதோரணமும்
கண்ணாடிசல்லிகட்டி கவரிமான்குச்சுவிட்டு
பஞ்சவர்ணக்கிளிகளைப் பந்தலிலேதூக்கிக்கட்டி
அன்னமுமயிலினமும் அழகும்வரக்கட்டினார்கள்
சன்னலிலேபனிநீருஞ் சாடினாரேஎத்திசையும்
நிலக்கோலமிட்டார்கள் நிலமெல்லாம்பூத்தெளித்தார்
அத்தர்புனுகுகளை அள்ளித்தெளித்தார்கள்
பட்டுரத்தினப்பாய்போட்டார் பந்தலுக்குள்ளாக
சாரத்தலையணையுஞ் சகலாத்துதிண்டுகளும்
அந்தச்சமயத்தில் அனந்தங்கோடிராஜாக்கள்
வருகிறதுரைகளென்றால் மட்டுமிதங்களில்லை
வாகனங்கள்விட்டிறங்கி வந்தார்துரைகளெல்லாம்
சந்தனவடிவழகர் தருமருக்கேதெண்டனிட்டார்
பந்தலில்வந்தமர்ந்தார் பாங்குள்ளராஜாக்கள்
அத்தண்டபெண்களு மனைவோருஞ்சிவிகைவிட்டு
அந்தப்புரத்திலே அனைவரும்போய்ச்சேர்ந்தார்கள்
சாஸ்திரப்பிராமணர்கள் சகலரும்வந்தமர்ந்தார்
செந்நெல்லைகீழ்பரப்பிச் சேஷைமணைபோட்டு
மணவரையைபோட்டார்மாப்பிள்ளையைக்குந்தவைத்தார்

அல்லியரசாணியை அருச்சுனன் மாலையிடுதல்.

மாப்பிள்ளையும்பெண்ணுமாக வந்தமர்ந்தார்பந்தலிலே
சேஷைமணைமேலே சீருடனேவந்தமர்ந்தார்
செந்நெல்லரிசிகொண்டு தெற்குநோக்கிப்பந்தலிட்டார்
நாவிதன்வந்துநின்றான் நல்லமணப்பந்தலிலே
பாலால்முகந்துடைத்தார் பத்துவிரல்நகம்வாங்கி
பணிசெய்வோன்சங்கூத பார்த்திபர்குடைகவிய
சங்கீதமேளங்கள் சபையிலமுழங்கிநிற்க
வெற்றிசங்கூதவே விருதுமேளமடிபடவே
சீர்கைகழித்தார்கள் சீராயிருவருக்கும்
மூன்னூறுபிராமணப்பெண் மூன்றுநலங்குசெய்தார்
எழுநூறுபிராமணப்பெண் ணேழுநலங்குசெய்தார்
மஞ்சனச்சாலையிலே மஞ்சணீராட்டிவைத்தார்
ஸ்நானங்களாட்டினார் தாமமுடியார்க்கும்
நீர்காட்டியுலாத்தினார் நிலங்கிள்ளிக்காப்புமிட்டார்

ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுகில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி
மாப்பிள்ளையும்பெண்ணையு மண்டபத்தில்கூட்டிவந்தார்
அலங்காரம்பண்ணலுற்று ரழகாயிருவரையும்
எழில்விஜயாராஜாவை எப்படியலங்கரிப்பார்
கோதிமுடிந்தார்கள் கீறிகொண்டைபோட்டார்கள்
ஒட்டுகொண்டைபோட்டார்க ளுருமாலைகட்டினார்கள்
மண்டித்தலைப்பாகை மன்னனுக்குத்தான்தரித்தார்
மூத்துக்கடுக்கனது முகபழகாய்காதிலிட்டு
முத்துக்கலிக்கத்துரும் முன்னெத்தியிலேசொருகி
லலாடசிங்கத்துருவும் நடுத்தலையிலேசொருகி
ஒட்டுக்கடுக்கனது உலகம்விலைபெறுமே
பச்சைக்கல்மிருகுதனைப் பதித்தார்களர்ச்சுனற்கு
வச்சிரக்கடுக்கனுடன் மாணிக்கக்கடுக்கனிட்டார்
கண்டசரஞ்களுடன் கனகவிதவாபரணம்
மோகனமாலையுடன் முத்துச்சரப்பளியும்
ஐந்தாம்பிறைபோலே அடுக்கடுக்காய்ப்பதக்கமும்
சிங்கமுகக்கடகம் சீரானபாசிபந்து
அரைஞாண்கயிறுகளு மைந்துவிரல்மோதிரமும்
நீட்டிவைக்குங்கால்களுக்கு நெரிஞ்ப்பூச்சல்லடமாம்
மண்டிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
பூவிழைத்த அங்கிதன்னை பூசியலங்கரித்து
பொன்னிழைத்தபட்டாடை போட்டார்கள்வல்லவாட்டு
சிவசிவாவென்றுசொல்லி திருநீற்றுக்காப்பணிந்து
சந்தனபொட்டுமிட்டார் தருமர்தம்பியருச்சுனற்கு
மல்லிகைமாலைதன்னை மார்பிலணிந்துகொண்டு
அர்ச்சுனரைசோடித்தா ரழகுபெறத்தோழரெல்லாம்
ஆறுயிரம்பெண்க ளனைவவோருஞ்சோடித்தார்
சம்பங்கியெண்ணெகொண்டு தடவிமயிராற்றி
சீவிமயிராற்றிச் சிமிள்போலக்கொண்டையிட்டு
ஒவ்வொருபூவுக் கொவ்வொருபொன்னிதழாம்
கட்டிமுடித்தகொண்டை காதின்கீழ்சோதிமின்ன
சுற்றிமுடித்தகொண்டை சூரியனைத்தோற்கடிக்கும்
ஆண்மையிலைப்பெண்மயிலை அண்டையில்சேர்த்தார்கள்

சந்திரன்சூரியனை சரியானபிறையணிந்து
பக்கத்திற்சேர்த்தார்கள் பல்லியாழ்வார்பிறையும்
பல்லிடுமெல்லிடு பக்கமயிர்கொலுசும்
அருகுகொப்புசொருகுவாணி அன்னகொப்புமணிந்தார்
பச்சைக்கல்முருகுகளும் பதித்தார்களல்லியற்கு
மூக்குத்தியட்டிகை மேற்கத்திரிபாவலியும்
நாகரீகக்காரையது நடுக்கழுத்தில்பூஷணமும்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுறமாம்பொற்சரிகை
முத்துவடங்களாம் மோகனமாலைகளாம்
வட்டசரப்பளியாம் மார்நிறைந்ததாழ்வடமாம்
ஐந்துவிரலுக்கு மழுத்தியமோதிரமும்
பத்துவிரலுக்கு பத்தமுத்துமோதிரமாம்
பாடகந்தண்டைகளாம் பருஞ்சிலம்புகாலாழி
காலாழிகல்லணையாம் பீலாழிபில்லணையாம்
அஷ்டாபரணமெல்லாம் அலங்காரம்பண்ணினுர்கள்
சோடித்தோமென்று சொல்லியேதெண்டனிட்டார்
அருச்சுனரையல்லியரை யழைத்தார்கள்பந்தலிலே
மணவரையின்மேலாக வந்தாரிருவருமாய்
அரசாணிநாட்டினுர் அம்மிகுழவிவைத்தார்
சாலுங்கரகமும் சட்டமுடன்வைத்தார்கள்
அம்மிவலவமாக அரசாணிமுன்பாக
குத்துவிளக்குகளும் குடவிளக்கும்முன்வைத்தார்
பார்த்திபனருச்சுனர்முன் பாலியெதிராக
ஓமப்புகையிலே யுடனிருந்துவேதஞ்சொல்ல
ஆருயிரம்பிராமணர்க ளங்கிருந்துவேதஞ்சொல்ல
காப்பரிசிதான்வழங்கிக் கங்கணந்தரித்தார்கள்
மாவுங்கழுநாலு மஞ்சளும்நெல்விதையும்
தாலியுங்கூறையும் தந்தாரேபாண்டியர்கள்
காலுங்கழுவியே கன்னிகைதானமிட்டார்
தந்தேனுனக்கீந்தேன் தாரைநீர்பிடியுமென்ருர்
மாவுங்கழுநாலும் மஞ்சளுடனரிசி
அத்தண்டபிராமணர்க ளஸ்தமிட்டமங்கிலியம்
பட்டணத்துராசாக்கள் மன்னவர்களஸ்தமிட்டார்
ஆருயிரம்பாண்டியர்க ளையன்மாரஸ்தமிட்டார்
மாயன்பெருமாளு மலைராமரஸ்தமிட்டார்

அரகராவென்றுசொல்லி யழுத்துகிறான்மங்கிலியம்
சிவசிவாவென்றுசொல்லி தேர்விஜையன்கட்டலுற்றான்
மா துதலைகுனிய மன்னன்தரிக்கலுற்றான்
பிரமமுடிமூன்றுமுடி போட்டானேபுண்ணியனும்
தேவதுந்துமிமுழங்கத் தேவர்பூமாரிபெய்தார்
சங்கீதமேளமது சபையில்முழங்கிவர
அடிபடுதேபேரிகை அந்தரந்தான திர
முப்பத்துமுக்கோடி முனிவர்கள்தேவரெல்லாம்
ஆகாயவீதியெல்லாம் அருச்சுனரைவாழ்த்தினரே
அருச்சுனற்குமல்லியற்கு மட்சதையெறிந்துவிட்டார்
வாழ்த்தியேபோனார்கள் வானவர்களவருந்தான்
அரசாணிசுத்தினார்கள் அம்மிமிதித்தார்கள்
அப்போதருச்சுனரு மல்லிப்பெருமாளும்
அருந்ததிபூசைபண்ணி யள்ளிப்பொடியிறைத்தார்
கணையாழிமாற்றினார் கட்டழகரிருவருமாய்
மாலைதனைமாற்றி வந்தமர்ந்தாரிருவருமாய்
அத்தண்டபேர்களு மள்ளியேசேஷையிட்டார்
வந்திருந்தராசாக்கள் வந்தவர்கள்மொய்யுமிட்டார்
காப்பரிசிதான்வாங்கிக் கங்கணமவிழ்த்தார்கள் [தார்
அனைவரையும்கொண்டம்பண்ணியரண்மனையினுட்புகுந்
பாலிகையாய்மேலே பாங்குடனேபோய்ச்சேர்ந்தார்
பாலும்பழங்களுண்டு பசியாறிவீற்றிருந்தார்
அந்தநற்பந்தலிலே யழகானபந்தலிலே
மொய்பாக்குவெற்றிலையு முடிமன்னராஜருக்கு
சந்தனபுட்பமுந் தாம்பூலம்வழங்கினரே
ஆயிரம்பிராமணற்கு மதிபரதேசிகட்கும்
பலதானங்கொடுத்தார்கள் பிராமணருள்ளவற்கு
மண்டலத்துராஜாக்கள் வந்திருந்ததுரைகளெல்லாம்
போஜனச்சாலையிலே போய்ப்புகுந்தாரெல்லோரும்
பந்திப்பாய்போட்டார்கள் பாங்குடனேவந்தமர்ந்தார்
வ. ழையிலைபோட்டு வரிசையுடன் நீர்தெளித்தார்
முப்பழமுஞ்சக்கரையும் முடிமன்னர்வைத்தார்கள்
புத்துருக்குநெய்வார்த்து போஜனமுண்ணுமென்றார்
அத்தளிகையுண்டபின்பு மறுதளிகைபின்னேவைத்தார்
மல்லிகைமுல்லைபோலே மாற்றுவெள்ளிநிறம்போலே

போஜனங்கள்பாலித்துப் பொற்கரியும்வைத்தார்கள்
பத்துவிதக்கரியும் பதினெட்டுப்பச்சடியும்
எட்டுவிதக்கரியும் இயலானபோஜனமும் [தார்
பொன்போல்பருப்புவைத்து புத்துருக்குநெய்சொரிந்
அத்தளிகையுண்டபின்பு மறுதளிகைவைத்தார்கள்
இளந்தோச்சல்தயிருமிட்டாரெலிமிச்சங்காயும்வைத்தார்
போஜனங்களுண்டபின்பு பொடியிட்டுக்கைதிமிறி
கைகால்சுத்திபண்ணிக் கனிவாயுங்கொப்பளித்தார்
சித்திரப்பந்தலிலே வந்தார்துரைகளெல்லாம்
சம்பந்திதாம்பூலந் தட்டோடேவழங்கினார்கள்
யானையலங்கரித்து அர்ச்சுனற்குக்கொண்டுவந்தார்
அத்தளங்கள்சோடித்து அல்லியற்குக்கொண்டுவந்தார்
யானைமேலர்ச்சுனனு மந்தளத்திலல்லியரும்
ஏறினாரிருவருமா யெடுத்தார்நெடுங்குடைகள்
சண்டாவைப்பறக்கவிட்டார் தனிபேரியடித்தார்கள்
யானையின்மேல்பேரிகையும் குதிரையின்மேல்டங்காவும்
ஒட்டகமேல்நகபத்தும் ஓசைமுழங்கவேதான்
சங்கீதமேளமது சபையில்முழங்கவேதான்
எக்காளைசின்ன மெழில்பெறவூதிவர
பாஞ்சசன்னியம்தேவதத்தம் பலவாத்தியமுழங்க
சாமரங்கள்சின்னமு மெக்காளையூதிவர
பகல்வத்திமத்தாப்பு பட்டப்பகல்போல்பிடித்தார்
புருசுவெடிபாணம் போதமுழங்குறதே
ஆடாதகூத்துகளும் அரும்பவனிநாடகமும்
கேளிக்கைதன்னுடனே கீர்த்திமன்னரர்ச்சுனரும்
நான்குதெருக்கோலம் நன்றாய்வருகிர்கள்
தண்ணீர்தெளிப்பார்கள் சாம்பிராணிபோடுவார்கள்
வாழைகமுகுகளும் வாசலெல்லாம்நடுவார்கள்
நிலக்கோலமிடுவார்கள் நிலமெல்லாம்பூத்தெளித்தார்
ஊர்கோலமாகியே யுத்தமர்வந்தார்கள்
ஆலமும்சுற்றினார்க ளர்ச்சுனற்குமல்லியற்கும்
திருஷ்டிகள்சுத்தியே தெருவிலேகொட்டுவார்கள்
வாகனங்கள்விட்டிறங்கி மண்டபத்தில்போய்புகுந்தார்
பாலும்பழங்களுண்டு பசியாறிவீற்றிருந்தார்
ஐந்நூறுநாள்சென்றபின்பு அத்தண்டராஜர்களும்

அவரவர்மாளிகைக்கு அனைவோரும்போவோமென்று
தர்மர்செல்வத்தினுல் தானந்தார்மாளிகைக்கு

பாண்டியரும் அல்லியரும் விடைபெற்று
மதுரைக்கு வந்தது.

ஆருயிரவ ரையன்மார்தங்கள்முதல்
முடிசிவிகையிலே மெல்லியரைவைத்துக்கொண்டு
காலாளுஞ்சேவகரும் கடுகப்பயணமானர்
தருமர்செல்வத்தினுல் சந்தோஷமாயெழுந்து
யானைகளுஞ்சேனைகளும் யாவர்களுமாக
மேளமுழங்கிவர முடிமன்னர்போனர்கள்
மதுராபுரிபட்டணத்தில் வந்தார்களெல்லவரும்
நான்குதெருக்கோலம்வந்துநாயகியும்போய்ச்சேர்ந்தாள்
மண்டபத்துக்குள்ளாக வந்தமர்ந்தாரெல்லோரும்
அப்போது அல்லியரு மாதர்க்குரித்தானுள்

அல்லியரசாணி பாலகனைப் பெற்றது.

ஓராந்தானமாதமது ஒருதிங்கட்கிழமையிலே
இரண்டாந்தான்மாதமது இரண்டுதிங்கள்தானுச்சு
மூன்ருந்தான்மாதமது முத்துகொங்கைமுகங்கறுத்து
நான்காந்தான்மாதமது நல்மசக்கையானுளே
ஐந்தாந்தான்மாதமது அடிவயிறுகனத்திடுமாம்
ஆருந்தானமாதத்திலே யங்கமெல்லாம்தங்கநிறம்
ஏழாந்தான்மாதத்திலே இசைந்தஸ்ரீமந்தஞ்செய்தார்
எட்டாந்தான்மாதத்திலே இளைப்புந்தவிப்பானுள்
ஒன்பதாமாதத்திலே உடம்பெல்லாம்நோகுதென்ருள்
பத்தாந்தான்மாதத்திலே பாலகனைப்பெற்றெடுத்தாள்
புலந்திரனென்றுசொல்லிப் பாண்டியர்கள்பெயருமிட்
மாணிக்கத்தொட்டிலிலே வளருகிருனிந்திரனும் [டார்
இந்தக்கதைதன்னை யின்பமாய்ப்பாவைகளும்
விந்தையாக்கதையை விரும்பியபூவைகளும்
அன்புமிகக்கொண்டு அல்லிக்கதைபடிக்க
துன்பமிகத்தீர்த்து துரிதமுடன்படிக்க
கோதைமார்தான்வாங்கிக் கொள்ளமனங்களிக்க
பேதைமார்தானேங்கிப் பெருங்களிப்பில்தான்குளிக்க
சொக்கநாயகர்படிக்க சுத்தமாயிக்கதையை
அக்கரையாகவே அனைவரும்படிப்பதற்கு

இக்கதையையாவர்களும் இசைந்துமேகேட்டவர்
நாடுநகர்பதியதனைச் சேர்வார்கள்வையகத்தில்
நன்மையாய்க்கேட்டவர்கள் அனைவோரும்தான்வாழி
அருமையாய்க்கேட்ட பெரியோர்கள்தான்வாழி
பாருலகிலிக்கதையைப் படிப்பவர்கள்தான்வாழி
சீருலகுமல்லிகதை சிந்திப்போர்தான்வாழி
தேவருமூவரும் யாவருந்தான்வாழி
ஆதிசிவனருளால் அனைவோருந்தான்வாழி
மாயனருளாலே மண்டலங்கள்தான்வாழி
காயக்களுள்ளவும் களிப்புடனே தான்வாழி
சொக்கரருளாலே சுகமாகத்தான்வாழி
இக்கட்டும்வாராமல் இசைந்துமிகவாழி
அங்கயற்கணம்மை யருளாலேதான்வாழி
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்தான்வாழி
தீங்கில்லாமாதர்கள் செழித்துமிகவாழி
ஊழியூழிதோறு முலகங்கள்தான்வாழி
வாழிவாழியென்று வரமளித்தாரீஸ்வரனர்

மங்களம்.

பூமிபரிபாலனுக்கும் புகழ்வடிவேலனுக்கும்
சேமமிகுசீலனுக்கும் செல்வனனுகூலனுக்கும்-ஜெய
வில்லாளர்பாண்டவர்க்கும் விண்ணவர்களாண்டவற்கும்
நல்லார்பெரியார்க்கு நாவலவரானவர்க்கும்-ஜெய
கற்புநிலைவிழியாட்கும் கனியனையமொழியாட்கும்
பொற்புறுசுழியாட்கும் பொருகயல்விழியாட்கும்-ஜெய
மன்னர்புகழ்நேசனுக்கும் வளங்கொள்மகாராஜனுக்கும்
பன்னரியநேசனுக்கும் பத்திவிசுதாசனுக்கும்-ஜெய
பாருலகிலல்லியற்கும் பன்னின்மொழிமெல்லியற்கும்
சீருலகிலல்லியற்கும் செருக்களவிஜயருக்கும்-ஜெய
பாண்டியர்கள்யாவருக்கும் பரிமளசீலருக்கும்
ஆண்டியெனுந்தேவருக்கும்அவரடியார்மூவருக்கும்-ஜெ

அல்லியரசாணி மாலை முற்றிற்று.

---

எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ், மதுரை:—1938

